18th March 1961]

**Sri A. VEDARATHNAM** : இந்த மாற்றி அமைக்கப்பட்ட குழுவின் உறுப்பினர்கள் யார், யார்? அவாகள் இதுவரை கூடி என்ன முடிவு செய்திருக்கிறார்கள்? முடிவுகளின் பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள். ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அந்தக் குழு இப்பொழுது தான் மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் அங்கத்தினர்கள் :

ஜஸ்டிஸ் எம் அனந்தநாராயணன் ;

ஸ்ரீ என். டி. சுந்தரவடிவேலு, டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன்

ஸ்ரீ குழந்தைவேலு, டைரக்டர் ஆப் இன்பர்மேஷன் அண்டு பப்ளிசிடி;

ஸ்ரீசங்கரவடிவேலு அண்ட் ஸ்ரீ பெரியசாமி தூரன்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : Even after the implementation of the suggestion, may I know from the Hon. Minister whether English will continue side by side?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : Not at the district level. But we have made interim arrangements with reference to officers who are not conversant with Tamil language. For them we have passed orders that during the interim period they could correspond in English.

**Sri A. VEDARATHNAM** : கோர்ட் தவிர மற்ற இலாகாக்களில் தமிழிலேயே நடவடிக்கைகள் நடத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டது ; இந்த அசெம்பிளியில் முற்றிலும் தமிழிலேயே நடவடிக்கைள் நடத்த முயற்சிகள் ஏதாவது உண்டா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதற்கான முயற்சிகளும் செய்யப்படுகின்றன ; அதைப்பற்றி பட்ஜெட் விவாதத்தின் போதும் சொன்னேன். முக்கியமான கேள்விகளுக்கு முதலிலேயே கொடுக்கும் பதிலையும் தமிழிலேயே கொடுக்க எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ அப்படிக் கொண்டுவர முயற்சிக்கப்படும்.

**Mr. SPEAKER** : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revisi on by the Member.**]

## II.—BUDGET FOR THE YEAR 1961-62.

### VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961-62.

### (1) DEMAND I—LAND REVENUE DEPARTMENT.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : On the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,01,50,200, under Demand I—Land Revenue Department."

**Mr. SPEAKER** : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,01,50,200 under Demand I—Land Revenue Department."

கனம் அண்ணாமலையின் 253-வது வெட்டுப் பிரேரணையை பிரேரிப்பார் என்று அறிகிறேன். அதைப் பிரேரேபிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்,.

**Sri S. M. ANNAMALAI** : Sir. I move the following cut motion :—

"That the allotment of Rs. 1,01,50,200 under Demand I—Land Revenue Department be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut-motion moved :

" That the allotment of Rs. 1,01,50,200 under Demand I—Land Revenue Department be reduced by Rs. 100."

(2) DEMAND II — STAMPS ADMINISTRATION.

THE HON. SRI M. A. MANICKAVELU : On the recommendation of the Governor, I move —

" That the Government be granted a sum not exceeding Rs. 27,38,300 under Demand II—Stamps Administration."

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 27,38,300 under Demand II—Stamps Administration."

கனம் கோதண்டராமன் அவர்களின் 271-வது வெட்டுப் பிரேரணையை அவர் பிரேரிப்பார் என்று அறிகிறேன்—அவர்களை அதைப் பிரேரேபிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : Sir. I move the following cut-motion :—

" That the allotment of Rs. 27,38,300 under Demand II—Stamps Administration be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut-motion moved—

" That the allotment of Rs. 27,38,300 under Demand II—Stamps Administration be reduced by Rs. 100."

(3) DEMAND XI—DISTRICT ADMINISTRATION AND MISCELLANEOUS.

THE HON. SRI M. A. MANICKAVELU : On the recommendation of the Governor, I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 4,82,62,200 under Demand XI—District Administration and Miscellaneous."

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 4,82,62,200 under Demand XI—District Administration and Miscellaneous."

கனம் சுப்பையா அவர்களின் 281-வது வெட்டுப் பிரேரணையை அவர் பிரேரேபிப்பார் என்று அறிகிறேன். அவர்களை அதைப் பிரேரேபிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

SRI V. SUBBIAH : Sir, I move the following Cut-motion—

" That the allotment of Rs. 4,82,62,200 under Demand XI—District Administration and Miscelloneous be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut-motion moved—

" That the allotment of Rs. 4,82,62,200 under Demand XI—District Administration and Miscelloneous be reduced by Rs 100."

18th March 1961]

(4) DEMAND XXXVI—COMPENSATION TO ZAMINDARS.

THE HON. SRI M. A. MANICKAVELU : On the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 84,00,000 under Demand XXXVI—Compensation to Zamindars."

MR. SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 84,00,000 under Demand XXXVI—Compensation to Zamindars."

கனம் அங்கத்தினர் ஏ. ஆர். மாரிமுத்து அவர்கள் இங்கே சபையில் இல்லையாதலால் அவருடைய கட் மோஷன் இல்லை.

So, there is no Cut-motion for this Demand.

(5) DEMAND IV—REGISTRATION DEPARTMENT.

THE HON. SRI V. RAMAIAH : On the recommendation of the Governor I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 45,69,800 under Demand IV—Registration Department."

MR. SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 45,69,800 under Demand IV—Registration Department."

I understand that the hon. Member Sri V. K. Kothandaraman is moving his Cut-motion No. 289 under this Demand.

The hon. Member Sri V. K. Kothandaraman may now move his Cut-motion.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move the following Cut-motion—

"That the allotment of Rs. 45,69,800 under Demand IV—Registration Department be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut-motion moved—

"That the allotment of Rs. 45,69,800 under Demand IV—Registration Department be reduced by Rs. 100."

Now Sri S. M. Annamalai will initiate the discussion.

SRI S. M. ANNAMALAI : சட்டமன்றத் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கக் கூடிய வெட்டுப் பிரேரணையை ஆதரித்தும், மற்ற சட்டமன்ற அங்கத்தினர்கள் கொடுத்திருக்கக்கூடிய வெட்டுப் பிரேரணைகளை ஆதரித்தும் இந்த மான்யத்தின் மீது எனது கருத்துக்களை சொல்ல முற்படுகிறேன். என்னுடைய முக்கியமான வெட்டுப் பிரேரணை, நிலச்சீர்திருத்தச்

சட்டம் இந்த மாநிலத்தில் சரிவர அமுல்படுத்தப்படவில்லை என்பது தான் என் குற்றச்சாட்டு. நியாய வாரச் சட்டம், பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் இவை போன்ற பல சட்டங்கள் இயற்றியிருந்தும்கூட அவை, மக்களுக்கு இன்னும் சரிவரப் புரியாமல் இருக்கிறது.

**Mr. SPEAKER:** இந்த லிஸ்டில் ரெவின்யு டிமாண்டிற்கு $3\frac{1}{2}$ மணி நேரமும், எலெக்ட்ரிசிடிக்கு $\frac{1}{2}$ மணி நேரமும் என்று போடப்பட்டிருக்கிறது. மொத்தமாக எடுத்துக்கொண்டு எல்லாவற்றிற்கும் சேர்ந்து, நாலு மணி நேரம் கொடுத்தால் போதாதா, கம்பைண்டாக எடுத்துக்கொள்ளலாம் என்று கேட்கிறார்கள். ஆட்சேபணை ஒன்றுமில்லையே, ஆக சேர்த்து எடுத்து கொள்ளலாம்.

**Sri S. M. ANNAMALAI:** இந்த சட்டங்கள் சரிவர நம் மாநிலத்தில் அமுல் நடத்தப்படவில்லை என்று நான் சர்க்காரை குற்றஞ்சாட்ட விரும்புகிறேன். மக்களுக்கு மட்டும் புரியவில்லை என்பதல்ல. அதிகாரிகளுக்குக் கூட இப்படிப்பட்ட சட்டங்கள் இருக்கிறதா இல்லையா என்பது கூட தெரியவில்லை. அதிகாரிகள், தாசில்தார், ஆர்.டி.ஓ. இவர்கள் இந்தச் சட்டங்களை நன்றாக படித்திருக்க வேண்டும். அவர்களுக்குக் கூட இப்படிப்பட்ட சட்டங்கள் அமுலில் இருக்கிறதா இல்லையா என்று தெரியாத ஒரு நிலையில் தான் இன்று இருக்கிறது. என்னுடைய மாவட்டத்தைப் பொறுத்த வரையில் நான் இரண்டு மூன்று வழக்குகள் நடத்தினேன். அப்படி நடத்துகிற போது தாசில்தாருக்கு அந்தச் சட்டத்தைப் பற்றியே தெரியவில்லை. பிறகு என்னிடமுள்ள புத்தகத்தைக் கொடுத்து நீங்கள் படியுங்கள் என்று சொல்லி அதற்கு மேல் நியாயவாரச் சட்டப்படி வழக்கைத் தொடர்ந்தேன். பின், அவர்கள் படித்துப் பார்த்து, அதன் விதிகளைக் கூட நானே கொடுத்தேன். அதையும் படித்துப் பார்த்துவிட்டு இரு வழக்கை நடத்தினார்கள். வேண்டுமானால் அமைச்சர் அவர்கள் என்னைத் தனியாகக் கூப்பிட்டுக் கேட்டால் யார் என்று சொல்கிறேன். ஆக, அதிகாரிகளுக்குக்கூட இத்தகை சட்டங்கள் அமுலில் இருக்கிறதா இல்லையா என்பது தெரியவில்லை. அதே போல், வார சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டத்தை இன்னும் போலீசாரால் புரிந்து கொள்ளமுடியவில்லை. ஒரு நிலச் சொந்தக்காரரிடத்தில் ஒருவர் வாரத்திற்கு பயிரிட்டுக்கொண்டிருந்தால், அவர் நியாயவாரச் சட்டப்படி 60—40 கேட்டால் நிலச் சொந்தக்காரர் அதைமறுத்து விட்டு, உடனே 447 செக்ஷன்படி போலீஸாரிடம் விண்ணப்பம் தந்து அதன் பேரில் போலீஸார் அந்த சாகுபடியாளர் மீது தக்க நடவடிக்கை எடுத்து 447 செக்ஷன் கீழ் வழக்குத் தொடரப்படுகிறது. ஆக, போலீஸ் அதிகாரிகளுக்கும் கூட இந்தச் சட்டம் அமுலில் இருக்கிறதா இல்லையா என்பது தெரியவில்லை. இதைத்தான் நான் இரண்டு மூன்று ஆண்டுகளாக கூறி வருகிறேன். வாரத்திற்கு பயிரிடுகிறவர்கள், யார் யார் எந்தெந்த நிலங்களைப் பயிரிட்டுக் கொண்டு இருக்கிறார்கள் என்ற விவரத்தை வாக்காளர் பட்டியல் தயாரிப்பது போன்று தயாரித்து அதன் மூலம் இன்னின்ன நிலங்களை இன்னின்ன ஆட்கள் பயிரிடுகிறார்கள் என்று தெரியும்படி தயாரித்தால் நன்றாகவும், உதவியாகவும் இருக்குமென்று நான் மூன்று ஆண்டுகளாக வற்புறுத்திக்கொண்டு வந்திருக்கிறேன். நியாயவாரச் சட்டப்படி வழக்கு தொடரப்படுமானால், வாரத்திற்கு பயிரிடுகிறவர்கள், அந்த நிலத்தில் பயிரிட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்று நிரூபிக்க போதிய சான்றுகள் கிடையாது. சட்டத்தில் இருக்கிறது. வாரத்திற்கு அல்லது குத்தகைக்கு பயிரிடக்கூடியவர்கள் மூன்று ஒப்பந்தங்கள் தயார் செய்து ஒன்று தாசில்தாரிடத்திலும், ஒன்று நிலச்சொந்தக்காரரிடத்திலும், மற்றொன்று வாரம் பயிரிடுகிறவரிடத்திலும் இருக்கவேண்டுமென்று சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதன்படி இந்த மாநிலத்தில் அது அமுல் நடத்தப்படுகிறதா என்றால் கிடையவே கிடையாது. அந்த அளவு, நியாய வாரச் சட்டம், பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம், வாரப்பயிரிடுவோர் பாதுகாப்புச்

சட்டம் இவைகள் அமுலில் இருக்கிறதா இல்லையா என்பதும் மக்கள் புரிந்து கொள்ளாத நிலையில் தான் இன்றைய நிலை இருக்கிறது. அதே போல் இந்த சட்டத்தை துஷ்பிரயோகம் செய்கிறார்கள். 60—40 தேவையென்று அறப்போராட்டம் நடத்தி, நியாயமான முறையில் வாரம் கேட்டாலும் போலீஸாரை மிராசுதார்களின் பாதுகாப்பிற்கு அனுப்பி எந்தளவிற்கு அடக்கி ஒடுக்கமுடியுமோ அந்தளவிற்கு வாரம் பயிரிடுகிறவர்களை அடக்கி ஒடுக்கி விடுகிறார்கள். சட்டம் என்பது மிராசுதார்களையும், சாகுபடியாளர் களையும் இரண்டு பேர்களுக்கும் நியாயமான முறையில் பாதுகாப்பு இருக்க வேண்டும் தவிர மிராசுதார்கள் பக்கம் சேர்ந்து கொண்டு நியாயமான கோரிக்கைகளை சாகுபடி செய்பவர்கள் கேட்கும்போது அவர்களை அடக்கி ஒடுக்குவது என்றால் அது சரியல்ல. தஞ்சை மாவட்டத்தில் வேண்டுமானால் இத்தகைய சட்டம் இருக்கிறது என்று அங்குள்ள மக்களுக்கு தெரிந்திருக்க லாமே தவிர பலயிடங்களிலும் இந்தச் சட்டம் இருக்கிறதா இல்லையா என்பது மக்களுக்கு தெரியாத நிலைதான் இருக்கிறது. ஆகவே, இதற்கு ஒரு விளம்பரம் தரவேண்டும். அதுமட்டுமல்ல, எல்லா அதிகாரிகளும் அவைகளைப் படித்து உணர்ந்துகொள்ளவேண்டும். அதுமட்டுமல்ல, இந்தச் சட்டம் உண்மையில் அமுலில் இருக்கிறது. ஆகவே வாரத் தகராறு ஏற்படு மானால் அந்த சமயத்தில் 447 செக்ஷன் கீழ் வழக்குகள் தொடரக்கூடாது என்று போலீஸ் அதிகாரிகளுக்கும் சர்க்கார் உத்தரவு இடவேண்டும். அடுத்தபடியாக, இரண்டு மூன்று ஆண்டுகளாக சொல்லி வருகிறேன், கையேர்வாரந்தார் மாட்டு வாரந்தார் சட்டத்தை எல்லா மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்கவேண்டுமென்று. கையேர்வாரந்தார் மற்ற மாவட்டங்களில் இல்லை என்று அமைச்சர் அவர்கள் சொல்லலாம். நான் சொல்வேன், மின்சாரம் எங்கு பார்த்தாலும் பரவி வருகிறது, அப்படி பரவி வருகிற காலத்தில் சொந்த சாகுபடி வைத்துக் கொண்டிருக்கக் கூடியவர்கள் சாகுபடி செய்யும்போது பல ஆட்களை நியமித்து, கையேர்வாரந்தார்களை நியமித்து 1/8 பாகம், 1/10 பாகம் என்று எப்படி திருச்சி மாவட்டத்தில் கொடுத்துக் கொண்டு வந்தார்களோ அதேபோன்று பலயிடங்களிலும் கொடுத்து வருகிறார்கள். அவர்களை எப்பொழுது வேண்டுமானாலும் நிலச் சொந்தக்காரர் நிலத்திலிருந்து வெளியேற்றலாம். ஆகவே, அதைத் தவிர்ப்பதற்கு, இந்த கையேர்வாரம்தார், மாட்டு வாரந்தார் சட்டத்தை எல்லா மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்கவேண்டுமென்று நான் மூன்று ஆண்டுகளாக சொல்லி வருகிறேன். இந்த கையேர்வாரந்தார் முறை திருச்சி மாவட்டத்தில் மட்டும்தான் இருப்பதாக சொல்லப்பட்டு வருகிறது. ஒரு தனி குழு நியமித்து அதன் மூலம் திருச்சி மாவட்டத்திலுள்ள கையேர் வாரந்தார் போன்று பல பேர்களுடன் பல மாவட்டங்களிலும் இருந்து கொண்டிருக்கிறார்களா என்று விசாரித்தால் அப்படி இருக்கிறார்கள் என்ற உண்மை தெரிய வரும். மின்சாரம் விஸ்தரித்துக் கொண்டு வரும் இந்தக் காலத்தில் பல மாவட்டங்களில் பல பண்ணையார்கள் கையேர்வரந் தார்களை அல்லது வேறு பெயரில் வைத்துக் கொண்டிருப்பதால் அப்படி யிருப்பவர்களுக்கு ஒருவித பாதுகாப்பும் இல்லாதிருப்பதால் அவர்களை எப்பொழுது வேண்டுமானாலும் உடனே வெளியேற்றி விடுகிறார்கள். ஆகவே மற்ற மாவட்டங்களில் கையேர்வாரந்தார் இல்லை என்று சொல்ல முடியாது. வேண்டுமானால் நான் நிரூபிக்கிறேன். ஆகவே சர்க்கார் ஒரு தனி குழு நியமித்து இப்படிப்பட்ட கையேர்வாரந்தார்கள் மற்ற மாவட்டங்களில் இருக்கிறார்களா இல்லையா என்று விசாரித்து அறிய வேண்டும். அதேபோல், புறம்போக்கு நிலங்களை ஜாரி செய்து கொடுப்பது, பட்டா வழங்குவது போன்ற விஷயங்களில் சர்க்கார் மிக தாமததாக நடந்து கொண்டு வருகிறது. அமைச்சர் அவர்கள் போளூர் தொகுதிக்கு வரு கிறார்கள், அவர்கள் தொகுதிக்கும் அடிக்கடி வருகிறார்கள். அப்போது, இதற்காக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்பெஷல் தாசில்தார்கள் என்ன செய்கிறார்கள், இந்த புறம்போக்கு நிலங்களை ஏழை மக்களுக்கு ஜாரி செய்து கொடுத்திருக்கிறார்களா என்பதை அலசிப் பார்க்க வேண்டும்.

ஒரேஒரு முறை கேள்விப்பட்டேன், சேத்துப்பட்டிற்கு செல்லும்போது நாலைந்து பேர்களை கூப்பிட்டு 'பட்டா வழங்கினால் என்ன' என்று அமைச்சர் அவர்கள் சொன்னதாக கேள்விப்பட்டேன். ஆக, இந்த ஸ்பெஷல் டெப்டி தாசில்தார் சரிவர வேலை செய்கிறார்களா என்று அடிக்கடி பரிசிலனை செய்யவேண்டும். போளூர் தொகுதிக்கு அல்லது மற்ற தொகுதிகளுக்கு செல்லும்போதும் அமைச்சர் அவர்கள் இதை கண்காணிக்கவேண்டும். பிற மாநிலங்களில் அமைச்சர்கள் நேரடியாகச் சென்று பட்டா வழங்கி, அதற்காக தனி விழா நடத்தி அப்பொழுது பட்டா வழங்குவது என்றிருப்பது பல மாநிலங்களில் அமைச்சர்களின் சுற்றுப்பிரயாணத்தில் பார்த்தேன். ஆனால் அமைச்சர் அவர்கள் வருகின்றபோது எவ்வளவு புறம்போக்கு நிலங்களுககுப் பட்டா கொடுக்கப்பட்டிருக்கிறது. அதுபோல் எவ்வளவு தரிசு நிலங்களுக்குப் பட்டா செய்து கொடுத்திருக்கிறார்கள் என்பதைக் கவனிப்பது மிகமிக முக்கியமானது. என் மூலமாகவே எத்தனையோ விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. ஏதாவது சில காரணங்களைக் காட்டி அந்த நிலங்கள் ஜாரி செய்து கொடுக்க முடியாதது என்று உத்தரவு பிறப்பித்துவிடுகிறார்கள். விண்ணப்பம் நூறு பேர்கள் போட்டிருந்தார்கள் என்றால் 99 பேர்களுடைய விண்ணப்பங்களைத் தள்ளிவிடுகிறார்கள். யாருக்குச் சற்றுச் செல்வாக்கு இருக்கிறதோ அவர்களுக்கு மட்டும் ஐந்து எக்கரா, பத்து எக்கரா என்று ஜாரி செய்துவிடுகிறார்களே தவிர நிலம் இல்லாதவர்களுக்கு உண்மையிலேயே நிலம் கொடுக்கிறது கிடையாது.

சர்க்கார் உத்தரவில் வேண்டுமானால் ஐந்து எக்கராவுக்குமேல் சொந்த நிலம் உடையவர்களுக்கு ஜாரி செய்யக் கூடாது என்று இருக்கலாம். ஆனால் இருபது எக்கராவுக்கு மேல் நிலம் உள்ளவர்கள் கூட மனைவியின் மீது விண்ணப்பம் போட்டு, தங்கள் செல்வாக்கினாலே ஐந்து எக்கரா நிலம், பத்து எக்கரா நிலம் என்று ஜாரி செய்து வாங்கிக்கொள்கிறார்கள். இதையும் கவனிக்கவேண்டும். உண்மையில் நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் வழங்கவேண்டுமென்றால் அதிகாரிகள் உஷாராக, துரிதமாகச் செயல்படவேண்டும். ஆகவே இன்னும் அதிகாரிகளைப் போட்டு இவ் விஷயத்தை துரிதப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதைப்போலவே உள்துறை அமைச்சர் அவர்கள் நிலச்சீர்திருத்தச் சட்டம் ஆகஸ்டு மாதத்தில் சட்டமாகிவிடும் என்று சொன்னார். அது ஆகஸ்டு மாதத்தில் சட்டமாகிவிடலாம். ஆனால் அமுலுக்கு வருமா ? அது சட்டமாகி, ஜனாதிபதியின் அங்கீகாரத்தையும் பெற்று 1962-க்குள் அமுலுக்கு வரும் என்று அமைச்சர் அவர்களால் சொல்ல முடியுமா ? சொல்லமுடியாது. வேண்டுமென்றால் இதைச் சட்டமாக்கி வைத்துவிட்டு ஏழைப் பாமர மக்களிடத்திலே சென்று, " உங்களுக்காக இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறோம். பாக்கி உள்ள நிலங்களையும் நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுக்கப்போகிறோம். ஆகவே எங்களுக்கு வோட்டுப் போடுங்கள் " என்று கேட்கலாம். அதைப் போலவே நிலச்சுவாந்தார்களிடத்திலே சென்று, " உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கக் கூடிய வகையில் பல ஷரத்துக்களை ஏற்படுத்தியிருக்கிறோம். உங்களுக்கு எந்தவிதமான பாதகமும் ஏற்படாது, இந்தச் சட்டத்தினால். ஆகவே எங்களுக்கு வோட்டுப் போடுங்கள் " என்று கேட்பதற்கும் இடம் உள்ள வகையில் சட்டத்தைக்கொண்டுவந்தோம். ஆனால் அது உடனடியாக அமுலுக்கு வராது என்கிற நிலைமையைத்தான் உண்டு பண்ணப்போகிறார்கள். உண்மையிலேயே பாமர மக்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்பது சர்க்காரின் நோக்கமாக இருந்தால் உடனடியாக ஆகஸ்டு மாதத்தில் நிலச்சீர்திருத்தச் சட்டத்தைக்கொண்டுவருவதோடு கூட அதற்கு ஜனாதிபதியின் அங்கீகாரம் இவ்வாண்டுக்குள்ளேயே வரும்படியாகச் செய்யவேண்டும். மீதி நிலங்களைப் பிரித்துத் தரவேண்டும். அதைவிட்டு நாங்கள்

18th March 1961] [Sri S. M. Annamalai]

ஆகஸ்டு மாதத்தில் கொண்டு வந்துவிடுவோம் என்று சொல்வதானது தேர்தலுக்கு இரண்டு கட்சி வோட்டுக்களையும் பெறுவதற்குச் சாதகமாகக் கொண்டுவரப்போகிறார்களே தவிர உண்மையில் சட்டம் அமுலுக்கு வராது.

அதைப்போலவே கிராம உத்தியோகஸ்தர்களுடைய பரம்பரை பாத்யதைப் பிரச்சினை. பலநாட்களாக இந்தச் சட்டமன்றத்தின் முன்பாகச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. அதை உடனடியாகப் பரிசீலனை செய்து சர்க்கார் ஒரு முடிவுக்கு வந்தாகவேண்டும். அவர்களை லோயர் டிவிஷன் க்ளார்க்கு மாதிரியாகச் செய்து சம்பளத்தைக் கொடுத்து பரம்பரை பாத்யதையை ரத்து செய்யவேண்டும். இல்லாவிட்டால் பரம்பரை பாத்யதை இருக்கவேண்டுமென்று சொன்னால் அவர்களுடைய சம்பளத்தை உடனடியாக யாக உயர்த்தித் தரவேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER :** கனம் அமைச்சர் அவர்கள் பதில் அளிப்பதற்கு எத்தனை நிமிஷங்கள் வேண்டும் ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** எனக்கு 45-நிமிஷங்கள் வேண்டும்.

**The Hon. Sri V. RAMAIAH :** எனக்குப் பத்து நிமுஷங்கள் போதும்.

**Mr. SPEAKER :** அப்போது எதிர்க்கட்சித் தலைவர்களுக்குப் பத்து பத்து நிமிஷம் கொடுக்கிறேன். அநேகம் அங்கத்தினர்களும் பேச வேண்டுமென்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். ஆகவே அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் பத்து நிமிஷங்கள் பேசவேண்டும். மணி அடித்தவுடன் முடித்துக்கொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

**Sri P. G. MANICKAM :** தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்ட மானியங்களை ஆதரித்துச் சில சங்கதிகளைச் சொல்ல விரும்புகிறேன். நமது நாடு சுதந்திரம் அடைந்த பிறகு ஜில்லா நிர்வாகம் எவ்வளவோ முன்னேற்றத்தில் போய்க்கொண்டிருக்கிறது. இப்போது இருக்கிற ஜில்லா அதிகாரிகள் மக்களோடு நெருங்கிப் பழகி, அவர்களுடைய குறைகளை நேரில் கண்டறிந்து வருகிறார்கள். ஆயினும் சில விஷயங்களைத் தெரிவிக்க வேண்டியவனாக இருக்கிறேன். மக்கள் ஆட்சி என்று வந்த பிற்பாடு மக்கள் ஆங்காங்கே தங்களுடைய குறைகளைத் தெரிவிக்க அதிக விருப்பம் கொண்டுள்ளார்கள். அதிகாரிகளுக்கும், எம்.எல் ஏ..க்களுக்கும், அமைச்சர்களுக்கும் அவ்வப்போது விண்ணப்பங்கள் கொடுத்துக்கொண்டே இருக்கிறார்கள். அமைச்சர்களிடத்தில் கொடுக்கப்படுகிற விண்ணப்பங்கள் சர்க்கார் மூலமாக ஜில்லா நிர்வாகிகளுக்கு அனுப்பப்படுகிறது. எம். எல். ஏ.-க்களிடத்தில் கொடுக்கப்படுகிற விண்ணப்பங்களையும் இவர்கள் ஜில்லா அதிகாரிகளுக்கு அனுப்பி வைக்கிறார்கள். மக்கள் ஜில்லா அதிகாரிகளுக்கும் நேரிடையாக விண்ணப்பங்கள் அனுப்புகிறார்கள். ஆனால் இவ்விண்ணப்பங்களின் பேரில் நடவடிக்கை எடுக்க வேண்டியவர்கள் ஜில்லா அதிகாரிகள். மக்கள் நேரிடையாக அனுப்பிய விண்ணப்பங்கள் பேரிலாயினும் சரி, சர்க்கார் மூலமாக அனுப்பப்பட்ட விண்ணப்பங்கள் பேரிலாயினும் சரி, எம்.எல்.ஏ.-க்கள் மூலமாக அனுப்பி வைக்கப்பட்ட விண்ணப்பங்கள் பேரிலாயினும் சரி அவர்கள் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ? முடிவு என்ன என்பது அவ்வப்போது அறிவிக்கப்படுமானால் உடனடியாக மக்களிடத்தில் அதைப்பற்றி உண்டு, இல்லை என்று சொல்லிவிட முடியும். ஆனால் இன்றையதினம் அவ்வாறு செய்யப்படுவதில்லை. அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்வதிலே கால தாமதம் ஆகிறது. இதனால் மக்களிடையே அதிருப்தி வளருகிறது.

அப்படிக்கின்றி சர்க்கார் உடனடியாக இதைக் கவனித்து நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று ஜில்லா நிர்வாகிகளுக்கு இன்ஸ்ட்ரெக்ஷன் கொடுத்தால் நல்லது. உடனடியாகத் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று உத்திரவிடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

(Sri S. Ranganatha Mudaliar in the Chair.)

இன்னொன்று. நிர்வாக அதிகாரிகளுக்குச் சில நன்மைகளைச் செய்து கொடுக்கவேண்டும். ஜில்லா நிர்வாகக் காரியாலயங்களுக்கு மின்சார விளக்குகள் போடுவது பற்றி ஏதோ தொகை ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அது மிகவும் அத்தியாவசியமானதாகும். சில சமயங்களில் இரவுக் காலங்களில் கூட அவர்கள் வேலை செய்யவேண்டியதாக இருக்கிறது. ஆகவே ஜில்லா நிர்வாக அலுவலகங்களுக்கு உடனடியாக மின்சார விளக்குகள் போட்டுத்தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். வசதி செய்து கொடுத்தால் தான் அவர்களால் சரிவர வேலை செய்ய முடியும். எவ்வளவு தொகை தேவை என்பதைக் கணக்கு எடுத்து, பூராவையும் ஒதுக்குவதில் அதிக கவனம் எடுத்துக்கொள்ளும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்கு விவசாய நிலங்களை ஒதுக்கும் விஷயத்தில் நிர்வாக அதிகாரிகள் அதிக அக்கரை காட்டவேண்டும். குறிப்பாக என் தொகுதியில் பவானியிலே—கோபிச்செட்டிபாளையத்திலே இந்த இரண்டு தாலுக்காக்களிலுமே அறுநூறு எழுநூறு ஏக்ரா நிலங்கள் இருக்கின்றன. இன்னும் அந்த நிலங்களுக்குப் பட்டா வழங்கப்படவில்லை. சில பட்டாக்கள் வழங்குவதற்காக ஒரு கூட்டம் நடத்தி வைத்தோம். இன்று அந்தக் காரியம் தாமதமாகப் போய்க்கொண்டிருக்கிறது. உடனடியாக இந்த நாநூறு, ஐந்நூறு ஏக்கர் நிலங்களையாவது நிலமில்லாத ஹரிஜனங்களுக்கு உடனடியாகப் பிரித்துக் கொடுக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டால் நலமாக இருக்கும். பிரித்துக் கொடுக்கப்படாத நிலங்களை உடனடியாகப் பிரித்துக்கொடுக்க தீவிர நடவடிக்கை எடுத்துக்கொள்வதோடு, பிரித்துக்கொடுக்கப்பட்ட நிலங்களுக்கும் பட்டா உடனடியாக வழங்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆகவே, அதை உடனடியாக அவர்கள் எல்லோருக்கும் பட்டா வழங்கும் படியாக கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, கிராம வெட்டியான்களை எடுத்துக்கொண்டால் இவர்களுடைய வேலைமுறையையும், சம்பளத்தையும் திருத்தி அமைக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் என்ன சம்பளம் பெறுகிறார்கள் என்பதையும் நாம் யோசித்துப்பார்க்கவேண்டும். அவர்கள் மிகவும் குறைந்த சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய சம்பளத்தை உயர்த்திக்கொடுக்கவேண்டும் என்று சொல்லும் போது அவர்களுடைய எண்ணிக்கை மிக அதிகமாக இருக்கின்றது என்று சர்க்கார் சொல்லுகிறது. அதோடு அவர்கள் பார்ட் டைம் வொர்க்கர் என்ற முறையில் இருப்பதாலும் அவர்களுடைய பிரச்னையை கவனிப்பது மிகவும் சிரமமாக இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இருந்தாலும் அவர்களுடைய வாழ்க்கையைப்பற்றி நாம் யோசிக்கவேண்டும். பார்ட்-டைம் வேலை என்று சொன்னாலும் கூட அவர்கள் காலை முதல் இரவு வரை வேலை செய்கிறார்கள். அவர்கள் வேலை செய்கின்ற இடத்தில் அதிகாரிகள் எந்த நேரத்தில் போனாலும் அவர்கள் அதிகாரிகளுக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்து கொடுக்கிறார்கள். ஆகவே அவர்களை பார்ட்-டைம் வொர்க்கர் என்று மட்டும் நாம் சொல்லிவிட முடியாது. இப்போதுள்ள குறைந்த சம்பளத்தில் அவர்களுடைய குடும்பங்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆகவே சர்க்கார்

18th March 1961] [Sri P. G. Manickam]

இவர்களுடைய சம்பளத்தை உயர்த்துவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். முக்கியமாக வெட்டியான், சிப்பந்திகள் வேலே பார்க்கின்றவர்கள் எல்லாம் 100-க்கு 90 பேர்கள் அரிஜனங்களாக இருந்து வருகிறார்கள். ஆகவே சர்க்கார் அவர்களுடைய சம்பளத்தை உயர்த்துவதில் மிகவும் சிரத்தை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோன்று பஞ்சாயத்து டெவலப்மெண்ட் அலவன்ஸ் என்ற முறையில் தற்போது கிராம கர்ணங்களுக்கும், மணியக்காரர்களுக்கும், சிப்பந்திகளுக்கும் சிறிது தொகை ஒதுக்க சர்க்கார் ஆலோசித்துக்கொண்டிருக்கிறார்கள். அதோடு சில இடங்களில் இந்தத் தொகை கொடுத்தும் வருகிறார்கள். இப்போது கொடுத்துக்கொண்டிருப்பதைப் பார்க்கும்போது, கர்ணங்களுக்கு 12 ரூபாய் முதல் 15 ரூபாய் வரை என்றும், மணியக்காரர்களுக்கு 5 ரூபாய் முதல் 7 ரூபாய் வரை என்றும், மற்றும் வெட்டியான் போன்ற சிப்பந்திகளுக்கு ரூபாய் 2 முதல் 3 வரை கொடுக்கிறார்கள். இந்த விதத்தில் அவர்களுக்குள்ள தராதரம் பிரிக்கப்படுகிறது. இதை பஞ்சாயத்து மான்யமாக கொடுத்து வருகிறார்கள் என்று தெரிகிறது. இதை சிறிதளவு மாற்றி இப்போது 2, 3 என்றிருப்பதை மாற்றி குறைந்தது 5 ரூபாய் அளவிலாவது உயர்த்திக் கொடுக்க சர்க்கார் யோசனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக, நீர்க்கசிவு ஏற்படுவதினால் பாதிக்கப்படும் அரிஜன வீடுகளின் ஜாபிதாக்கள்—கோயம்புத்தூர் ஜில்லாவில், லோயர் பவானி, மேட்டு வாய்க்கால் திட்டத்தைப் பொறுத்த அளவில்—சர்க்காரிடத்தில் இருக்கின்றன. அதன்படி பாதிக்கப்படும் அரிஜனங்களுக்கு நில ஆர்ஜிதம் கொடுப்பதில் துரிதமான நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Sri J. MATHA GOWDER :** கனம் சபைத் தலைவர் அவர்களே, கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த மான்யத்தின் மீது வெட்டுப் பிரேரணை கொண்டு வந்து பேசிய எதிர்க்கட்சி நண்பர் அவர்கள் பேசும் போது நிலச் சீர்திருத்தச் சட்டம் தேர்தலுக்கு முன்பு வருமா, வராதா என்று கேள்வியைப் போட்டுவிட்டு பின்னால் வராது என்றே நினைக்கிறேன் என்று அவர்களே பதிலும் சொல்லிவிட்டார். ஏன் அவர்களுக்கு இந்த சந்தேகம் ஏற்படுகிறது என்று தெரியவில்லை. தேர்தலுக்கு முன்பு கொண்டு வரமாட்டார்கள் என்று சொல்லுவதின் காரணம் இந்த விதமாக மக்களிடத்தில் ஆசையை காண்பித்து, காங்கிரஸ்காரர்கள் எங்கே தேர்தலில் வெற்றி பெற்று வந்து இங்கே உட்கார்ந்து விடப்போகிறார்களோ என்ற பயத்தினால் தான் இவ்விதம் எல்லாம் மக்களிடத்தில் சொல்லுவது போல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். நான் ஒரு விஷயத்தை மட்டும் சொல்ல விரும்புகிறேன். இந்த காங்கிரஸ் கட்சி வந்த பின்னால் தான் ராஜாக்களை ஒழித்து இருக்கிறோம். அப்போது யாரைக் கேட்டுவிட்டு ஒழித்தோம். மன்னர்களை ஒழித்திருக்கிறோம். இவர்களை ஒழித்திருக்கும் காங்கிரஸுக்கு சாதாரண நிலச்சுவான்தார்களை ஒழித்துக் கட்டுவதற்கா பயம் ஏற்படப் போகிறது ? இதைப் புரிந்து கொள்ளாமல் காங்கிரஸ் கட்சி பயப்படுகிறது என்று சொல்லிக்கொண்டிருப்பதைப் பார்த்தால், ஆச்சரியமாக இருக்கிறது. எதிர்க்கட்சியினர் ஒன்றை திட்டவட்டமாக நினைத்துக் கொள்ளவேண்டும். ஜமீன்தார்களை ஒழித்து அவர்களுக்கு நஷ்டஈடு கொடுப்பதற்காகத் தான் 80 லட்சம் ரூபாய் மான்யம் இதிலேயே கேட்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் மன்னர்கள், ராஜாக்கள், நிலச்சுவான்தார்கள் இவர்களை எல்லாம் போக்குவதற்கு படிப்படியாக நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கும்போது இவர்களை எல்லாம் ஒழிப்பதற்கு காங்கிரஸ் பயப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். உண்மையில் அது எங்களைப் பொறுத்தவரையில் எந்தவிதமான பயமும் இல்லை, உங்கள் மனதில் இருக்கின்ற குழப்பத்தை

தான் இது காட்டுகிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். நீங்கள் மட்டும் நிலச்சுவான்தார்களை ஆதரிப்பதில்லை என்று சொல்லிவிட முடியுமா என்பதையும் எதிர்க்கட்சியிலுள்ளவர்கள் யோசித்துப் பார்க்க வேண்டும். நிலச் சீர்திருத்தத்திற்கு எதிராக எதையெல்லாமோ சொல்லி உண்மைக்குப் புறம்பாக எதையெல்லாமோ எடுத்துக்கூறி நிலச்சுவான் தார்களை தேடிக்கொண்டு போகிறீர்கள் என்பதை எங்களால் எடுத்துக் காட்ட முடியும். இன்றைக்கு தனிமனிதனின் உரிமையைக் காப்பாற்ற வேண்டும் என்ற முறையில் நிலச்சுவான்தார்களைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லுகின்ற சுதந்திரா கட்சியுடன் தான் சேர்ந்துகொண்டு தேர்தலுக்கு வரப்போகிறோம் என்று நீங்கள் பேசுவதிலிருந்து நீங்கள் நிலச்சுவான்தார்களின் கையாட்கள் என்ற முறையில் இருந்து வருகிறீர்கள் என்பதை எல்லோரும் அறிவார்கள். மக்கள் அதற்குத் தகுந்த பதிலையும் தரப்போகிறார்கள். வரப்போகிற தேர்தலில் நீங்கள் என்ன வெல்லாம் சூழ்ச்சிச் செய்யப்போகிறீர்கள் என்பதை மக்கள் நன்றாகப் புரிந்துகொண்டிருக்கிறார்கள். நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வருவதற்கு காங்கிரஸ் தயங்கிக்கொண்டிருக்கிறது, செப்டெம்பர் மாதத்தில் கூட வருமா என்று தெரியவில்லை என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அவர்களுக்கு ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். காங்கிரஸ் கட்சி நடத்துகின்ற அரசாங்கத்தால் தான் இந்தச் சட்டம் இதே சட்டமன்றத்தில் கொண்டு வரப்பட்டது. இங்கு வந்த பின்னால்தான் அதை செலக்ட் கமிட்டியில் கொண்டு போய் நன்றாக பரிசீலனை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தோடு செலக்ட் கமிட்டிக்கு அனுப்பினோம். இப்போது அக் கமிட்டியார் பல ஜில்லாக்களுக்கும் போய் இதைப் பற்றி பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள். அந்தக் கமிட்டியில் திராவிட முன்னேற்றக் கழக சட்டசபை அங்கத்தினர்களும் இருக்கிறார்கள். வேண்டுமென்றால் செலக்ட் கமிட்டியில் இதை சீக்கிரமாகக் கொண்டு வரவேண்டும் என்று துரிதப் படுத்தியிருக்கலாமே. செலக்ட் கமிட்டியின ரிப்போர்ட் இந்தச் சபையில் சமர்ப்பிக்கப்பட்ட பின்னால் நடவடிக்கை எடுக்கவில்லையென்றால் அப்போது வேண்டுமென்றால் இந்த அரசாங்கம் பயப்படுகிறது என்று சொல்லலாம். அப்போது வேண்டுமென்றால் உங்கள் வாதம் நியாயமாக இருக்கும். உங்களுக்கு சர்க்காரை நடத்துவதே எப்படியென்று தெரியாத காரணத் தினால்தான் இப்படியெல்லாம் எதையெல்லாமோ மேடையில் பேசுவது போன்று இங்கும் பேசிக்கொண்டிருக்கிறார்கள், திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள். இது சரியல்ல என்பதை அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கிராம அதிகாரிகளைப் பற்றி திட்டவட்டமான ஒரு முடிவுக்கு அமைச்சர் அவர்கள் வருவது நல்லது என்று கருதுகின்றேன். அவர்கள் அதிக சம்பளம் வேண்டும் என்று கேட்கின்றார்கள். ஓரளவுக்கு இப்போது நாம் சம்பள உயர்வு கொடுத்திருக்கிறோம். அதற்காக நான் சந்தோஷப்படுகிறேன். இருந்தாலும் அவர்களையும் முழு நேர ஊழியர் களாக நாம் எடுத்துக்கொள்ள யோசிக்கிறோம். முழு நேர ஊழியர்களாக எடுத்துக்கொண்டு அவர்களையும் கிராமத்திற்கு கிராமம் இடமாற்றுவதாக இருந்தால், அவர்களே இந்த வேலையை விட்டு ராஜினாமா செய்து விட்டு போய்விடுவார்கள். அவர்கள் பகுதி நேர ஊழியர்கள் என்று எடுத்துக் கொண்டாலும் அவர்கள் முழு நேரமும் வேலை செய்து கொண்டிருக் கிறார்கள். ஆகவே அவர்கள் பார்ட்டைம் ஊழியர்கள் என்று மட்டும் கருதாமல் முழு நேர ஊழியர்கள் என்று நினைக்க வேண்டும். பஞ்சாயத் யூனியன் அல்லது பஞ்சாயத் போர்ட் இவற்றோடு சேர்த்து விட்டால் மிகவும் சுலபமாக இருக்கும். பஞ்சாயத் போர்டுகளில் இப்போது லாண்ட் டாக்ஸ், ஹௌஸ் டாக்ஸ் இவைகள் எல்லாம் வசூல் செய்து கொண்டிருக்கிறார்கள். மைனர் பஞ்சாயத்துக்கள் எல்லாம் 10 ஆயிரம் ரூபாய், 20 ஆயிரம் ரூபாய் என்று வீட்டு வரிகள் எல்லாம் வசூலித்து வருகிறார்கள். ஆகவே

18th March 1961] [Sri J. Matha Gowder]

இந்தக் கிராம அதிகாரிகள் வசூல் செய்யும் தொகையை இவர்கள் வசூல் செய்ய முடியாது என்று சொல்லிவிட முடியாது. பில் கலெக்டர் என்று பல ஆட்களைப் போட்டு விட்டால், இந்த கிராம அதிகாரிகளையே எடுத்து விடலாம். இவர்களுடைய தொல்லையே இனிமேல் இருக்காது. ஆகவே இவர்களுடைய பிரச்னை இந்த விதமாக தீர்ந்து விடுவது தான் நல்லது என்பது என் அபிப்பிராயம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

அதே நேரத்திலே நீலகிரி ஜில்லாவிலே நியமிக்கப்பட்டுள்ள தண்டல் காரர்கள், தலையாரிகள், கிராம போலீஸ்காரர்களைப்பற்றி நான் முன்னாலேயே கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்களிடத்தில் சொல்லியிருக்கிறேன். அந்த ஜில்லாவிலே உள்ளவர்களுக்கு ஒரு உல்லன் டிரஸ், அதாவது கம்பளித் துணிகள் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவர்களும் சரியென்று சொல்லி ஒரு வருஷம் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் 2, 3, வருஷங்களாக நிறுத்தப்பட்டிருக்கிறது. காரணம் என்ன வென்பது தெரியவில்லை. அந்த வேலையிலுள்ளவர்களுக்கு இந்த உடைகள் மிக அவசியம். ஆகவே அவர்களாகவே தங்களுக்கு வேண்டிய கம்பள ஆடைகளை தைத்துக் கொள்வதென்றால் அவர்கள் சம்பாதிக்கக்கூடிய 3 அல்லது 4 மாதத்து சம்பளத்தைப் போட்டால்தான் தைக்க முடியும். இது அவர்களால் முடியாத காரியம். ஒரு வருஷம் கொடுத்து, மற்ற வருஷங்களுக்கு கொடுக்காத காரணத்தை என்னால் அறியமுடியவில்லை. இதை கனம் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பரிசீலனை செய்து அவர்களுக்குத் தொடர்ந்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

அடுத்ததாக, நீலகிரி ஜில்லாவிலே இப்போது எப்படி வரி விதிக்கப்படு கின்றது என்பதைப் பார்த்தால், இந்த ஆண்டுக்கு என்று வரி வசூலித்து அதுபோல் 3, 4 வருஷங்களுக்கு வரி கொடுக்க வேண்டுமென்று மாற்றி இருக்கிறார்கள். முன்பு வேஸ்ட் லாண்ட் முறையிலே ஒரு ஏக்கருக்கு ஒரு ரூபாய் என்று போட்டிருந்தால், இப்போது இந்த வருஷத்திற்கு 3, 4 ரூபாய் என்று தேயிலை, காப்பி தோட்டத்திற்கு போடுவதுபோல் கணக்கிட்டுக்கொண்டு அதை மாற்றி வருகிறார்கள். அப்படி மாற்றி இருப்ப தோடு, அதை எந்த பசலிக்கு வசூலிக்க வேண்டுமோ அந்த பசலிக்கு மட்டும் வசூலித்தாலும் பரவாயில்லை. இந்த பசலிக்கு என்ன கொடுக்க வேண் டுமோ, அதேபோல் முன்புள்ள பசலிகளுக்கும் ஒரே வருஷத்தில் கொடுக்க வேண்டுமென்று இப்போது நோட்டீஸும் கொடுக்கப்பட்டுள்ளது. சர்க்கார் தாமதம் செய்துவிட்டு, இப்படி ஒரே வருஷத்தில் 4, 5, வருஷத் தீர்வையைக் கொடுக்க வேண்டுமென்று சொன்னால், அதுவும் அதிகரிக்கப் பட்டுள்ளத் தீர்வையைக் கொடுக்கவேண்டுமென்று சொன்னால், அது விவ சாயிகளுக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்குமென்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆகவே அப்படி வசூலிக்கப்படும் தொகையையாவது, 2, 3 வருஷத் தவணைகளாகக் கொடுத்து, அப்படி வரியை வசூலிப்பது நல்ல தென்று கனம் அமைச்சர் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள ஆசைப்படு கிறேன்.

சாதாரணமாக நாம் இப்போது கலெக்டர்களுக்கு அதிகமான வேலையை கொடுத்திருக்கிறோம். அதோடு நாம் இப்போது பல அபிவிருத்தித் திட்டங் களை எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே அவர்கள் அதிகமான வேலே யைச் செய்ய வேண்டியிருக்கிறது. அதை உணர்ந்து அமைச்சர்கள் ஒவ்வொ வொரு ஜில்லாவுக்கும் பல P.A.-க்களைப் போட்டிருக்கிறார்கள். இதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். அப்படிப் போடப்பட்டுள்ள பி.ஏ.க் களுக்கு, கலெக்டர்களுக்கு உள்ள அதிகாரங்களில் சிலவற்றைப் பிரித்துக் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்தால்தான் வேலைகள் மிகவும் வேகமாக நடக்க முடியும். அந்த வகையிலே P.A.-க்கள் வேலை செய்து விட்டபிறகு, அவர்கள் சரியான முடிவு செய்யவில்லை யென்றால்,

கலெக்டருக்கு அப்பீல் கொடுக்கலாம் என்று இருந்தால் மிகவும் நல்ல தாக இருக்குமென்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இரண்டாவ வதாக கலெக்டர்கள் இப்போது எல்லா இடங்களுக்கும், திறப்பு விழாக் களுக்கும் போக வேண்டியிருக்கிறது.

THE HON. SRI M. A. MANICKAVELU : டீ.ஆர்.ஓ. நீலகிரிக்கு மட்டும் இல்லை. அது சின்ன ஜில்லா என்று போடவில்லை. மற்ற ஜில்லாக்களுக்கு டீ.ஆர்.ஓ-க்கள் கலெக்டர் ஸ்டேடஸிலே ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : நீலகிரியைப் பொறுத்த வரையில் பி. ஏ.க்கள் தான் போடப்பட்டிருக்கிறார்கள். அதைத் தவிர ஆர்.டி.ஓக்கள் வேறு இருக்கிறார்கள். இதர மாவட்டத்தில் எப்படி ஆர்.டி.ஓக்கள் இருக்கிறார்களோ, அதைப்போல் இங்கு P.A.-க்களுக்கு அதி காரம் கொடுத்துவிட்டால், நிர்வாகம் துரிதமாக நடக்கும் என்பதை நான் கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதைத் தவிர, கலெக்டர்கள் தான் எல்லா இடங்களுக்கும் வந்து எல்லா திறப்பு விழாக்களிலும் கலந்து கொள்ள வேண்டுமென்று இப்போது இருக்கிற நிலைமையை மாற்றியமைக்க வேண்டும். அப்படி அவர்கள் போய் விடுவதால், ஹெட் குவாட்டர்சில் வேலை ஒழுங்காக நடை பெற முடிவதில்லை. இதை அவர்கள் டூர் புரோகிராமைப் பார்த்தாலே தெரிகிறது. மாதத்தில் 20, 25 நாட்களுக்கு டூர் போகக் கூடிய நிலைமை ஏற்படுவதால் அதுவும் பெரிய சிக்கலாகத்தான் இருக்கிறது. அதற்காக டூரே போக வேண்டாமென்று சொல்லவில்லை. அப்படிப் போகும்போது கலெக்டர் இல்லை என்று, P.A.-க்களால் வேலைகள் முடிக்கப்பட்டும் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, இந்த வேலைகளில் சில பகுதியை P.A.-க்களுக்குப் பிரித்துக் கொடுத்து, அவர்களுக்கு அதற்கு அதிகாரம் கொடுக்கவேண்டும். திறப்பு விழாக்களிலேயும் கலந்து கொள்ள வேண்டாமென்று சொல்ல வில்லை. எல்லா விழாக்களுக்கும் அவர்தான் வரவேண்டுமென்றுஇருக்க வேண்டியதில்லை. காரணம், அட்மினிஸ்ட்ரேஷன் செக்ஷனை பொறுத்த வரையில் கலெக்டர் பார்க்க வேண்டியிருப்பதால், இம்மாதிரி எல்லா ஊர்களுக்கும் போகவேண்டியதில்லை என்று கலெக்டர்களுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்ப வேண்டும். அதற்காக எந்த திறப்பு விழாக்களுக்கும் போகவேண்டாமென்று சொல்லவில்லை. நேரடியாகக் கேம்ப் போகும் போது சில திறப்பு விழாக்களில் கலந்து கொள்வதில் எவ்வித ஆட்சே பணையும் இல்லை. நேரடியாக ஹெட்குவார்ட்டர்ஸில் இருந்து அடிக்கடி போய்க்கொண்டு வருவதால், எதைக் கேட்டாலும் கலெக்டர் இல்லை என்று சொல்லப்படுகிறது. ஆகவே, P.A.-க்களுக்கு சில குறிப்பிட்ட அதிகாரங்களைக் கொடுக்க வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களுக்கு இந்தச் சந்தர்ப் பத்திலே சொல்லிக்கொண்டு, இந்த மானியத்தை ஆதரித்து, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

*SRI V. SUBBIAH : கனம் தற்காலிகச் சபா நாயகர் அவர்களே, இந்த ரெவின்யூ அண்ட் ஜில்லா 'நிர்வாகம், ஸ்டாம்பு அட்மினிஸ்ட்ரேஷன் பற்றிய மான்யம் பொதுவாக இன்றைய நிர்வாகத்திலே நல்ல வருவாயை தாக்கூடிய மிக முக்கியமான ஒரு இனம். எந்தக் காலத்திலும் இது அரசாங்கத்திற்கு முக்கியமாக இருந்து வந்திருக்கிறது. இப்போது எடுத்துக் கொண்டாலும் கூட, இத்துறை முக்கியமாக இருந்து வருகிறது. எப்போதும் நில வருவாயை வைத்துக்கொண்டுதான் அரசாங்கம் இயங்கிக்கொண்டே வந்திருக்கிறது. அதன் பேரில், அதன் அடிப்படையில் வரக்கூடிய மான்யத்தை நாம் மிகவும் முக்கியமாக கவனிக்க வேண்டும். இதிலே பல விஷயங்களை குறிப்பாகச் சொல்லலாம்.

18th March 1961] [Sri V. Subbiah]

ஜில்லா நிர்வாகத்தை எடுத்துக்கொண்டால், அங்கே கலெக்டர்கள் என்ன செய்கிறார்கள் ? தாலூக்காகளிலே என்னென்ன செய்து கொண்டு வருகிறார்கள் என்பதையெல்லாம் நாம் கொஞ்சம் நன்கு சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையிலே கிராமராந்திரங் களிலிருந்து அரசாங்கத்திற்கோ அல்லது தாலுகா ஆபீசுக்கோ நிர்வாக விஷயத்திலே என்ன தொடர்பு இருக்கிறது என்பதைப் பார்க்கவேண்டும். அவர்களால் அனுப்பப்படக்கூடிய மனுக்கள் எப்படி கவனிக்கப்படுகிறது என்பதை யெல்லாம் நாம் சிந்தனை செய்து பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்தால் இன்றைக்கு வேலை ஜாஸ்தியாகி இருக்கிறது. அதனால் அவர்களுக்கு கிராமத்திலே இருந்து போகக்கூடிய மனுக்களுக்கு பதில் கிடைக்காத ஒரு நிலைமைதான் இன்று இருக்கிறது. ஆனால் முன்பு ஒரு கலெக்டர் இருந்த இடத்தில், இன்று கலெக்டரைத் தவிர, அவருக்கு உதவியாக பல P.A.-க்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். எல்லா இலாக் காக்களுக்கும், தனித்தனி செக்ஷனுக்கு P.A.க்கள் இப்போது நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். இதைத் தவிர, இவர்களுக்குகீழ் 7, 8 ஆர்.டீ.ஓக்கள் என்று இருந்து கொண்டிருக்கிறார்கள் அதேவிதமாக தாலூக்காக்களிலே எடுத்துக்கொண்டால், தாசில்தார்கள் 9 பேர் இருக்கிறார்கள். அவர் களைத்தவிர, கிராமத்திற்கு அடிப்படையாக இருக்கக்கூடிய ஆர்.ஐ.-க்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்று பார்த்தால், அது டஜன் கணக்கில் இருக்கும்போல் தெரிகிறது. லாண்ட் ரெவின்யூவுக்கு ஒரு ஆர். ஐ. லோனுக்கு ஒரு ஆர்.ஐ. என்று ஒவ்வொரு துறைக்கும் ஒரு ஆர்.ஐ. நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் யார் யார் என்று புரிந்து கொள்ளக்கூடமுடியாமல் இருக்கிறது. ஆனால் எவ்வளவு வேலை நட கின்றது என்று பார்த்தால், கிராமங்களிலுள்ள விவசாயிகளுக்கு தேவை யானவற்றைக் குறித்தோ அல்லது கிராமத்திலுள்ள குறைகளைப் பற்றியோ எழுதி உதவ வேண்டுமென்று கேட்டிருந்தால், அதற்கு பதில் கொடுப்பதற்கு எத்தனை நாள், என், வருஷக்கணக்கில்கூட ஆகிறது என்று சொன்னால் கூட ஆச்சரியப்படுவதற்கு இல்லை. இந்த பயங்கரமான நிலைதான் இன்றைக்கு ஏற்பட்டு இருக்கிறது. ஆகவே இந்தமாதிரிய் நிர்வாகம் போய்க் கொண்டிருந்தால், அது எங்கு கொண்டுபோய் விடுமென்பதை கனம் அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும்.

அடுத்து, இந்த நிலத் தீர்வையை வசூலிப்பது பற்றி பார்க்கவேண்டும். அந்த முறையிலே ஜமீன் பகுதிகளிலும், இனம்தார்களுடைய பகுதிகளிலும் எப்படி வரி வசூலிக்கப்படுகிறது என்று பார்த்தால், அங்கு நடக்கக் கூடிய கெடுபிடி இருக்கிறதே அதைச் சகிக்கவே முடியாது. அங்கெல்லாம் பழைய பாக்கியை கொடுக்க வேண்டுமென்று இப்போது வற்புறுத்தப்படு கிறது. ஜமீன் பகுதிகளிலும், இனம் பகுதிகளிலும் முன்பு சிறிது வசூலிக் கப்பட்டு, பின்னால் நின்று விட்டது. அப்படி விட்டுப்போன பழைய பாக்கி களை கட்டிவிட்டும்கூட, இப்போது அதற்கு வட்டி பாக்கியை கட்டவேண்டு மென்று கேட்கப்படுகிறது. வசூலித்து விட்டும், இப்போது அதற்குவட்டிப் பாக்கியை கொடுக்க வேண்டுமென்று கேட்கப்படுகிறது. அப்படி வசூலிப்பதற் கென்று டிமாண்ட் நோட்டீஸ் கொடுக்கப்பட்டு, அப்படி கொடுக்கா விட்டால் போலீசைக்கொண்டு வைத்து, வசூலிக்கப்படுகிறது. இவ்வாறு பல இடங்களில் வசூலிக்கப்பட்டு வருகிறது. இதையும் கவனிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

அப்படி வசூலிக்கக்கூடியதையாவது விவசாயிகளுக்கு வருமானம் வரக் கூடிய காலத்தில் சென்று வசூலித்தால் நல்லது. அப்படி வசூலிக் காமல், அவர்கள் தங்களிடமுள்ள நகைகளையெல்லாம் அடகு வைத்து விட்டு அந்த அடகு வைத்த பணத்தை வைத்துக்கொண்டு பயிர் தொழிலிலே ஈடுபட்டுக் கொண்டிருக்கிற சமயத்திலே, வெள்ளாமையிலே ஈடுபட்டுக் கொண்டிருக்கிற காலத்திலே, தீவிரத் தீர்வை என்று கூறி

பழைய பாக்கியென்றும், அந்தப்பழைய பாக்கிக்கு இவ்வளவு வட்டி என்றும், அப்படிக் கேட்கக் கூடியதையும் போலீசை வைத்துக் கொண்டு மிரட்டுவதும். அப்படிக் கொடுக்கத் தவறினால், அவர்களுடைய மாடுகளைப் பிடித்துக் கொண்டு போவதுமான நிலையையும் இருந்தால், அவர்கள் எப்படி நல்ல முறையிலே விவசாயம் செய்ய முடியும்? விவசாயத்திற்கு மாடுகள் அவர்களுக்கு மிகவும் முக்கியம். இந்த மாதிரி பல நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

லோன்களை வசூலிப்பதிலும் பல கஷ்டங்கள் ஏற்படுத்தப்படுகிறது. மாடு வாங்குவதற்கு என்று 500 ரூபாய் லோன் கொடுக்கப்படுகிறது. அப்படிக் கொடுக்கப்பட்ட லோன் வசூலிக்கப்பட்டு, இன்னும் பாக்கி 1 ரூபாய் 75 ந.பை. தர வேண்டும் என்பதற்காக போலீசை வைத்து அந்தப்பணம் வசூலிக்கப்படுகிறது. இப்படிக் கடன் கொடுத்து விட்டு இந்தச் சிறிய தொகையை வசூலிப்பதில் இவ்வளவு கஷ்டப்படுத்த வேண்டுமா என்று நான் கேட்க விரும்புகிறேன். இந்த சிறிய தொகையை கொடுக்க முடியாத நிலைமையிலா அவன் இருப்பான். இந்தமாதிரி இன்னும் பல சிக்கல்கள் இருக்கின்றன.

பட்டாக்கள் செட்டில்மெண்டான பிறகு அதில் பல சிக்கல்கள் ஏற்படுத்தப்படுகிறது. ஜமீன்தாரி பிரதேசங்களிலும், இனும் பிரதேசங்களிலும் நிலத்தை ரிசெட்டில்மெண்ட் செய்வதிலே, கோர்ட்டுக்கு போகக்கூடிய நிலைமைதான் இன்று ஏற்பட்டிருக்கிறது. எங்கு பார்த்தாலும், 50 செண்ட் நிலத்தைப் புறம்போக்கிலே தள்ளிவிட்டார்கள், இந்த நிலத்தை இங்கே குறைத்து விட்டார்கள். அந்த நிலத்தை அங்கே கூட்டி விட்டார்கள் என்ற ஒரு நிலைமைதான் இன்றிருக்கிறது. இதனால் இன்று கோர்ட்டுக்கு போவதை பார்க்கின்றோம்.

(ஸ்ரீ ரெங்கநாத முதலியார் தலைமை வகித்தார்.)

**1947**-வது ஆண்டு ஜமீன்தாரி ஆக்ட்டுக்கு முன்னால் இருந்து உழுது கொண்டு பரம்பரையாக 70, 80 வருஷங்களாக பட்டா போட்டு வைத்துக் கொண்டிருந்தாலும் கூட, அவர்கள் பேரில் கிரயங்கள் இருந்தாலும்கூட, ஜமீன் அபாலிஷன் ஆக்டுக்கு பிறகு, அந்த சட்டத்திற்கு மாறுபட்டது என்று சொல்லி நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். விவசாயத்தைவிட்டுவிட்டு கோர்ட்டுகளுக்கு ஓட வேண்டிய நிலையில் விவசாயிகள் இருக்கிறார்கள். ஜமீன்தார் நிலமாக இருந்த பொழுது "அன்சர் வேய்டு" லாண்டாக இருந்தது. சர்வே இல்லாமல் நிலம் வைத்துக் கொண்டிருந்த பல சிறிய ஜமீன்தார்கள் இருந்தார்கள். ஒரு எக்கரில் 100 செண்டுக்கு 90 செண்டுதான் அவர்கள் அனுபோகத்தில் இருக்கும். அதே மாதிரி இன்னொரு இடத்தில் 100 செண்டுக்கு 110 செண்டு அனுபோகத்தில் இருக்கும். இந்தத் துறையிலே 10 செண்டு கூடுதலாக வைத்திருந்தால் அது புறம் போக்கு நிலம் என்று சொல்லி அதை விட்டுவிடவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அந்தப் பகுதியிலே 100 செண்டுக்கு 90 செண்டுதான் இருக்கிறது என்று விவசாயிகள் கேட்கும் பொழுது, அதற்கு நாங்கள் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லி விடுகிறார்கள். 10 செண்டு நிலத்தை விட்டுத்தான் ஆக வேண்டும் என்ற ஒரு நிலை எல்லா இடங்களிலும் இருந்து கொண்டிருக்குகிறது. இதற்காக எல்லாம் கோர்ட்டுகளுக்கு போக வேண்டியிருக்கிறது. அவர்களே அனுபவித்துக் கொண்டிருந்த நிலமாக இருந்தாலும்கூட செட்டில் மெண்டு சர்வேயர்கள் பல தகராறுகளை உண்டாக்கி அதனால் லஞ்சப் பழக்கம்கூட ஜாஸ்தியாகி இருக்கிறது. கிராமத்திலுள்ள விவசாயிகள் கோர்ட்டுகளுக்கு நடக்கக்கூடிய அளவிலே எல்லா செட்டில் மெண்டுகளும் இருந்துகொண்டிருக்கிறது. பாட்டம் மிக கடுமையாக இருக்கிறது. செட்டில்மெண்டு நடந்து கொண்டிருக்கும் ஜமின் பிரதேசத்தில் போய்பார்த்தால் அந்தக் கஷ்டம்

தெரியவரும். ஜமீன்தார் காலத்தில் ஒரு ரூபாயாக இருந்த தீர்வை இப்பொழுது அந்த நிலங்களை ரயத்வாரி நிலமாக செய்தபிறகு இன்றைக்கு ரூபாய் 2 ஆக இருக்கிறது. எட்டையபுரம் போன்ற இடங்களில் விவசாயிகள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். விவசாயிகள் ஜமீன்தார்கள் இருக்கும்பொழுது எவ்வளவு தீர்வை கொடுத்தார்கள், அரசாங்கம் எடுத்துக் கொண்ட பிற்பாடு எவ்வளவு கொடுக்கிறார்கள் என்பதை விசாரித்துப் பார்க்க வேண்டும். அவர்கள் இப்பொழுது எவ்வளவு கூடுதலாகக் கொடுக்கிறார்கள், எவ்வளவு கஷ்ட நஷ்டத்திற்கு ஆளாகியிருக்கிறார்கள் என்பது தெரியவரும். இந்த கஷ்டங்களை ரெவின்யூ இலாகா உடனடியாக நிவர்த்திக்க வேண்டும்.

அடுத்தபடியாக, ஸ்டாம்பு ஆக்டை எடுத்துக் கொள்வோமானால், இன்றைக்கு ஸ்டாம்புக் கட்டணம் ரூ, 100-க்கு ரூ. 7ஆக இருக்கிறது. ஆனால் நிலத்தையோ, வீட்டையோ கிரயத்திற்கு வாங்கக் கூடியவர்கள், மதிப்பைக் குறைத்து, ரூ. 5,000 மதிப்பு இருந்தால் அதை ரூ. 3,000 ஆகப் போட்டு பத்திரம் எழுதுகிறார்கள். இதனால் ஸ்டாம்பு ரூ. 7 என்று இருப்பது ரூ. 5 ஆக குறைத்து விட்டால் நமக்கு லாபகரமாக இருக்காதா என்பதை யோசிக்க வேண்டும். ரிஜிஸ்டிரேஷன் பீஸை குறைத்தால் அரசாங்கத்திற்கு வருமானம் குறைந்துவிடும் என்று சொல்ல முடியாது. இன்றைக்கு எல்லா இடங்களிலும் வெகு சகஜமாக அம்மாதிரி மதிப்பைக் குறைத்து பத்திரம் எழுதிக் கொள்கிறார்கள். ஆகவே, நாம் உண்மையிலேயே ரூ. 7 என்று இருப்பதை ரூ. 5 ஆக குறைத்தால் நமக்கு வருமானம் ஜாஸ்தியாகுமே தவிர குறையாது. மக்களிடையே உள்ள ஏமாற்றும் எண்ணத்தை போக்கி விடக்கூடிய நிலைமையும் ஏற்படும்.

நிர்வாகத்திலுள்ள வில்லேஜ் முன்சீப்புகளும், கர்ணம் ஆகியோர்களும் நிரந்தரமாக முழு நேர ஊழியர்களாக ஆக்கப்படவேண்டும். இது விஷயமாக பரம்பரை பாத்தியதையை எடுத்துவிட வேண்டும். இதனால் கிராமங்களில் அநேக சச்சரவுகள் ஏற்படுகின்றன. பஞ்சாயத்து கவுன்சில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மைனர் பஞ்சாயத்துக்கள் ஆகிய இடங்களில் அவர்கள் செகரடரியாக இயங்கக்கூடிய நிலை இருக்கிறது. ஒரு தப்பு அபிப்பிராயம் நிலவும் காரணமாக இதைப்பற்றி எங்கும் கூச்சலாக இருக்கிறது. புதியதாக ஒன்றும் சிருஷ்டி பண்ணவேண்டியதில்லை. இயங்கிக் கொண்டு இருக்கிற இடத்தைப்பார்த்து, நல்ல முறையில் இயங்குவதற்கு வழிவகைகளை யெல்லாம் நாம் செய்யவேண்டும்.

* **Sri R. SRINIVASA IYER :** கனம் தற்காலிக சபாநாயகர் அவர்களே இப்பொழுது சபை முன்பு இருக்கும் மானயக் கோரிக்கைகளை ஆதரிக்கும்பொழுது சில விஷயங்களை குறிப்பிட விரும்புகிறேன். ஜில்லா அட்மினிஸ்ட்ரேஷன் சம்பந்தப்பட்டவரையில் ஜில்லா கலெக்டர்களுக்கு உதவியாக இருக்கும் பொருட்டு, ஜில்லா ரெவின்யூ ஆதிகாரிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அது வரவேற்கத்தக்கது. அதனால் ஜில்லா கலெக்டர்களுக்கு வேலை குறைய வில்லை. சுற்றுப் பிரயாணம் குறையவில்லை. "பைல்களைப்" பார்த்து உடனடியாக சீக்கிரம் உத்தரவு போடவும் முடியவில்லை. முக்கியமான இடங்களை அடிக்கடி பார்க்கவும் முடியவில்லை. தஞ்சை ஜில்லாவை எடுத்துக்கொண்டால், ஜில்லாக் கலெக்டருக்கு ஏற்கனவே இருந்த வேலைக்கு இப்பொழுது ஒன்றும் குறைவாக இருப்பதாகத் தெரியவில்லை. ஜில்லா ரெவின்யூ அதிகாரிகளுக்கு சில அதிகாரங்களை பிரித்துக் கொடுத்திருக்கிறார்களே தவிர, அவர்கள் "பைலை" பார்ப்பது, முக்கியமான சில உத்திரவுகளைப் போடுவது, போன்ற ஆபீஸில் வேலை செய்யக்கூடிய நிலையில்தான் இருக்கிறார்கள். ஜில்லா கலெக்டர்களுக்கு பஞ்சாயத்து நிர்வாகம், கம்யூனிடி டெவலப்மெண்டு நிர்வாகம், பிளாக் நிர்வாகம், பஞ்சாயத்து யூனியனின் கவுன்சில் நிர்வாகம், இது தவிர முககியமாக தண்ணீர், நீர்பாசனம், தீர்வை

வஜா செய்வது போன்ற எல்லா விஷயங்களையும் அவர்கள் கவனிக்க வேண்டியதாயிருக்கிறது. இம்மாதிரி அவர்களுக்கு வேலை குறையாமல் இருக்குமானல், டெவலப்மெண்டு சம்பந்தமான வேலைகள் கொஞ்சம் பிற்போக்காக நடக்கவேண்டியிருக்கிறது. என்னுடைய ஜில்லா தஞ்சாவூர் ஜில்லா ரொம்பவும் பெரிய ஜில்லாவானதினல், ஜில்லா கலெக்டருக்கு உள்ள அதிகாரத்திற்கு எந்தவிதமான குந்தகமும் இல்லாமல், ரெவின்யூ அதிகாரிகளுக்கு ஜில்லா கலெக்டர்களுடைய சில அதிகாரங்களையும் கீழ்த் தஞ்சை சம்பந்தப்பட்டவரையிலாவது பிரித்துக் கொடுத்தால் நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கிராம உத்தியாகஸ்தர்களுக்கு சம்பளம் ஜாஸ்தியாகச் செய்து கொடுக்கப் பட்டிருக்கிறது. அது வரவேற்கத்தக்கது. வரவர அவர்களுடைய வேலை ரொம்பவும் ஜாஸ்தியாகப் போய்க்கொண்டிருக்கிறது. பஞ்சாயத்துக் களுக்கு கர்ணம் செகரடரியாக இருக்க வேண்டும். அது போல கிராம முன்சீப் பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் ரெவின்யூ வசூல் செய்து கொடுக்கவேண்டும். அவர்களுக்கு இப்பொழுது கொஞ்சம் ஊதியம் அதிகமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனல், கனம் அங்கத்தினர் மாதா கௌடர் அவர்கள் சொல்லியதுபோல் அவர்கள் தற்காலிக உத்தியோகஸ்தர்களா, அல்லது நிரந்தர உத்தியோகஸ்தர்களா என்ற விஷயத்தில் அவர்களுக்கு விளக்கம் இல்லாமலே இருக்கிறது. இப்பொழுது அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிற ஊதியம் போதுமானதாக இல்லை என்பதைத்தான் குறிப்பிட வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு ஜாஸ்தியாக எழுத்து வேலை, கணக்கு வேலை, வசூல் வேலை, சுற்றுகிற வேலை இப்படியெல்லாம் இருக்கும்பொழுது, அவர்கள் அத்தனை வேலை களையும் எப்படிச் செய்ய முடியும் என்பதை கொஞ்சம் ஆலோசிக்க வேண்டும்.

ஏற்கனவே புயல் அடித்த காலத்தில் தஞ்சை ஜில்லாவிலே **1952**-லும், **1955**-லும் ஏராளமாக கடன்கள் கொடுக்கப்பட்டன. அதிலே சில கடன்கள் சரியான முறையில் கொடுக்கப்படவில்லை என்பது இப்பொழுது தெரிய வருகிறது. பட்டா இல்லாதவர்களுக்கு, நிலம் இல்லாதவர்களுக்கு, சர்வே நம்பர்கள் தவறுதலாகப் போட்டு இப்படியெல்லாம் பலவிதமாக சில கடன்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இனும் அஸெஸ்மெண்டு ஆக்ட் புதிய தாக வந்த பிறகு **5**, **6** வருஷங்களுக்கு சேர்ந்தார்போல் உள்ள தொகையை ஒருமுகமாக வசூப்பதினல் ஜனங்களுக்கு ரொம்பவும் கஷ்டம் ஏற்படுகிறது. இம்மாதிரி நிலையில் கனம் அங்கத்தினர் சுப்பைய்யா அவர் கள் சொன்னது போல் பழைய வசூல் செய்வதோடு, வட்டி பாக்கியை சில வருஷங்களுக்குச் சேர்த்து வசூல் செய்கிறார்கள். அதற்காக ஜப்தி செய்து மக்களை நிர்ப்பந்தப்படுத்துகிறார்கள். பழைய பாக்கியை விகிதாசாரமாக வருஷம் ஒன்றுக்கு இவ்வளவு தொகை என்று வருஷா வருஷம் வசூலித்துக் கொண்டால் கொஞ்சம் சௌகரியமாக இருக்கும்.

இதேநேரத்தில் இன்னொரு விஷயத்தைப் பற்றியும் குறிப்பிட விரும்பு கிறேன். அதாவது, கணக்குகள் சில தாலூகா ஆபீஸ்களில் சரிவர வைக்கப்படவில்லை. முக்கியமாக பட்டுக்கோட்டை, ஒரத்த நாடு ஆகிய தாலூ காகளில் கணக்குகள் சரியாக இல்லை. ஒரு நபர் முன்பே பணம் செலுத்தி அதற்கான ரசீதுகளையும் வைத்திருந்தும்கூட, பாக்கி இருக் கிறது என்று சொல்லி அவர் சொத்துக்களை ஜப்திசெய்வதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. பணம் கட்டியதற்கான ரசீதைக் காண் பித்தால்கூட "முதலில் டிமாண்டுபடி பணத்தை கட்டிவிட்டு பிறகு ரசீதைத் தாக்கல் செய்யுங்கள்" என்று அதிகாரிகள் சொல்லுகிறார்களாம். இந்த மாதிரி ரெவின்யூ கணக்குகள் சம்பந்தமாக பட்டுக் கோட்டை ஒரத்தாடு,பேராவூரணி தாலூக்காகளில் அவசியமாகக் கவனிக்க வேண்டி இருக்கிறது. மற்ற தாலூகாகளிலும் இருக்கலாம். எங்கள் தாலூகாவில்

இருக்கக் கூடிய இந்தப் பிரச்னையைப் பற்றி ரொம்பவும் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சில கிராம முன்சீப்கள் பணத்தை கையாடல் செய்துவிட்ட பிறகு அவர்கள் வசூல் செய்த தொகையை மறுபடியும் பட்ட தாரர்களிடம் கேட்கும் பொழுது, கிராம முன்சீப் கையெழுத்துப் போட்டு அளித்துள்ள ரசீதுகளை காண்பித்தால் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

நில ஆர்ஜிதம் சம்பந்தப்பட்ட மட்டில் ரெவின்யூ அதிகாரிகளுக்குத் தான் அதிகாரம் இருக்கிறது. சாதாரணமாக 3 வருஷங்களுக்குக் குறைந்து நிலம் ஆர்ஜிதம் செய்ய முடியவில்லை. பல அதிகாரிகள் பரிசீலனை செய்து திருப்பித் திருப்பி பேப்பர்களை அனுப்பி, கடைசியில் நிலம் ஆர்ஜிதம் செய்வதற்கு மூன்று வருஷங்கள் ஆகிவிடுகின்றன. அதற்குள் விலை ஒன்றுக்கு மூன்றாக ஏறிவிடுகிறது. எந்த விதமான முறையை அனுஷ்டித்தால், இதிலுள்ள சிக்கல்களை ("பாடில் நெக்ஸ்") எடுத்து, நில ஆர்ஜிதம் சீக்கிரம் செய்யமுடியுமோ, அதைச்செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது. ஏற்கனவே, இந்த மதறாஸ் ஹௌசிங் போர்டு சட்டம் வந்த பொழுது, நான் இதை எடுத்துக் காட்டின பொழுது, இந்த சட்டத்தை திருத்துவதாகச் சொன்னார்கள், இது சம்பந்தப்பட்ட மசோதாவிலே பார்த்தால் காம்பென்ஸேஷனைப் பற்றியுள்ள 23, 24-வது செக்ஷன்களைத் திருத்துவதாக இருக்கிறது. முக்கியமான காரியங்களுக்கு ஆர்ஜிதம் செய்வதற்கான ஏற்பாட்டை ரெவென்யூ அமைச்சர் அவர்கள் செய்ய வேண்டுமென்று வணக்கமாகக் கேட்டுக் கொள்கிறேன். 10 a.m.

அடுத்தபடியாக குளம்புறம் போக்கிலே சாகுபடி செய்வதைப் பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஒரு குளத்திற்கு 800 எக்கரா ஆயக்கட்டு இருக்கிறது என்றால், 20 எக்கர், 15 எக்கர் ஏரி ஊள்வாய் (tank bed) குளம்புறம் போக்கில் சாகுபடி செய்துகொண்டுவிடாமல் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். Tank bed புறம் போக்கு நிலம் முழுகாமலிருக்க ஏரியிலுள்ள தண்ணீரை வெட்டி வடித்திருக்கிறார்கள். குளம் புறம் போக்கு எவ்வளவுதான் என்று நிர்த்தாரணம் பண்ணி, லெவல் எடுத்து, அதற்கு மேல் ஆழமாக உள்ள இடத்திலே சாகுபடி செய்யக்கூடாது என்று வழிவகை செய்ய வேண்டும். அப்படி மீறிச் சாகுபடி செய்தால் அவர்களை அப்புறப்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அபராதம் மட்டும் போட்டால் போதாது. வடுவூர் ஏரியாவிலே 800 ஏக்கர் ஆயக்கட்டிலே, குளம் எதிர்வாயிலிலே 20 அல்லது 30 ஏக்கர் குளம் புறம் போக்கில் சாகுபடி செய்கிறார்கள். குளமுழு நீர் மட்டத்தில் F. T. L. அரை அடித் தண்ணீர் குறைக்க வேண்டுமென்கிறார்கள். இதே மாதிரி பட்டுக்கோட்டை தாலுகாவில் அமரி குளத்திலும் சாகுபடி செய்கிறார்கள். இதைப்பற்றி அமைச்சர் அவர்களிடத்தில் இதை ஸ்டேட் பாலிஸியாக தீர்மானிக்க வேண்டுமென்று எழுதிக் கொடுத்திருக்கிறார். அதற்கு முடிவு செய்ய கேட்டுக்கொள்கிறேன். குளம்புறம் போக்கில் சாகுபடி செய்திருப்பவர்களை அப்புறப்படுத்தவேண்டும். குளத்திற்கு எவ்வளவு வேண்டுமென்பதைத் தீர்மானிக்க வேண்டும். இதை அமைச்சர் அவர்கள் உடனடியாக கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தண்ணீர் தீர்வையை அதிகப்படுத்தப் போவதாக ஒரு பதிலிலே குறிப்பிட்டார்கள். எங்கள் பகுதி ஸி.எம். பிராஜெக்டிலே கடைமடைப் பாசனம். செப்டம்பர்—அக்டோபரிலே ஒரு சொம்புத் தண்ணீர்கூட வருவதில்லை. கடைசியாக உள்ள அநேக கிராமங்களுக்குப் பாய்வதே கிடையாது. அதேநேரத்தில் மேல் மடைகளில் உள்ளவர்கள் இரண்டு போகம் சாகுபடி செய்கிறார்கள். இவைகளுக்கும் ஒரே தீர்வைதான்; அவைகளுக்கும் ஒரே தீர்வைதான். சரியான காலத்திலே தண்ணீர்

கொடுக்காவிட்டால், பூராத் தீர்வையும் வசூலிப்பது அவ்வளவு நியாயம் அல்ல. இந்தப் பிரச்னையையும் கவனிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தப்படியாக, ஸ்டாம்பு விநியோகத்தைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். முக்கால் ரூபாய், ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் கோர்ட் பீ ஸ்டாம்புகள், ஜெனரல் ஸ்டாம்புகள் கிடைக்கவில்லை. இன்று ஹிந்து பத்திரிகையிலேகூட கும்பகோணம் வக்கீல் சங்கத் தலைவர் ஸ்ரீ ராகவாச்சாரியார் எழுதியிருக்கிறார். முன் ஒரு தரம் 6 மாதங்களாகக் கிடைக்க வில்லை. தந்திகள் கொடுத்து, மனுக்கள் கொடுத்து, அதன் பிறகு கொஞ்சம் நிலைமை சரியாயிற்று. மறுபடியும் இப்பொழுது குறைச்சலான தொகைகளுக்கு ஸ்டாம்புகள் கிடைப்பதில்லை. ஏதாவது சாசனம், ஒப்பந்தம் எழுதவேண்டுமானல், பிளாக் மார்க்கெட்டிலே ஸ்டாம்புகள் வாங்கவேண்டிய நிலைமை இருக்கிறது. சர்க்காருக்கு வருமானம் கிடைக்கிற விஷயத்திலே, அதிகமான அக்கரை எடுத்துக்கொண்டு, தேவையான காலத்திலே இந்த ஸ்டாம்புகள் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

1936-ம் வருஷ இனம்களைப் பற்றிய பிரச்னை ரொம்ப நாட்களாகவே இருந்து வருகிறது. அதற்காக ஆக்ட் 261948 சட்டத்தைத் திருத்துவதில் பிரயோஜனம் இல்லை. அதிலே உள்ள விஷயம் வேறு, இந்த விஷயம் வேறு. குடியானவர்களுக்குப் பாத்தியம் கொடுப்பது எப்படி, காம்பென்சேஷன் கொடுப்பது எப்படி, பட்டாக்கள் வழங்குவது எப்படி என்பதை எல்லாம் தனியாகப் பரிசீலனை செய்து, 1936-ம் வருஷ இனம்களுக்கு ஒரு முடிவு காணவேண்டும். இதை நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன் இதனல் அநேக இடங்களில் மிராசுதாரர் குடியானவர்கள் பிரச்னை தீராமல் இருக்கிறது. வரியும் வசூலிக்கப்படாமல் இருக்கிறது.

கனம் அண்ணமலை அவர்கள் கூறிய குறையைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். நியாயவாரச் சட்டம் பாதுகாப்புச் சட்டம், இவற்றின்கீழ் எத்தனை மனுக்கள் பெண்டிங்காக இருக்கின்றன! புள்ளி விவரங்கள் கொடுத்தால் சொல்ல முடியும். எல்லா ஜில்லாக்களுக்கும் லாண்டு ஸீலிங்க்ஸ் கமிட்டியிலே புள்ளி விவரம் கொடுக்கப்பட்டது. தென் ஆற்காடு ஜில்லாவிலே ஒரு வருஷத்தில் 12 மனுக்கள் போடப்பட்டு, 9 மனுக்கள் முடிவு அடைந்திருக்கின்றன. 3 மனுக்கள்தான் பெண்டிங்காக இருக்கின்றன. மிராசுதாரர்களுக்கும், குடியானவர்களுக்கும் இடையே கிளர்ச்சியை உண்டுபண்ணுவது தவறு. என்னுடைய ஜில்லாவைப் பொறுத்தவரையில், பேர் ரென்ட் ஆக்ட், டெனெட்ன்ஸ் ப்ரொடெக்ஷன்ஸ் ஆக்ட் எல்லாம் நல்ல வகையிலே அமல் நடத்தப்பட்டு வருகின்றன. சட்டம் சரியாக நடந்துவருகிறது என்பதை எங்களுடைய ஜில்லாவை பொறுத்த வரையில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக ஜில்லாவிலுள்ள கெஜடட் ( Gazetted ) ஆபீசர்களுக்காவது சர்க்கார் வீடுகள் கட்டிக்கொடுத்தால், வீட்டுப் பிரச்னை ஓரளவுக்கு குறையும். சர்க்கார் அதிகாரிகள் அநேகம் பேர்கள் ஜாஸ்தி வாடகை கொடுப்பதால், என். ஜி. ஓக்களுக்கும், மற்றவர்களுக்கும் வீடுகள் கிடைக்காமல் வாடகையும் ஏறிக்கொண்டு போகிறது. ஒவ்வொரு ஜில்லா தலை நகரிலும் கெஜடட் ஆபீசர்களுக்கும், அதற்கு அடுத்துள்ள ஆபீசர்களுக்கும் சர்க்காரிலேயே வீடுகள் கட்டிக்கொடுத்து, அவர்களிடமிருந்து வாடகையை வசூலித்தால் அவர்களுக்கும் சௌகரியம், சர்க்கார் வேலையும் நன்ருக நடக்கும். மற்றவர்களுக்கும் வீடுகள் கிடைக்கும், இதையும் சர்க்கார் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

(இந்தக் சமயத்தில் தலைவர் மணியை அடித்து, அடுத்துப் பேசும்படி ஸ்ரீ எஸ். சாமிக்கண்ணு படையாச்சியை கூப்பிட்டார்).

18th March 1961]

*Sri S. SWAMIKKANNU PADAYACHI : கனம் சபைத் தலைவர் அவர்களே, கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மான்யத்தை மனப்பூர்வமாக ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஒவ்வொரு ஜில்லாவிலுள்ள கலெக்டருக்கும் வேலை கொஞ்சம் குறையவேண்டும் என்பதற்காக டி. ஆர். ஓ. ஆபீசரைப் போட்டிருக்கிறார்கள். அப்படியிருந்தும் கலெக்டர்களுக்கு அதிகவேலை இருப்பதாகத் தெரிகிறது. இன்னும் சில வேலைகளையும் அவர்களிடம் ஒப்படைத்தால் கலெக்டர்களுக்கு வேலை குறையும். அதோடு கலெக்டர்களும் ஏற்கனவே இருந்ததுபோல் இல்லை. கலெக்டரை வரவழைத்தால் சில அனுகூலங்கள் இருக்குமென்று நினைத்து சின்னச் சின்ன விஷயங்களுக்கு எல்லாம் கலெக்டரை வரவழைக்கிறார்கள். எங்கள் ஜில்லாவில் உள்ள 8 தாலூகாகளில் தினம் தினம் எங்காவது ஒரு கூட்டம் இருந்துகொண்டுதான் இருக்கிறது. எதையாவது திறப்பதோ, அல்லது எதற்காவது கல் நடுவதோ போன்ற விழாக்கள் நடந்து கொண்டே இருக்கின்றன. கூடுமான வரையில் கலெக்டர்கள் இந்த மாதிரிக் கூட்டங்களுக்குப் போகக்கூடாது என்று அரசாங்கம் உத்தரவு பிறப்பித்தால் நலமாயிருக்குமென்று நினைக்கிறேன். அமைச்சர் அவர்களை இதைப் பரிசீலனை செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மைனர் இரிகேஷனைப் பொறுத்தவரையில், 200 ஏக்கருக்கு உட்பட்ட பாசனங்கள் எல்லாம் கலெக்டரிடம் இருக்கிறது. வாய்க்கால் மராமத்து, ஏரி மராமத்து இவைகள் எஞ்சினியரிங் ஆபீசர்களால் செய்யப்பட்டு தாசில்தார் செக் மெஷர்மெண்டுக்கு வரும்பொழுது காலதாமதம் ஆகிறது. தண்ணீர் வந்த பிறகுதான் மெஷர்மெண்டு எடுப்பார்கள். செய்த வேலை அவர்களுக்கு மறந்துவிடும் போல் இருக்கிறது. இந்த வேலையையும் பொது மராமத்து இலாகாவிற்கோ அல்லது டி. ஆர். ஓ.-க்கு கொடுக்கலாம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

முன்பு ஒரு தாலூகாவுக்கு ஒரு தாசில்தார் இருந்தபொழுது ஒவ்வொரு பிர்காவுக்கும் போய் ஒவ்வொரு கிராமத்திலும் 4 அல்லது 5 நாட்கள் தங்குவார்கள். வேலையைக் கவனிப்பார்கள். இப்பொழுது அதே தாலூகாவில் 5 அல்லது 6 தாசில்தார்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒரு நாள் இரவுகூட ஒரு கிராமத்திலேயாவது அவர்கள் தங்குவதில்லை. ஜீப்பிலே வந்துவிட்டு உடனே போய்விடுகிறார்கள். இதனால் பெட்ரோல் செலவைத் தவிர வேறு பிரயோசனமும் இல்லை. லோன் டெபுடி தாசில்தார் என்று போட்டிருக்கிறார்கள். இந்த வேலையையும் தாசில்தாரே பார்க்கலாம். அல்லது பி. டி. ஓ. விடம் ஒப்படைக்கலாம். அப்படிச் செய்தால் அந்த பிளாக்கிலுள்ள லோன்களை வசூலிப்பதற்கு சௌகரியமாய் இருக்கும்.

ஹரிஜன மக்களுக்கு குடியிருப்பு மனை வழங்கும் விஷயத்தில் ரொம்பவும் காலதாமதம் ஏற்படுகிறது. ஒரு ஊரிலே 5 வருஷங்களுக்கு முன்னால் நடவடிக்கை எடுத்தும் இன்னும் முடிவு செய்யப்படவில்லை. 3 மாதத்திலே முடிக்கவேண்டிய விஷயத்திற்கு வருஷக் கணக்கில் ஆகிறது. அந்த ஊருக்குப் போகிறார்கள், ஆள் இருக்க மாட்டார். உடனே திரும்பி விடுகிறார்கள். இதையும் பி. டி. ஓ.விடம் ஒப்படைக்கலாம் என்று கேட்டுக்கொள்கிறேன். சீக்கிரத்திலே இடத்தை ஆர்ஜிதம் செய்து நேரடியாக ஹரிஜன வெல்பேர் ஆபீசருக்கு அனுப்பலாம்.

கிராமங்களிலே, கர்ணம், மணியம் இல்லாமல் எந்த வேலையையும் நடைபெறுது, கிராமத்திலே ரெவின்யூ அதிகாரிகளான ஒரு கலெக்டரோ அல்லது தாசில்தாரரோ நேரிடையாக ஒன்றும் செய்துவிட முடியாது. இவர்களுக்குப் பழக்கத்தால் காரியங்கள் வெகு சுலுவாக நடந்து விடுகிறது. ஒரு ரெவின்யூ இன்ஸ்பெக்டரையோ, தாசில்தாரயோ, அனுப்பினால் முடியுமா என்றால் முடியாது. ஆகவே இவ்வளவு முக்கியமான கிராம அதிகாரிகளுக்குப் போதுமான சம்பளம் கொடுக்கவேண்டும். இப்பொழுது கொஞ்சம் அதிகமாகக் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் அதுபோதாது. இன்னும் கொஞ்சம் அவர்களுக்குத் திருப்திகரமாக உயர்த்திக் கொடுத்து, அவர்களைப் பஞ்சாயத்தோடு இணைத்து, வேலை செய்தால், அவர்களுக்கும் சாதகமாக இருக்கும், கிராம மக்களுக்கும் நலமாக இருக்கும். அவர்களும் அவனிடத்திலும், இவனிடத்திலும் பணம் காசு கேட்காமல் இருப்பார்கள். சர்க்காருக்கும் அதனால் லாபம்தான். வேலை நன்றாக நல்ல முறையில் நடைபெறும். அப்படி அவர்களுக்கு உதவி செய்து வேலை வாங்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஒவ்வொரு ப்ளாக்கிலும் குறைந்தது 40 ஆபீசர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன வேலை என்றே தெரியவில்லை. எட்டு தாலூகா ஆபீசர்களும் அங்கு சேர்ந்து குவிந்திருக்கிறார்கள். அவர்களுக்கு ஒன்றும் வேலை கிடையாது. 10, 15 ஆயிரம் ரூபாய் செலவில் ஒரு மராமத்து என்றால் அதற்கு ஒரு ஓவர்சியர். அது வெகு சீக்கிரத்தில், மக்கள் முன்னேற்றத்திற்கு என்று சொல்லுகிறார்கள். அப்படி அரசாங்கம் எண்ணுகிறது. அது ஒன்றும் சரியில்லை. ஆகவே ப்ளாக்குகளில் ஆள்களைப் குறைக்கலாம் என்பது என் அபிப்பிராயம்.

அடுத்தபடியாக ரெவின்யூ புறம்போக்கு எத்தனையோ இருக்கின்றன. கிராம நத்தத்திலே வாழும் ஏழை மக்கள் திடீர் திடீரென்று வெளியேற்றப்படுகிறார்கள். அவர்களுக்கு வேறு நிலம் இருக்கிறதா? உண்ண உணவும் உடுக்க உடையும் கொடுக்க வேண்டாமா? ஆகவே அவர்களுக்கு நிலம் இல்லாதவர்களுக்கு குடியிருப்பு வசதி செய்து கொடுப்பதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். 50 வருஷமாக ஒரு கிராம நத்தத்திலே இருந்தவனை திடீரென்று வெளியேற்றினால், அவன் என்ன செய்வான்? ஆகவே, அம்மாதிரி சமயங்களில் அவர்களுக்கு வேறு சொந்த நிலம் இல்லாதவர்களுக்கு, அவர்கள் இருக்கும் இடத்தையே ஜாரி செய்து கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக கனம் ஸ்ரீனிவாச அய்யர் சொன்னது போல, ஏரிகளில் மேடான இடங்களில் சாகுபடி செய்து விடுகிறார்கள். தண்ணீர் அதிகம் வரும் போது பயிர்கள் அழிந்து போகாமல் இருக்க அவர்களே தண்ணியைத் துறந்து விட்டு விடுகிறார்கள். ஆகவே ஏரி உள்ளே விவசாயம் செய்யவே கூடாது என்று ஒரு உத்தரவை சர்க்கார் போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்கள் பகுதியில் ஏழை மக்களை 30 வருஷகாலமாக இருந்த இடத்தை விட்டு வெளியேற்றுகிறார்கள். அவர்கள் நெசவாளர்கள். கலெக்டருக்கும் மற்ற சம்மந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் உத்தரவு போட்டு அந்த நெசவாளர்களுக்கு தொல்லை இல்லாமல் செய்து, அவர்களுக்கு நிலத்தை அடமானம் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri K. R. NALLASIVAM :** சபைத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் இந்த ரெவின்யூ மானியத்தின் மீது கொடுக்கப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு சர்க்கார் பகுதியிலும், மற்ற அரசியல் பகுதியிலும் பொதுவாக குத்தகையாளர் சட்டம், நியாயவாரச் சட்டம், நில உச்ச வரம்புச் சட்டம் இவைகளைச் செய்வதால் மட்டும் விவசாயிகளுக்கு பல நல்ல

காரியங்களைச் செய்து விட்டதாக ஒரு திருப்தியிருக்கிறது, அது தவறு. இந்த சட்டங்களினால் அதிகப் பலன் அடைந்தவர்கள் 40 சதவிகிதமே யாவர். மற்றுள்ள 60 சதவிகித விவசாயிகள் இன்றைக்கு உள்ள சட்ட திட்டங்களினால், அதை அமுல் நடத்தும் ரெவின்யூ அதிகாரிகள் செய்யும் குறைகளால், பலவிதமான அவதிகளுக்கு உள்ளாகியிருக்கிறார்கள். அவர்களுக்கு நிச்சயமாக நிவாரணம் கொடுக்க வேண்டும். அது பற்றி சர்க்காரிடத்தில் கவனம் இல்லை. ஒரு சிறிய உதாரணத்தைக் கொடுக்க ஆசைப்படுகிறேன். இன்றைக்கு ரெவின்யூ இலாகாவில் கீழ் மட்டத்தில் அதிகாரிகள் தொடர்ந்து தவறுகள் செய்கிறார்கள். அமைச்சரவர்களுக்கோ அல்லது அதிகாரிகளுக்கோ தகவல் கொடுத்தாலும்கூட எந்தவிதமான நடவடிக்கைகளும் எடுக்கப்படுவதில்லை. ஒரு நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன். எங்கள் பகுதியில் அஞ்சியூர் என்ற ரெவின்யூ கிராமம் இருக்கிறது. அங்குள்ள உதவி கர்ணம் சர்க்கார் கடன் தொகைகளை வசூலிப்பதில் ஊழல்கள் செய்ததாக அவர் மீது மக்கள் விண்ணப்பங்கள் அதிகாரிகளுக்கும் எனக்கும் கொடுத்தார்கள். என்னைப் பொருத்தவரை, இதுவரை சுமார் 6 கடிதங்கள் கலெக்டருக்கு எழுதி விட்டேன். 4,5 கடிதங்கள் ஆர். டி. ஓ.-க்கு எழுதி விட்டேன். இரண்டொரு கடிதங்களுக்கு மட்டும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று பதில் வந்ததே ஒழிய, இன்றுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இரண்டு வருஷங்களுக்கு மேல் ஆகிறது. அதில் ஒரு முக்கியமான கதை என்னவென்றால், அந்த உதவி கர்ணத்தை மாற்றுவது குறித்து எந்த நடவடிக்கையும் எடுக்கப் படாததால், மக்கள் கருதினார்கள் தாங்கள் என்னைச் சேர்ந்தவர்கள் என்பதால் ஒருக்கால் நடவடிக்கை எடுக்க வில்லையோ என்று. நான் சொன்னேன் "தாராளமாக நீங்கள் காங்கிரஸில் சேருங்கள்; அப்படியாவது நடவடிக்கை எடுத்தால், மக்களுக்கு நலன் விளைந்தால் சரி" என்று. அவர்களும் காங்கிரஸில் சேர்ந்தார்கள். சமீபத்தில் நொய்யல் அணைக்கட்டு மாநாடு நடந்தபோது நிதியமைச்சர் வந்தார்கள். அவர்களிடம் கதர் சட்டை போட்டுக்கொண்டு விண்ணப்பங்கள் கொடுத்தார்கள். ஆனால், கதர் சட்டை போட்டுக் கொண்டாலும், செஞ்சட்டை போட்டுக் கொண்டாலும் அந்த உதவி கர்ணத்தை மாற்ற எந்த தந்திரமும் பலிக்க வில்லை. ஆகவே இந்த மணியம், கர்ணம் இவர்கள் சம்பந்தமாக சீக்கிரமாகவே ஒரு முடிவு செய்தால் பெரிய நலமாக இருக்கும். இந்த சர்க்காருக்குக் கெட்ட பெயர் உண்டாக்குகிறவர்களில் இந்த கிராம அதிகாரிகளுக்கு ஒரு பெரிய பொறுப்பு இருக்கிறது என்பதை அரசாங்கம் உணரவேண்டும். (குறுக்கீடு) இருக்கலாம்; அது மக்களுக்கு தொல்லையாக இருக்கிறது. இன்றைக்கு இருக்கும் முறை பல சிக்கலுக்குக் காரணமாக இருக்கிறது. ஒரு பட்டாவின் கீழ் 10, 15 விவசாயிகள் இருக்கிறார்கள். தனித் தீர்வை கட்டி தனி ரசீது கொடுப்பதில்லை. பட்டா நமூனாவில் பல்வேறு காலங்கள் இருக்கின்றன. அது மக்களுக்கு என்னவென்றே புரிவதில்லை. இதற்கு பெரிய நடவடிக்கை ஒன்றும் அவசியமில்லை. சாதாரண நடவடிக்கை மூலம் இவற்றைத் திருத்தியமைக்க முடியும். ஆகவேதான் சொல்லுகிறேன், இந்த நியாயவாரச் சட்டம், குத்தகையாளர் சட்டம், நில உச்சவரம்பு சட்டம் இவைகளால் மட்டும் விவசாயிகளுக்கு பெரிய அளவில் நன்மை ஏற்பட்டுவிடவில்லை என்று.

இதற்கு அடுத்தபடியாக இன்று தரிசு நிலங்களைவிட மனை விஷயமாகப் பட்டா செய்து கொடுப்பதற்கு சர்க்கார் திட்டவட்டமான ஒரு கொள்கையை வகுத்துக்கொண்டாகவேண்டும். மனை விஷயமாகவும் சரி, சாகுபடிக்கு லாயக்கான தரிசு நிலங்களாக இருந்தாலும் சரி—ஹரிஜனங்கள் விண்ணப்பம் போட்டு எட்டு ஒன்பது வருடங்கள் ஆகியும்கூட யார் ஹரிஜனங்கள் தானே என்று இப்படி நான் சொல்லக்கூடாது இருந்தாலும், அதிகாரிகள் அலட்சியமாக இருப்பதாகத் தெரிகிறது. அப்படித்தான் நினைக்க வேண்டியதாக இருக்கிறது—அதிகாரிகள் எந்தவிதமான நடவடிக்கையும்

எடுத்துக்கொள்வதில்லை. வீட்டு மனை விஷயத்தில் கீழ் பவானி பிரதேசத்தில் நீர்க்கசிவு காரணமாக ஒரு தீவிர நடவடிக்கை எடுத்துக்கொண்டது போல மற்ற இடங்களிலும் எடுத்துக் கொண்டாகவேண்டும். உண்மையிலேயே அப்பிரச்சினையில் ஒரு சங்கடம் இருக்கிறது. வீட்டு மனைக்காக மிகப் பள்ளமாக நிலங்களைக் கொடுத்திருக்கிறார்கள். சாகுபடிக்கு மேட்டுப்பாங்கான நிலங்களைக் கொடுத்திருக்கிறார்கள். மேட்டுப் பாங்கான நிலங்களில் உள்ளவர்கள் வீட்டு மனைக்காக இதைக் கொடுத்துவிட்டு சாகுபடிக்குப் பள்ளத்தாக்கான நிலங்களை எடுத்துக்கொள்ளத் தயாராக இருந்தாலும் இந்த நிலங்களுக்கு இன்னும் பட்டா வழங்கப்படாத காரணத்தினால் அது முடியாமல் இருக்கிறது. இந்தச் சிக்கலையும் அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டும்.

அதற்கு அடுத்தபடியாக ரோடுப் புறம்போக்குகளில் மனை கட்டிக் கொண்டு விடுகிறார்கள் என்று குறிப்பிட்டார்கள். ஜனப்பெருக்கம் அதிகமாகிக்கொண்டே போவதனால் இட நெருக்கடி ஏற்படுகிறது. போக்கு வரத்துக்கு இடைஞ்சல் இல்லாதவாறு இப்படி மனை கட்டிக்கொண்டு விட்ட இடங்களில் பணக்காரர்களாக இருந்தால் அதற்குரிய தொகையை வசூல் செய்துவிடலாம். இல்லாவிட்டால் அதை அவர்களுக்கே கொடுத்து விடலாம். எப்படியோ அவற்றைப் பட்டா செய்து ஒழுங்கு படுத்திவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அது இல்லாமல் குடியிருக்காதே என்று சொல்லிப் பயன் இல்லை.

இன்னும் எங்களுடைய பகுதியைப்பற்றி கோபி வாய்க்கால் நில ஆர்ஜிதச் சட்டம் செய்தும் அதில் சில சிக்கல் இருக்கிறது. தண்ணீர் வடிவதற்கு வசதி இல்லாத காரணத்தினால் 15 ஆயிரம் ஏக்கரா களராகி விட்டது. உடனடியாக வடிகால் வசதி செய்து தர நில ஆர்ஜிதம் செய்ய முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும். இதுவரை எடுத்துக் கொள்ளவில்லை.

அதோடு பத்து வருஷங்களுக்கு ஒரு முறை இப்போது சென்ஸஸ் கணக்கு எடுக்கப்பட்டு வருகிறது. இப்போதுகூட எடுத்தார்கள். இது பற்றி ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். நாம் இப்போது ஜனன மரணக் கணக்கு பதிவு செய்ய ஏற்பாடு செய்திருக்கிறோம். அங்கங்கே பண்ணப்பட்டு வருகிறது. இதையே ஒழுங்கான முறையில் செய்தால், சென்ஸஸ் என்று தனியாகச் செலவிடவேண்டியிருக்காது. விழா போன்ற நடவடிக்கை தேவைப்படாது. இந்த ஜனன மரண ரிஜிஸ்ட்ரேஷன் இலாகாவையே ஒழுங்காக வைத்துக்கொண்டு விடுவது நல்லது என்ற யோசனையைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக திரு. மாதா கவுடர் அவர்கள் ஆரம்ப விழாவைப் பற்றிப் பேசினார்கள். பொதுவாக ஆரம்ப விழா நடத்துவதாலும் அமைச்சர்கள் வருவது அவசியம் என நினைக்கலாம். அப்பணிகளுக்கு அரசாங்க உதவியும் அவசியமாக இருக்கிறது. ஆனால் அதையே மீண்டும் திறப்பதற்கு விழா அவசியமா ? இதில் இன்னொன்று. சட்டசபை அங்கத்தினர்கள், அமைச்சர்கள் வந்தால் தேவலை என்று நினைக்கிறார்கள். ஆங்காங்குள்ள ஸ்தல நிர்வாகிகள் தங்களுடைய மேல் அதிகாரிகள் வந்தால் தேவலை என்று நினைக்கிறார்கள். இப்படி இடையில் ஒரு மோதல் ஏற்படுகிறது. ஆகவே ஆரம்ப விழா, திறப்பு விழா, முடிவு விழா என்று எந்த விழாவாக இருந்தாலும் யார் யார் எப்படிக் கலந்து கொள்வது, என்பதற்கு ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டும், அதைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

18th March 1961]

* SRI T. T. DANIEL : Mr. Chairman, Sir, while speaking on the Demand-Land Revenue Department may I place some facts for the kind consideration of Government. At present many of the districts are very extensive and massive enough, so, that it is not possible to have an intensive administration at the district level. The District has to be divided into small units and if it is not possible there should be bifurcation of the districts which are having territorial extent of more than 7,000 square miles. At present the villager finds it rather difficult to have close association with the district administration because the district headquarters offices are situated at a far-away distance from his village. Secondly I would say that the present administrative machinery both at the district level as well as at the top level requires complete modification and changes. Even though officers both at the district level as well as at the top level work in earnest, considerable delay is being caused in disposing of matters that are brought to the notice of Government. The mistake is not on the officers but it is intrinsic with the defective administrative machinery that has been handed over to us from the Britishers. It might have served to deliver the goods while the Englishmen were here. But it has proved failure to deliver the goods to the freedom-loving people of this country. At present there are conflicts between one department and another, whenever they have to decide a particular issue. There is no co-ordination between department but far from it, divergent actions are being taken rather than cogent action, by the various departments concerned in the matter of disposal of a particular petition that is brought before them. There is red-tapism both at the district as well at the top level, even though our Secretaries and officers earnestly work throughout the working hours and late in the night also. I would suggest that, gained by their experience of foreign tour, the Ministers should introduce rapid modifications in the district level administration as well as in the top level administration. In the first place they should constitute a committee consisting of legislators, secretaries, Ministers and experienced public men so that no matter, either small or big should be pending before Government for more than six months. If that is achieved, then the common man will have confidence in the administration.

At present there is want of stationery at the district level. In many villages, even forms for issuing tax receipts forms are not available and the paper used for tax receipts is also of bad quality and the pencils that are supplied to village officers are of very bad quality so that the taxpayer is unable to find out very clearly his name and also the amount that is written on those papers. As has been suggested by an hon. Member, stamps are not available at certain periods. Parties have to purchase stamp in the black market for a high price. I do not know why this inconvenience

is called to the public. I think this has been brought repeatedly every year to the notice of Government. Government have got an account of the amount of expenditure they incur on stamp papers. They should have taken precaution to supply these stamps to the various stamp vendors in the districts at the beginning of the year itself.

Regarding land acquisition proceedings it should be the policy of Government to pay compensation which they fix to the landowner, before the landowner is dispossessed of his land. At present instances are there where the landowner is dispossessed of his land and he is not able to get compensation during his lifetime. This is rather cruel. Government have no right to take away anyone's property unless and until compensation which Government considers fit, is paid to the concerned landowner.

The District jails have to be constructed for all districts. At present in Kanyakumari, there is no district jail and almost all the prisoners are sent to the Madurai district jail. Madurai district jail is already overcrowded and the prisoners suffer on account of that. District jails be constructed for each district. Also, houses for the Collector, Superintendent of Jails, District Judges and other district officers should be constructed in each district.

Regarding the recovery of the agricultural income-tax and sales tax, I would like to bring to the notice of the Government that instances have been brought to our notice that sometimes, the officers instead of collecting the agricultural income-tax or sales tax, create unnecessary scare in the towns and villages by making surprise visits to the shops and by preparing *mahazars*. It is also brought to our notice that the conduct of some of the officers—I should say with regret—has created an impression in the minds of the standers—by that some sort of tyranny was being inflicted upon the shop-owners and businessmen by the agricultural income-tax and sales tax officers. That is the impression created in the minds of the people as a result of the conduct of these officers by their words and unwanted visits to the shops especially during the busy hours of the day when the shops had rush of business.

Sir, in this connection, I would also like to say few words about the integration of services of the former Travancore Cochin State personnel in the transferred territory. Their pension amounts, their gratuity amounts have been unncessarily delayed and that has created a lot of discontentment in their minds. On deeply analysing this question, we now find that the Kerala State Government are not sending proper replies to our Government whenever our Government wrote letters to them regarding the service conditions of the transferred personnel, and regarding the fixation of their pension amounts. I would suggest that our Government

should move the Central Government in the matter and request them to appoint an Officer to look into this matter so that we may get proper replies from the Kerala Government in future, for the purpose of fixing the scales of pay and other service conditions of the transferred personnel.

As for the recovery of Maniyakaram and Tiruppuvaram taxes in the transferred territory, we hear that repeated letters have been sent to the Kerala Government to send particulars, but no reply has been sent for a very long time. So, this vital issue remains undecided even though nearly 4½ years have passed.

In the matter of eviction proceedings, that the officers concerned take eviction proceedings against poor persons and in no time, the poor people are evicted from their holdings, from their small houses which they have constructed and where they have been living for a very long time in the past. Side by side with these houses and properties from where the poor people are dispossessed, there are massive encroachments of Government lands and which are at present in the possession of rich people. But no eviction proceedings are taking against them. This is more or less the common occurrence and the poor man feels thereby that he has no safety in the hands of the Government and the rich people who can sucessfully fight the eviction proceedings, are allowed to continue to squat any enjoy the extensive lands which are Government properties. A proper survey has to be conducted to find out such encorachments and eviction proceedings against all the encroaching people, whoever they may be, should be taken and the excess lands thus secured, should be distributed among the landless poor cultivators of the district.

Sir, we have been praying that the rule regarding the assignment of lands for the Harijans that is now prevalent in the other parts of the State should also be extended to the transferred territories. At present, the lands where the Harijans have built their houses in which they are living, are granted to them on the basis of a Kuthagai Patta(m) lease and they are not assigned to them. In the other places, such lands are assigned and pattas are issued. This rule should be extended to them also so that pattas for these lands may be issued to the Harijans and they may be made absolute owners of such properties which are not necessary for any public purpose.

* **Sri T. K. SUBBIAH** : கனம் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யக்கோரிக்கையை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக ரெவின்யூ இலாக்காவிலே வேலைகள் நல்லதொரு முறையிலே நடைபெற்று வந்தாலும், விவசாயிகளுக்கு அதிகமாக வேலைகள் இருப்பதன் காரணமாக ரெவின்யூ ஆபீசர்களை தேடிச்செல்ல வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இதன் காரணமாக பெரிய தாலுக்காக்களில் சில பகுதிகளை பிரித்து தனி 10-30 a.m.

தாலுக்காவாக அமைத்தால் நன்றாகவும் விவசாயிகளுக்கு சௌகரிய மாகவும் இருக்கும். குறிப்பாக உடையார்பாளையம் தாலுக்காவை எடுத்துக்கொண்டால் ஒரு தாசில்தார் இருக்கிறார். ஜயங்கொண்ட சோழபுரத்தை எடுத்துக்கொண்டால் ஒரு டெபுடி தாசில்தார் இருக்கிறார். அரியலூரை எடுத்துக்கொண்டால் ஒரு டெபுடி தாசில்தார், ஒரு மானேஜர், தாசில்தார் இருக்கின்றார்கள். இப்படியாக ரெவின்யூ நிர்வாகத்திற்கு பல தாசில் தார்கள் இருக்கின்றார்கள். குறிப்பாக ஜமீன் கிராமங்களிலும், ஷ்ரோத்திரியம் கிராமங்களிலும் சர்வே வேலைகள் நடைபெற்று வருகின்றன. இம்மாதிரி பல டெபுடி தாசில்தார்கள் இருப்பதை மாற்றி குறிப்பாக அரியலூரில் ஒரு தாசில்தார் ஆபீசும், ஜெயங்கொண்ட சோழபுரத்தில் ஒரு தாசில்தார் ஆபீசும் ஏற்படுத்த வேண்டும்.

அடுத்தபடியாக இப்பொழுது செட்டில்மெண்ட் நடந்துகொண்டிருக்கிறது. அப்படி நடக்கும்போது ஒரு பிர்க்காவிலே இருக்கும் கிராமங்களைப் பிரித்து இன்னொரு பிர்க்காவிலே சேர்க்கப்படுகிறது. என்னுடைய தொகுதியிலும் இம்மாதிரி செய்யப்பட்டு இன்னொரு பிர்க்காவில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதனால் மிகவும் கஷ்டமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. உதாரணமாக தாமரவல்லி கிராமத்தை இன்னொரு பிர்க்காவில் இருக்கும் கிராமத்தோடு இணைத்திருக்கிறார்கள். அப்படி செய்வதனால் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. குறிப்பாக இம்மாதிரி மாறுதல் ஏற்படுவதனால்தான் கிராமத்தார்கள் ஒரு துறை சம்பந்தப்பட்ட விஷயத்தை அந்த அதிகாரியிடம் போய் அறிந்துக்கொள்வது கஷ்டமாக இருக்கிறது. இப்போது சட்டசபை தொகுதியை எடுத்துக்கொண்டால் இதிலேகூட பல கிராமங்கள் பிரிக்கப் பட்டிருக்கின்றன. கிராம வட்டார வளர்ச்சியை எடுத்துக்கொண்டால் பிர்க்காக்களின் நிலைமையில் மாறுதல் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால் இந்த முறையை மாற்றி ஓரளவுக்கு வரையறை செய்து சட்ட சபை தொகுதியைச் சேர்ந்தாலும்சரி கிராம பகுதி வட்டார வளர்ச்சி தொகுதியைச் சேர்ந்தாலும் சரி நல்ல முறையிலே அமைக்க முடியும் என்று சொல்ல விரும்புகிறேன். ஒரு தலைநகரத்திலே எல்லா துறைகளையும் சேர்த்து நடத்த முடியாத காரியம். தாலுக்காவாரியாக துறைகளைப் பிரித்தால்தான் மக்கள் சௌகரியமாக காரியங்களை நிறைவேற்ற முடியும். குறிப்பாக உடையார் பாளையம் தாலுக்காவில் இம்மாதிரி மாறுதல்கள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஜமீன், ஷ்ரோத்திரியம் கிராமங்களில் நத்தம் என்று 10, 15, 20 ஏக்கர் கொண்ட நிலங்கள் இருக்கின்றன. இந்த நத்தங்களுக்குப் பக்கத்திலே சாகுபடி செய்யக்கூடிய நிலங்களும் இருக்கின்றன. அதைத்தவிர வீடுகள் கட்டுவதற்கான 10, 15 ஏக்கர் நிலங்களும் இருக்கின்றன. சர்வே செய்யும்போது சாகுபடி செய்யப்படும் நிலங்களைத்தான் கணக்கிடுகிறார்களே தவிர வீடுகள் கட்டக்கூடிய நிலங்களை சர்வே செய்வதில்லை. ஆகையால் சாகுபடி செய்யக்கூடிய நிலங்களுக்குத்தான் பட்டா வழங்குகிறார்கள்.

இதை எதற்காக சொல்கிறேன் என்றால், நத்தத்திற்கு வாய்தா, கிஸ்தி கொடுக்க வேண்டியதில்லை, சாகுபடி நிலமானால் கிஸ்தி கட்ட வேண்டிய நிலையிலிருக்கிறார்கள். அங்கு வீடு கட்டிக்கொண்டிருக்கக்கூடியவர்கள், ஒரு வீட்டிற்கு கிஸ்தி கொடுக்க வேண்டியிருக்கிறது, மற்றொன்றுக்கு கிஸ்தி கொடுக்க வேண்டியதில்லை என்ற நிலையிருக்கிறதே என்று கருதுகிறார்கள், ஆகவே, சர்வே செய்யும்போது எந்தெந்த இடங்கள் குடியிருப்பிற்காக கட்டப்பட்டிருக்கிறதோ அவைகளை எல்லாம் நத்தத்தில் இணைத்துவிட வேண்டும். அடுத்தபடியாக, எங்கள் பகுதியில் நிறைய புறம்போக்கு நிலங்கள் ஏழை மக்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்று பல ஏரிகள் நீர்ப்பாசனத்திற்கு லாயக்கற்றதாக மாறிவிட்டிருக்கிறது. ஏனெனில், புள்ளம்பாடி ஸ்கீம் வந்த பிறகு நீர்வளம் பெருகி விட்டது. 400

பேர்களுக்கு ஆண்டுதோறும் தாற்காலீகமாக ஒரு ஏக்கர் வீதம் அடமானம் செய்யப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு நிரந்தரமாக அடமானம் செய்து கொடுக்க உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இல்லேயெனில், பஞ்சாயத்து ஆட்சி முறையில் பஞ்சாயத்தின் கையில் கிராம புறம்போக்கு நிலங்களே ஒப்படைத்திருப்பதாக அறிவித்திருக்கிறார்கள் ஆகவே, அவர்கள் அனுபவித்து வந்திருக்கும் நிலங்களின் பேரில், அவர்களுக்கு வீண் தொந்தரவு கொடுக்கும்படியானதொரு நிலே ஏற்படுமே தவிர ஏழைகளுக்கு சாகுபடிக்கு கிடைக்கக்கூடிய நிலம் குறைவாகிவிடும். ஆகவே, இப்பொழுது தாற்காலீகமாக அடமானம் செய்து கொடுக்கப்பட்டிருக்கும் நிலங்களே அவர்களுக்கு நிரந்தரமாக அடமானம் செய்து கொடுக்க ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் பகுதியில், காமரஸவல்லி என்ற பகுதி மிகவும் பின்தங்கிய பகுதி. அங்குள்ளவர்கள் சப் ரெஜிஸ்ட்ரார் ஆபீஸிற்கு செல்லவேண்டுமென்றால் 25, 40 மைல்கள் போக வேண்டியிருக்கிறது. இப்பொழுது ஏறத்தாழ நிறைய ஏழைகள் நிலங்கள் வாங்கக்கூடிய தன்மையில், வளர்ச்சி அடைந்திருக்கிறார்கள். பணக்காரர்களுக்கும், நிலத்தை விட்டுவிட வேண்டுமென்ற மனப்பான்மை வந்துவிட்டது. இத்தகைய நிலே ஏற்பட்டிருப்பதால், அங்குள்ள மக்கள் ரிஜிஸ்தர் செய்ய, பல மைல் தூரம் செல்லவேண்டியிருக்கிறது, சப் ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்க்கு. ஆகவே, காமரஸவல்லியில் ஒரு சப் ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ் ஏற்படுத்திக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின், தலே நகரிலிலேயே எல்லா ஆபீஸ்களும் இருப்பதன் காரணமாக கஷ்டமானதொரு நிலே ஏற்படுகிறது. நிதியமைச்சர் அவர்கள் சொன்னார்கள், தொழில் துறை வளர்ச்சி அடைந்திருப்பதால் சென்னே நகரில் வந்து குவிகிறார்கள். என்று. கப்பல் போக்குவரத்து வசதி, ரெயில் வசதி, இவைகளினால் பெரிய தொழிற்சாலேகள் அமைந்திருப்பது இவைகள் எல்லாம் சென்னே நகரில் இருந்தபோதிலும், ரிஜிஸ்ரேஷன் ஐ.ஜி. ஆபீஸ் போன்றவைகளே திருச்சி போன்ற மத்திய இடங்களில் அவைகளின் தலேமைக் காரியாலயங்களே அமைத்துக் கொடுத்தால் நன்றாகயிருக்கும் என்று கூறிக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI P. S. SANTHANAM: தலேவர் அவர்களே, இன்று நடைபெறுகிற வெட்டுப் பிரேரணையை ஒட்டி அதை ஆதரித்துக்கொண்டு நான் என் கருத்துக்களேச் சொல்ல பிரியப்படுகிறேன். எனக்கு முன் பேசிய அங்கத்தினர்கள் ஜில்லா நிர்வாகத்தைப்பற்றி, ரெவின்யூ நிர்வாகத்தைப் பற்றிச் சொன்னார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த அண்ணாமலே அவர்கள் பேசுகிறபோது நிலச் சீர்திருத்தச் சட்டம், சாகுபடியாளர் சட்டம், கையேர்வாரந்தார் சட்டம் போன்றவைகள் பற்றி பேசியதன் மீது, ஆளும் கட்சியைச் சார்ந்த அங்கத்தினர் ஒருவர் நிலச் சீர்திருத்தத்தின் தன்மையை உணராத முறையில் அவர்கள் அக் கமிட்டியில் அங்கத்தினராகயிருந்தும்கூட இந்தச் சட்டத்தை எதிர்த்து வாதாடக்கூடிய சுதந்திரக் கட்சியுடன் கூட்டுச் சேரப் போகிறார்கள் என்பதை உணரவில்லேயா என்றார்கள். தேர்தல், 62 மார்ச்சில் வரயிருக்கிறது. ஆனல் இன்று ஜில்லா நிர்வாகம் எப்படி நடைபெறுகிறது, தாலுகா நிர்வாகம் எப்படி நடைபெறுகிறது, மக்கள் சுபிட்சம் அடையக் கூடிய முறையில் நிலேமை இருக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும் என்று சொல்லுவதுதான் அங்கத்தினர்களின் கடமை. 30,000, 40,000, 50,000 வாக்குகளேப் பெற்று சட்டமன்றத்தில் வந்து அமர்ந்திருக்கும்போது ஆங்காங்கு ஏற்படும் குறைகளேப்பற்றி, சர்க்கார் நிர்வாகத்தில் உள்ளவர்கள் எப்படி மக்களுக்கு என்ன நன்மை செய்கிறார்கள், எப்படி எப்படி சட்டத்தை வளேத்து ஒடிக்கிறார்கள் என்ற நிலேயை எடுத்துக் காட்ட வேண்டும். உதாரணமாக சொல்லப் போனல், வட ஆற்காடு மாவட்டத்தை உதாரணமாக சொல்வேன். ஏனெனில், அந்தப் பகுதியைச் சார்ந்தவன்

நான். அங்கு நிலைமை எப்படியிருக்கிறது என்று பார்த்தால் அங்கு நிர்வாகம் சரியான முறையில் ஏழைகளுக்காக நடைபெற்று வரவில்லை என்ற பெரிய குற்றச்சாட்டை நான் சொல்கிறேன். செங்கம், திருவண்ணாமலை தாலுகாவில் உள்ள 1½ லட்சம் மக்களின் பிரதிநிதிகளாக வந்திருக்கிறோம். எங்கள் பகுதியில், ரெவின்யூ நிர்வாகத்தில் உள்ளவர்கள் ஒருதலைப் பட்சமாக நடந்து வருகிறார்கள். செங்கம் தாலுகாவில், போக்குவரத்திற்கு லாயக்கற்றதாகயிருக்கிறது. அவை, காட்டுப் பிரதேசங்கள், அப் பிர்க்காக்கள் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. 1958–59-ல் பஞ்ச நிவாரண வேலைகள் செய்யப்பட்டபோது இந்த மூன்று பிர்க்காக்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. ஏன் என்று ஆராய்ந்து பார்க்கிறபோது, ஏன் இப்படி புறக்கணிக்கிறீர்கள் என்று திருவண்ணாமலை ரெவன்யூ அதிகாரிகளைக் கேட்டேன். ஏன் இங்கு நிவாரண வேலைகள் தொடங்கப்படவில்லை என்று கேட்டேன். அதற்கு சர்க்கார் பணம் ஒதுக்கவில்லையா அல்லது இங்கிருந்து திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர்கள் வெற்றி பெற்று வந்து விட்டார்கள் என்பதினால் செய்யவில்லையா என்று கேட்டேன். அப்பொழுது, கிராமப் பிரமுகர்கள், சில கிராம செல்வந்தர்கள் சொன்னார்கள், ரெவின்யூ அமைச்சர் மாணிக்கவேலு அவர்களின் தொகுதியில் நிறைய செலவிடப்பட்டிருக்கிறது. 1½ லட்சத்திற்கு மேல் ஒரு வருடத்தில் வேலை செய்திருக்கிறார்கள். ஆனால் ஆயிரம் ரூபாய்கூட மற்றப் பகுதியில் செலவிடவில்லையே என்று அங்குள்ளவர்கள் சொன்னார்கள். அப்படி திராவிட முன்னேற்றக் கழகத்தினர் வெற்றி பெற்று வந்திருக்கும் இடங்களில் செலவு செய்யவில்லையென்றால், வரும் தேர்தலில் மக்கள், அங்குள்ள மக்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆதரிக்க மாட்டார்கள் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினருக்கு வோட்டு போட்டால் அதனால் சர்க்காரிலிருந்து கிடைக்கக்கூடிய பலன் பெற முடியாது என்ற எண்ணம் புகுத்தப்பட்டிருக்கிறது. அந்த நிலை போக வேண்டும். அவர்களும் மக்கள், நாங்களும் மக்கள், நிவாரண வேலைகளுக்காக ஒதுக்கப்படுகிற பணம், இந்த பகுதிக்கு, இந்த பிர்க்காவிற்கு இவ்வளவு என்று ஒதுக்க வேண்டும். ஆக, ரெவின்யூ இலாகா அதிகாரிகள் ஒருதலைப் பட்சமாக நடந்துகொண்டு வருவதைப் பார்த்து அதனால் நான் உண்மையில், வருத்தப்படுகிறேன் என்று இந்த மாமன்றத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடியாக, நிலங்களை எடுத்து ஆராயும்போது, தீர்வையில்லாத புறம்போக்கு இருக்கிறது, குளத்து புறம்போக்கு இருக்கிறது, பாட்டை புறம்போக்கு இருக்கிறது, கோவில் புறம்போக்கு இருக்கிறது, இப்படி பலவித புறம்போக்குகள் இருக்கின்றன. தீர்வையில்லா நிலங்கள் யாரைச்சார்ந்தது, கோவில் புறம்போக்கு யாரைச் சார்ந்தது, பாட்டை புறம்போக்கு யாரைச் சார்ந்தது, என்றால் அத்தனையையும் சர்க்கார் நிர்வாகத்தில் இருக்கின்றன. பஞ்சமாதரிசு என்றிருக்கிறது, அது வேதனை படவேண்டியது. திருவண்ணாமலை தொகுதியை எடுத்துக்கொண்டால், அங்கு ஆயிரம் ஏக்கருக்கு மேல் பஞ்சமாதரிசு நிலங்கள் இருக்கிறது. அங்கு மனிதர்கூட நடக்க முடியாத நிலையில்தான் அவையிருக்கின்றன. அதற்கு நான் கவலைப்படவில்லை, வேதனையடையவில்லை. ஆனால் தீர்வையில்லாத தரிசு நிலங்களை கருணை வாய்ந்த சர்க்கார் ஏழைகளுக்கு கொடுக்க வேண்டும்.

எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் ஒருவர் சொன்னார்; பட்டா கொடுத்துக்கொண்டு வருகிறோம், அதற்காக விழாக்கள் எல்லாம் கொண்டாடுகிறோம் என்றும் சொன்னார்கள். மேளதாளத்துடன் அமைச்சர் அவர்களை அழைத்து வந்து இந்த விழா கொண்டாடப்படுகிறது, இவ்விதம் பெருமைப்பட்டுக்கொள்வதில் அதில் என்ன இருக்கிறது என்பது தான் புரியவில்லை. 10 ஆண்டு காலம், 12 ஆண்டு காலம் ஒரே நிலத்தில் பயிரிட்டவன் பைன் கட்டியிருக்கிறான். பீ. மெம்மோ அபராதம் கட்டியிருக்கிறான், இவ்வளவு எல்லாம் இருக்கின்றன, அந்த விவசாயிக்கு

18th March 1961]     [Sri P. S. Santhanam]

நிலத்தை பட்டா செய்து கொடுங்கள் என்று கேட்டால் அதற்காக இந்த சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது, ஒன்றுமேயில்லை, இப்போது பஞ்சாயத் யூனியன் கையில் கொடுத்திருக்கிறார்கள். இந்த நிலை ஏற்பட்ட பிறகு இன்றைக்கு பயிரிட்டவர்கள் எல்லாம் அப்புறப்படுத்தப்படுகிறார்கள். ஆண்டு தோறும் ஜமாபந்தி நடக்கிறது, அதில் இந்த ஏழைகளினுடைய குறைகள் ஏதாவது கவனிக்கபடுகிறதா, 10 ஆண்டு காலம் பயிரிட்டேன், அல்லது 12 ஆண்டு காலம் பயிரிட்டேன் ஆகவே எனக்கு பட்டா செய்து கொடுங்கள் என்று கேட்க முடியுமா, அதுவும் முடியாது. இந்த நிலையில் பஞ்சாயத்து யூனியனில் கொடுக்கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். இதன் மூலம் எப்படி பட்டா செய்து கொடுக்கப் போகிறார்கள் என்றே புரியவில்லை. இந்த நிலையைப் போக்க வேண்டும். நிலம் இல்லாத விவசாயிகளுக்கு நிலம் கொடுக்க வேண்டும் என்று நாம் மட்டும் சொல்லவில்லை, நமக்கு முன்னால் உள்ளவர்களே சொல்லியிருக்கிறார்கள். காணி நிலம் வேண்டும் என்று பாரதியார் சொல்லியிருக்கிறார், உழுபவனுக்கு நிலம் சொந்தமாயிருக்க வேண்டும் என்று காந்தியார் சொல்லியிருக்கிறார், ஆனால் அதற்கெல்லாம் நாம் ஏதாவது வழிவகை செய்திருக்கிறோமா என்று பார்த்தால் உருப்படியாக ஒன்றும் செய்திருப்பதாக நம்மால் கண்டுகொள்ள முடியவில்லை. தோட்டி மான்யம் தலையாரி மான்யம் போன்ற பல வகை மான்யங்களை கொடுக்கப் போவதாக சொல்லப்பட்டிருக்கிறதே, ஆனால் அதற்கு எந்தவிதமான வழிவகையும் செய்யப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. அதுமட்டுமல்ல, 1958-ம் ஆண்டு பட்ஜெட் விவாதத்தில்கூட, தோட்டி தலையாரிகளுக்கு ஆடை வழங்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். அவர்கள் கிராம போலீஸ் என்று நாம் எல்லோரும் சொல்லுகிறோம். ஆனால் அவர்களுக்கு எந்தவித வசதியை நாம் செய்துகொடுத்திருக்கிறோம் என்பதையும் நாம் பார்க்க வேண்டும். ஊர்களுக்கு அமைச்சர்கள் வருகிறார்கள், கவர்னர் வருகிறார் என்று சொன்னால், வழியில் கிளர்ச்சிக்காரர்கள் தண்டவாளத்தை பெயர்த்து எடுத்துவிடுவார்கள் என்ற காரணத்திற்காக தண்டவாளத்தை பாதுகாக்க வேண்டும் என்றால் இந்த கிராம தலையாரிகள்தான் போய் இரவு முழுவதும் தீவட்டி பிடித்துக்கொண்டு காவல் காக்க வேண்டும். அப்பேர்ப்பட்டவர்களுக்கு என்ன வசதியிருக்கிறது ? தினப்படி கிடையாது, ரயில் சார்ஜ் வசதி கிடையாது, எந்தவிதமான வசதியும் அவர்களுக்கு கிடையாது. ஆனால் வில்லேஜ் போலீஸ், கிராம காவலாளி என்று பெருமையாக சொல்லிக்கொள்கிறோம். அவர்களுக்கு மற்றவர்களைப் போன்று நல்ல ஆடை தர வேண்டும் என்று இந்த மன்றத்தில் மூன்று ஆண்டு காலமாக சொல்லிகொண்டிருக்கிறோம். கிணற்றில் விழுந்து யாராவது செத்துவிட்டார்கள் என்றால், கிணற்றிலிருந்து பிரேதத்தை மாற்றுவது வரையிலும் இவர்கள்தான் காவல் காக்க வேண்டும். இப்பேர்ப்பட்டவர்களுக்கு இந்தச் சர்க்கார் என்ன வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள் ? மற்ற போலீஸ்காரர்களை எடுத்துக்கொண்டால் அவர்களுக்கு ஜீப் வசதிகள் எல்லாம் இருக்கின்றன. எனக்கு முன் பேசிய அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள், பஞ்சாயத்து யூனியனில் அதிகமான அளவில் உத்யோகஸ்தர்கள் இருக்கிறார்கள், இது அமைச்சர்கள் எல்லோருக்கும் தெரியும். அமைச்சர்கள் ஏதாவது ஒரு நிகழ்ச்சிக்கு வருகிறார்கள் என்றால் அந்த இடத்திலுள்ள கிராம சேவக்குகள், கிராம சேவிகைகள் உட்பட எல்லோரும் வருகிறார்கள், அவர்கள் எல்லாம் நல்ல உடை அணிந்து வருகிறார்கள், ஆனால் அந்தக் கிராமத்தின் உண்மை நிலை என்ன என்பதை எந்த அமைச்சர்களாவது பார்த்திருக்கிறார்களா என்பதை நாம் பார்க்க வேண்டும். அரிஜனங்களுடைய நிலங்கள் என்று கொடுப்பதில், ரெவின்யூ டிப்பார்ட்மென்டில் எவ்வளவோ கஷ்டங்கள் ஏற்படுகின்றன. உதாரணமாக செங்கம் தாலுகாவில் சொர்ப்பனம் என்ற

கிராமத்தில் நிலங்களை எடுப்பதற்காக மூன்று வருடங்களாக அதிகாரிகள் வந்து பார்வையிட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஒரு தடவை வந்து பார்த்த போது அது ஏதோ ஒரு நம்பரில் வருகிறது என்று சொன்னதின் பேரில் ஏதோ தருகிறேன் என்று சொன்னதின் பேரில், அடுத்ததாக வேறு ஒரு நம்பரை குறிப்பிட்டிருப்பதாகத் தெரிகிறது. இதே போன்றுதான் திருவண்ணாமலையில் பாப்பம்பட்டி என்ற இடத்திலும் நடந்திருக்கிறது. இதைப்பற்றி அமைச்சர் அவர்களுக்கு பெட்டிஷன்கள் வந்திருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே அரிஜனங்களுக்கு ஏராளமான நிலங்களை கொடுத்திருக்கிறோம் என்று ஏட்டளவில் மட்டும் சொல்லிவிட்டால் எந்த விதமான பலனும் இல்லை. ஆகவே சர்க்கார் இதைப்பற்றி நன்றாக யோசித்து துரிதமான நடவடிக்கை எடுப்பதற்கு முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* **SRIMATHI T. N. ANANTHANAYAKI** : கனம் தலைவர் அவர்களே, மாவட்ட நிர்வாகத்திற்காக அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்த மானியத்தின் பேரில் ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். லாண்ட் ரெவன்யூ நமது மாகாணத்தில் அதிகமாக வரவேண்டும் என்று நாம் எல்லாம் விருப்பப்படுகிறோம். 1953-54-ல் வந்த வருமானம் தான், 3 லட்சம் ஏக்கர் அதிகமாக விவசாயத்திற்கு வந்தும், ஏறத்தாழ அதே வருமானம் சுமார் 6 கோடி ரூபாய்தான் இப்போது வந்து கொண்டிருக்கிறது. இதில் எங்கோ தவறு இருக்கிறது, இதை கண்டு பிடித்து நீக்குவதற்கு வழிவகை செய்ய வேண்டும். மாவட்ட நிர்வாகத்தை எடுத்துக்கொள்ளும் போது அங்கு பலவிதமான தகராறுகள் ஏற்படுவதை நாம் பார்க்கிறோம். சட்டங்கள் எல்லாம் எப்படியிருக்கின்றன என்பதை அறியாத, படிக்காத பாமர மக்கள் ஒன்றும் தெரியாமல் சென்னைக்கு வந்து நேரடியாக அமைச்சர் அவர்களிடத்தில் வந்து முறையிட்டால்தான் தங்கள் குறை தீரும் என்ற அளவில் இங்கே கிளம்பி வந்துவிடுகிறார்கள். இதற்கு முக்கிய காரணம் கிராமங்களில் இருக்கின்ற கர்ணங்கள், கிராம முனிசீப் இவர்கள் தங்களுக்கு பிடிக்காதவர்கள் மீது என்னவெல்லாம் தொல்லைகளை கொடுக்கமுடியுமோ, அதற்காக முயற்சித்து வருகிறார்கள். சாதாரண கிராம மக்களுக்கு தங்களுக்கு அப்பீல் கொடுப்பதற்கு வேண்டிய காலம் இருக்கிறது என்பது எல்லாம் தெரியாமல் இங்கே புறப்பட்டு வந்து என் போன்ற வக்கீல்களை கண்டு அவர்கள் மூலமாகத்தான் தங்கள் குறைகளை தீர்த்துக்கொள்கிறார்கள். குறிப்பாக நிலம் ஜாரி செய்வதை எடுத்துக்கொண்டால் சிறிய கிராமங்களில், அரை செண்ட் அல்லது ஒரு செண்ட் இடத்தில் டீ கடை வைத்து நடத்துபவர்கள் சர்க்கார் நிலத்தை ஆக்கிரமித்து விட்டார்கள் (என்கிரோச்மென்ட்) என்றோ அல்லது சொந்தக் காரர்கள் நிலத்தில் பிரவேசித்து விட்டார்கள் என்றோ சொல்லி அவர்களை அப்புறப்படுத்த முயன்று வருகிறார்கள். அதே நேரத்தில் பெரிய கடை வைத் திருப்பவர்களை எல்லாம் அவர்கள் என்ன செய்திருந்தால் அவர்கள் பேரில் எந்தவிதமான நடவடிக்கையும் எடுப்பதில்லை. இப்போதுள்ள நிலையில் பஞ்சாயத் பிரசிடண்ட் அவருக்கு தேர்தல் வேலை செய்யவில்லை என்றுள்ள காரணத்தைக்கொண்டோ அல்லது வேறு ஏதாவது காரணத்தை எடுத்துக் கொண்டு அதற்காக தனக்கு பிடிக்காதவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கத் தூண்டி அவர்களை எவிக்‌ஷன் செய்வதற்கு நோட்டீஸ் கொடுக் கிறார்கள்.

(**Mr. Speaker in the Chair.**)

சாதாரணமாக பாதையை தடுக்கிறார்கள் என்றோ, அல்லது பொது இடங்களை தடுக்கிறார்கள் என்றோ ஏதாவது காரணத்திற்காக தாசில்தார் நடவடிக்கை எடுத்து, அதன் பின்னால் டி.ஆர்.ஓ. உத்தரவு போட்டாலும் கூட, அதன் மீது அப்பீல் போடுவதற்கு 30 நாட்கள் காலம் இருக்கிறது, இதையெல்லாம் தெரியாமல் கிராம அதிகாரிகள் உடனேயே நடவடிக்கை

எடுத்துவிடுகிறார்கள். குறிப்பாக வடுவூர் என்ற கிராமத்தில் இவ்விதம் உத்தரவு போட்டு, அதன் மீது அப்பீல் கொடுப்பதற்கு 30 நாட்கள் நேரமிருந்தும், உடனே அங்குள்ள கிராம அதிகாரிகள் டீ கடையைப் பிரித்து போட்டு விட்டார்கள். அங்குள்ள பஞ்சாயத் பிரசிடன்ட்டுக்கு பிடிக்கவில்லை என்ற காரணத்தின் பேரில், கிராம அதிகாரிகளை கையில் போட்டுக் கொண்டு, ஏதாவது நடவடிக்கை எடுத்து, அது சரியா அல்லது தவறு என்றுகூட பார்க்காமல் உடனேயே பிரித்து போட்டுவிடுகிறார்கள். இவ்விதமான அராஜக முறை கிராமங்களில் நடக்கும்போது, அந்த பழி காங்கிரஸ்காரர்கள் தலையில் வந்து விழுகிறது, அதன் பின்னால் அமைச்சரவையின் தலையில் வந்து விழுகிறது. இம்மாதிரியான காரியங்களை நமது ரெவன்யூ அமைச்சர் அவர்களிடத்தில் சொல்லும்போது அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுக்கிறார்கள், அதற்கு வேண்டிய உதவியும் செய்கிறார்கள், ஏழைகள் காரியம் என்று தெரிந்தவுடன் அதை ஆதரிப்பதிலும் அவர்கள் தயங்குவதில்லை, அதற்காக நான் அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன். கிராமத்தில் எந்த காரியத்தையும் தீர விசாரித்து அறியாமல், ஏதாவது டீ கடையை பிரித்துப் போட்டுவிட்டால், சென்னைக்கு ஓடிவந்து வக்கீலை பிடித்து அதன் பின்னால் அமைச்சர் அவர்களிடத்தில் போய்த்தான் காரியங்களை தீர்த்துக்கொள்ள வேண்டிமிருக்கிறது. அப்படியானால் மாவட்டத்தில் இருக்கின்ற அதிகாரிகள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்றுதான் நாம் கேட்க கடமைப்பட்டிருக்கிறோம். அங்கு ஏதாவது நடவடிக்கை எடுத்தாலும், அதன் பின்னால் அப்பீல் கொடுத்து, அதன் மீது ரெவன்யூ போர்டுக்கு ரிப்போர்ட் வந்து சட்ட பூர்வமாக அப்பீல் கொடுப்பதற்கு 30 நாட்கள் அவகாசம் இருக்கிறது, ரிவிஷன் கொடுப்பதற்கு 60 நாட்கள் அவகாசம் இருக்கின்றது. இதன் பின்னால்தான் நடவடிக்கை ஏதாவது எடுக்க முடியும். அதல்லாமல், ஏதோ ஒரு பெரிய வீடு வாசலில் அரை சென்ட், அல்லது கால் சென்ட் அதிகமாக இருக்கிறது என்று 30 அல்லது 40 வருடங்களுக்குப் பின்னால் கண்டுபிடிக்கிறார்கள். இதில் அடிப்படையாக ஒரு காரணம் இருக்கும். 11-60 a.m. கண்டுபிடித்தவர்கள் அதற்கு மேல் அப்பீல் டைம் இருக்கிறது என்பதை விட்டு விட்டு, ரிவிஷன் டைம் இருக்கிறது என்பதை விட்டு விட்டு, இன்றைக்கு உத்திரவு போடுவது, நாளைக்கே கடப்பாரையோடு நிற்பது என்ற முறையில் நடந்து கொள்கிறார்கள். இப்படி இவர் கடப்பாறைகளோடு நிற்பது கிராம மக்களின் மத்தியில் கொந்தளிப்பையும் குழப்பத்தையும் உண்டாக்குகிறது. நேற்றுத்தான் உத்திரவு போட்டார்கள், இன்றைக்கை கடப்பாரையோடு நிற்கிறாரே இடித்து விட்டால் என்ன செய்வது ? போர்டோ அல்லது அரசாங்கமோ பார்த்து என்க்ரோச்மெண்ட் இல்லை என்று சொல்லிவிட்டால் கட்டிக் கொடுப்பாரா என்று கேட்கிறார்கள். இப்படி அப்பீல் டைம் இருந்தால், அல்லது ரிவிஷன் டைம் இருந்தால் அத்தகைய கேஸ்களில் கிராம அதிகாரிகளும், அதே போன்று மாவட்ட அதிகாரிகளும் உள்ள காலம் வரையில் பொறுத்துத்தான் மற்றவைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே போன்று ஹரிஜனங்களுக்கென்று வீடுகள் கட்ட நிலங்களை எடுக்கிறோம். சீக்கிரமாக அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறோம். சில ஊர்களில் அரசியல் காரணத்திற்காக கர்ணமோ அல்லது அங்கு இருக்கக் கூடிய அரசியல்வாதியோ தனக்குப் பிடிக்காத ஒருவருடைய நிலத்தைப் பார்த்து அதை எடுத்துக்கொள் என்று சொல்லுகிறார்கள். உதாரணமாக தஞ்சை ஜில்லாவில், திருவாரூர் தாலுகாவில் ஒருவருக்கு 1½ ஏக்கர்தான் இருக்கிறது. மிகச் சிறந்த விளைநில பூமி. கனம் கக்கன் அவர்களை அழைத்துக்கொண்டு போய்க் கூட்க் காட்டினோம். கர்ணத்திற்கும் அவருக்கும் கொஞ்சம் ஆகாது. ஆகையால் வீடு கட்ட அந்த நிலத்தை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னார். அவருடைய சொந்தக்காரர் ஒருவர்—அவருடைய மாமன்—

[Srimathi T. N. Ananthanayaki] [18th March 1961

பெரும் பணக்காரர். அவர் சொன்னார், அவனுக்கு இருக்கக் கூடியது இந்த 1½ ஏக்கர்தான், அதை எடுத்துக்கொள்ள வேண்டாம், நான் வேண்டுமானால் காசில்லாமல் எனது புஞ்சை நிலத்தைக் கொடுக்கிறேன், அங்கே கட்டிக்கொள்ளுங்கள் என்று சொன்னார். ஆனால் அந்த அரசியல் சக்தி விளை நிலத்தைத் தவிர வேறு நிலத்தை ஒத்துக்கொள்ளாது. அங்கு இருக்கக்கூடிய மக்களை உந்தி விட்டு பின்னால் இருந்து வேலை செய்தால் அவர்களுக்கும் சங்கடம், அரசாங்கத்திற்கும் சங்கடம், விளை நில பூமியும் போகிறது. அந்த இடம் மதராஸ் ஸிட்டி போன்று 10 மைல் விஸ்தீரணம் ஒன்றும் கிடையாது. வீடு கட்டக் கூடிய இடத்திற்கும் வேலை செய்யும் இடத்திற்கும் ஒன்றும் ரொம்ப தூரம் கிடையாது. உணவுப் பொருள் விளையக் கூடிய நல்ல வளமுள்ள பூமி நஞ்சை நிலம் வேண்டாம், நல்ல மேட்டுப் பாங்கான புஞ்சை நிலம் கொடுக்கிறோம், அதுவும், காசில்லாமல் கொடுக்கிறோம் என்று சொன்னால் அங்கே இருக்கிற தொல்லை கொடுக்கும் கிராம அதிகாரி கூடாது கூடாது அவன் நிலத்தைத்தான் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்லுகிறார். லாண்ட் அக்விஸிஷன் ஆக்ட் படி கோர்ட்டுக்குப் போகும் அதிகாரம் குறைவு. மால ஃபைடி அக்விஸிஷனா அல்லது போன ஃபைடி அக்விஸிஷனா என்ற முறையில் தான் போகலாமே தவிர மற்றப்படி கோர்ட் தலையிடுவது மிக மிகக் குறைவு—கூடவும் கூடாது. அந்த அதிகாரம் அவ்வளவும் அரசாங்கத்தின் கையில்தான் இருக்கிறது. பொஸெஷனை எடுத்து விட்டால், பிற்பாடு அந்த வித அக்விஸிஷன் வேண்டாமென்று பின்வாங்குவது கஷ்டம். வேண்டுமானால் எமெர்ஜென்ஸி நோட்டிபிகேஷன் போட்டு, 4, 5, 6 செக்ஷன்களையெல்லாம் ஒரே தாண்டாகத் தாண்டி—வேண்டும் காலத்தில் இந்த மாதிரி தாண்டமாட்டார்கள்—வேண்டாதவர்களுடைய நிலத்தை எடுத்துகொள்வதற்காக, குறும்புத்தனம் பண்ணவேண்டு மென்பதற்காகத் தாண்டி, பேப்பரில் பொஸெஷன் எடுத்து விட்டால் பிற்பாடு அமைச்சரே நேரில் போய்ப் பார்த்து, இது அநியாயம் என்ற முடிவுக்கு வந்தால்கூட பின் வாங்க முடியாத நிலை ஏற்படுகிறது. இதையெல்லாம் பார்க்கும்போது கிராம அதிகாரிகளுக்கு இன்னும் நல்ல பயிற்சி தர நாம் கடமைபட்டிருக்கிறோம். இப்படியெல்லாம் செய்தால், சட்டம் தெரியாமல் செய்தால் அதனால் சங்கடங்கள் அதிகரிக்கிறது என்பதை அவர்களுக்கு தெளிவுபடுத்த வேண்டும். இதனால் வீடு கட்டும் வேலையும் தாமதப்படுகிறது. இதே மாதிரித்தான் கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் சொன்ன சம்பவமும். இப்படிப்பட்ட தொல்லையெல்லாம் நம் நிர்வாகத்திலிருந்து நீங்கினால்தான் மக்களுடைய நன்மை பெருக முடியும். மாவட்ட நிர்வாகத்தில் இந்த மாதிரி நிலை இருந்தால் மக்களிடையே கொந்தளிப்பு ஏற்படுகிறது. அதே போன்று சேலம் மாவட்டத்திலே 4—5 பேர்கள் சேர்ந்து ஒரு இடத்தை உழுதுகொண்டு வந்தார்கள். 10 ஆண்டு காலமாக உழுதுகொண்டு வந்திருந்தும் 'பி.' மெமோ கொடுத்தார்கள். கடைசியாக ஜாரி செய்யலாம் என்று தாசில்தார் வந்தார். வந்த தாசில்தார் குப்பன் உழுதுகொண்டு இருந்த இடத்தை சுப்பனுக்கு அஸைன்மெண்ட் செய்தார், சுப்பன் உழுதுகொண்டு இருந்த இடத்தை இன்னொரு அப்பனுக்கு அஸைன்மெண்ட் செய்தார். மக்களுக்கு நல்ல முறையில் ஜாரி செய்ய இருக்கிறார்களே தவிர தொல்லை கொடுப்பதற்காக இல்லை. கிராமத்திலுள்ள மக்கள் அப்பாவி மக்கள். அவர்களுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை, யாரை என்ன கேட்பது என்று தெரியவில்லை. நிலம் இல்லாதவர்கள் உழுதுகொண்டு வருகிறார்கள். அவனவன் உழுவதை அவனவனுக்கு ஜாரி செய்தால் ஒரு தொல்லையும் இல்லை. அவன் உழுததை இவனுக்குக் கொடுத்து, இவன் உழுததை இன்னொருவனுக்குக் கொடுத்து, இந்த மாதிரி செய்வதைத் தவிர்க்க வேண்டும். அப்படிக்கில்லாமல் மாவட்ட அதிகாரிகள் தாங்கள் நினைத்ததைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

[18th March 1961 [Srimathi T. N. Ananthanayaki]

இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். செங்கற்பட்டில் ஒரு தகராறு. ஒருவர் கிஸ்தி கட்டிவிட்டார். ரசீதைக் கூட காட்டுகிறார்கள். அப்படிச் செய்தும் கிஸ்தி கட்டவில்லை என்று பிரிந்துவிட்ட குடும்ப சொத்துக்கு கிஸ்தி கட்டவில்லையென்று மாடுகளைப் பிடுத்திக்கொண்டு போகிறேன் என்று பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அவருக்கு இருக்கும் சொத்தை 8 பேர்களுக்கும் கொடுக்கலாம். அவர் 4 மாதங்களாக மாவட்ட அலுவலகத்திற்கும் செக்ரெட்டேரியட்டுக்கும் அலைகிறார். இன்னும் மாடு வரவில்லை. எல்லாவற்றையும் தலைமை நிர்வாகத்தில் சொல்லிக்கொண்டிருக்க முடியுமா என்பதைப் பார்க்க வேண்டும். முடிந்த வரையில் மாவட்ட நிர்வாகங்களில் என்னவாவது தவறு ஏற்பட்டு அப்படிப்பட்ட கேஸ்கள் அமைச்சருக்கு அல்லது செக்ரெட்டேரியட் அதிகாரிகளுக்கு வந்தால் அவர்களுக்கு தக்க தண்டனை கொடுத்தீர்களானால் மறுபடியும் அத்தகைய தொல்லைகளைக் கொடுக்க மாட்டார்கள்—தவறுகளைச் செய்ய மாட்டார்கள். இப்படிப்பட்ட தொல்லைகளையெல்லாம் நீக்கி அமைச்சர் அவர்கள் மாவட்ட நிர்வாகம் திறமையோடு நடக்க வழி செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக ரிஜிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்டில் சம்பளம் ரொம்பக் குறைவாக இருக்கிறது. ஆகையால்தான் ரிஜிஸ்டர் செய்வதில் லஞ்ச ஊழல்களெல்லாம் வருகின்றன. வேறு இலாகா மாதிரி வேறு வழிகளில் வாங்க முடியாது. ஆகையால் அவர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்தால் கொஞ்ச நஞ்ச ஊழலும் போய் விடும். அவர்களுடைய சம்பளத்தை உயர்த்துவதில் அக்கறை காட்டவேண்டுமென்று கூறி முடித்துக் கொள்கிறேன்.

**Sri M. K. SOMASUNDARAM**: தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற மான்யத்தை ஆதரித்து சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். இப்போது நம் மாநிலத்தில் விவசாயம் நன்றாக நடக்க வேண்டும், அதற்காக அரசாங்கம் அவர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்று பல சட்டங்களைக் கொண்டு வந்திருக்கிறோம். அத்தகைய சட்டங்கள் சரிவர நடைபெறுகின்றனவா என்று ஆராய வேண்டும். நியாய வாரச் சட்டம், கையேர் மாட்டு வாரச் சட்டம் போன்ற சட்டங்கள் கொண்டுவரப்பட்டு விவசாயிகளுக்கு நன்மை செய்யவேண்டுமென்று இருக்கும்போது கிராமத்திலுள்ள விவசாயிகள் பல தொல்லைகளுக்கு ஆளாகிறார்கள். கிராமங்களிலே உள்ள கர்ணமும் மற்ற கிராமத் தலைவர்களும் கொடுக்கும் தொல்லை அதிகமாக இருக்கிறது. சர்க்காரிலே இவைகளெல்லாம் சரிவர நடைபெறுகிறதா என்று சிந்தித்துப் பார்த்து தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பொதுவாக கிராமங்களில் கர்ணங்கள் செய்கிற வேலைகளைக் குறித்து அதிகாரிகள் தக்க நடவடிக்கை எடுப்பதில்லை என்று நான் கருதுகிறேன். ஒரு புறம்போக்கு இடத்தில் பல காலமாக இருந்து விவசாயம் செய்துகொண்டிருக்கிற ஒரு விவசாயியை அப்புறப்படுத்தவேண்டுமென்று அவர்களுடைய நோக்கமாக இருக்கிறதே தவிர, நிலம் இல்லாதவருக்கு நிலத்தைக் கொடுத்து, நன்றாக விவசாயம் செய்து, உணவு உற்பத்தியை அதிகரிக்கச் செய்யவேண்டுமென்ற நோக்கம் இல்லை என்பதைத் தாழ்மையாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக 12—13 ஆண்டுகளாக ஒரு விவசாயி புறம்போக்கு நிலத்தை உபயோகித்துக் கொண்டிருக்கும்போது இவ்வளவு காலம் ஆகிய பிறகு நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். விவசாயிகளுக்கு நாம் ஊக்கம் அளித்து விவசாயத்தை அபிவிருத்தி செய்ய முயற்சி செய்ய வேண்டுமேயல்லாமல், காலி செய்யவேண்டுமென்று சொன்னால் விவசாயி எப்படி ஊக்கத்துடன் வேலை செய்ய முடியும்? எப்படி நாம் விவசாயத்தை அபிவிருத்தி செய்ய முடியும் என்று சிந்திக்க வேண்டும்.

இன்றைய தினம் ஒவ்வொரு ஆண்டும் 'பி' மெமோ கொடுத்து தண்டத் தீர்வை கட்டவேண்டிய நிலை இருக்கிறது. அதே சமயத்தில் அவர்கள் இரண்டுவித தண்ணீரை உபயோகப்படுத்த வேண்டியிருக்கிறது திருநெல்வேலி ஜில்லாவிலே. ஒன்று மணிமுத்தாறு தண்ணீர், மற்றொன்று தாம்பிரபரணி தண்ணீர். அவர்கள் இரண்டுக்கும் இரண்டு தீர்வை செலுத்த வேண்டியிருக்கிறது. அதைப்பற்றி அமைச்சருக்கு பல மனுக்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. இரண்டு தண்ணீரை உபயோகப்படுத்தினாலும் ஒரு தீர்வை போடவேண்டுமென்று கேட்டிருக்கிறார்கள். அதை அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து கவனிக்க வேண்டும். இரண்டு தீர்வை கொடுக்க வேண்டுமென்று சொல்லுவதில் ஹரிஜன மக்கள் பாதிக்கப்படுகிறார்கள்—விவசாய மக்கள் பாதிக்கப்படுகிறார்கள். 10—15 ஆண்டு காலமாக உழுது விவசாயம் செய்துகொண்டிருக்கிற புறம்போக்கு நிலத்தை ஜாரி செய்து கொடுக்கவில்லையென்றால் அவர்கள் என்ன செய்ய முடியும். அவர்கள் எம்.எல்.ஏ.-யிடம் சொல்லி எம்.எல்.ஏ.-க்கள் அதிகாரிகளை அணுகினால் அவர்கள், நாங்கள் சர்க்கார் நிலத்தை சும்மா எப்படி கொடுப்பது என்று சொல்லுகிறார்கள். விவசாயம் செய்துகொண்டிருக்கின்ற நிலத்தைத்தானே கொடுக்கச் சொல்லுகிறோம், அவர்களுக்கு வேறு நிலம் கிடையாது, சொத்து கிடையாது, அந்த நிலத்தை ஜாரி செய்து கொடுக்கவேண்டுமென்று சொன்னால், நிர்வாகத்திலே தலையிடுகிறீர்களே என்று கேட்கும் நிலை இருக்கிறது.

நமது நண்பர் ஒருவர் சொன்னார், ஏதோ ஆளும் கட்சிக்கு எல்லாம் உடனடியாக நடக்கிறது என்று. ஆனால் நான் நினைக்கிறேன். எதிர்க்கட்சியினர் சொன்னால்தான் எல்லாம் உடனடியாக நடக்கிறது. என்று நான் அந்த அளவுக்கு இல்லாமல், யார் சொன்னாலும் அதிகாரிகள் நன்றாக மனுக்களை பரிசீலனை செய்து ஒழுங்காக தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். அது எம். எல். ஏ. வாக இருந்தாலும் சரி, அல்லது எந்தக் கட்சியைச் சார்ந்தவராக இருந்தாலும் சரி, நிர்வாகப் பொறுப்பில் இருக்கக் கூடியவர்கள், அந்த மனுக்களை நல்ல முறையிலே பரிசீலனை செய்து, யார் யாருக்கு என்னென்ன வசதிகளைச் செய்து [கொடுக்கவேண்டுமோ, அவைகளைச் செய்ய வேண்டுமென்று நான் இந்த சமயத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

பொதுவாக, நிர்வாக அதிகாரிகள் சரியான முறையிலே சில காரணங்களால் வேலையை ஒழுங்காகச் செய்ய முடிவதில்லை. அவர்கள் நிர்வாகத்திலே இருக்கிற ஊழல்கள் ஒருபக்கம் இருந்தாலுங்கூட, அவர்களுக்கு குடியிருப்புக்காக வீட்டு வசதி கிடையாது என்ற ஒரு குறை இருந்து கொண்டிருக்கிறது. அதனால் நிர்வாகத்தில் அடிக்கடி லீவ் எடுக்கின்றார்கள். அப்படி லீவ் அடிக்கடி எடுப்பதால், மனுக்கள் சரியாக பரிசீலனை செய்யப் படாமல், பென்டிங்காக இருக்கிறது. ஆகவே, இந்த நிலைமையைப் போக்க நிர்வாக அதிகாரிகளுக்கு ஆங்காங்கே வீடுகள் கட்டிக் கொடுக்க முன் வர வேண்டும். அப்போதுதான் நிர்வாகம் ஒழுங்காக நடக்க முடியுமென்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைக்கு நாம் லட்சக்கணக்கான ரூபாய்களை ஒவ்வொரு பிளாக்கிற்கும் செலவழிக்கின்றோம். அப்படி ஒதுக்கப்படுகின்ற பணத்தை, அங்குள்ள நிர்வாக அதிகாரிகள் நல்ல முறையிலே செலவழிக்கின்றார்களா என்று பார்த்தால், பொறுப்பின்றிதான் செலவழிக்கிறார்கள் என்று நான் சொல்வேன். ஆகவே, பிளாக்குகளில் விவசாயம் நல்ல முறையிலே செய்வதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும். ஊக்கம் அளிப்பதன் மூலமாகத்தான் நாம் விவசாய அபிவிருத்தி செய்ய முடியுமென்று நான் எடுத்துக்கூற விரும்புகிறேன். சாதாரணமாக, விவசாயிகளுக்கு கடன் கொடுக்கிற முறையிலே, பல வகைகளிலே கடன் கொடுக்கிறார்கள். ஒருவருக்கு 2, 3 வீதங்களிலே, கடன் கொடுத்து, 3 வருஷங்கள் கழித்த பிறகு

18th March 1961] [Sri M. K. Somasundaram]

எல்லாக் கடன்களையும் ஒருமுகமாகத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று சொல்லி, வசூலிக்க முற்படுகின்றபோது விவசாயிகள் மிகவும் கஷ்டப்படு கிறார்கள். அதிகாரிகளாக இருக்கக்கூடியவர்கள் இதையெல்லாம் கவனித்து, அந்தந்தக் கடன்களுக்கு அவ்வப்போது, அந்தந்த வருஷங்களிலேயே வசூல் செய்ய வேண்டும். அப்படி வசூல் செய்வதையும் அறுவடை நேரத்திலே அந்தந்த வருஷத்திலே வந்து வசூல் செய்ய வேண்டும். இப்படி வசூலிக்காமல் அதிகாரிகள் சும்மா இருந்துவிட்டு, குறிப்பிட்ட நேரத்திலே அரசாங்கத்திலிருந்து கேட்கின்ற நேரத்தில் மொத்தமாக எல்லாக் கடன்களையும் வசூலிப்பதற்கு நோட்டீஸ் கொடுத்தால், விவசாயிகள் எந்த நிலைமையில் இருப்பார்கள் என்பதை நாம் சிந்திக்க வேண்டும். இதற்கெல்லாம் கனம் மந்திரி அவர்கள் உடனடியாக ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். இனம் நிலங்களை பயிரிடுகின்ற நேரத்தில், நிலத்திற்கு செட்டில்மெண்ட் ஆகியிருக்கக்கூடியவர்கள், செட்டில்மெண்ட் ஆகிக்கொண்டிருக்கக்கூடியவர்கள் டெம்பரவரி பட்டா வாங்க வேண்டியிருக்கிறது. இந்த பட்டாவை வாங்குவதற்கு ராமநாதபுரம் போக வேண்டியிருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவிலுள்ளவர் தன் நிலத்திற்கு இந்த டெம்பரவரி பட்டா வாங்குவதற்கு ராமநாதபுரத்திற்கு போய் வர வேண்டுமென்றால், என்ன செலவாகும் என்று நான் கேட்க விரும்புகிறேன். ஆகவே, இனம் ஒழிப்பு செட்டில்மெண்ட் ஆகும்போது, இந்த ஆபீசுகள் ஒவ்வொரு ஜில்லாவிலும் இருக்க வேண்டும். அந்த முறையிலே அந்தந்த ஜில்லாக்களிலே டெம்பரவரி பட்டா வாங்குவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று நான் வற்புறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஏனெனில் விவசாயிகள் எவ்வளவு கஷ்டமான நிலையில் இருக்கிறார்கள் என்பதை நாம் சிந்திக்கவேண்டும். அவர்கள் ஒரு ஜில்லாவை விட்டு அல்லது 3 ஜில்லாக்களுக்குப் பிறகு போய் பட்டா பெற்றுக் கொள்வதற்கேற்ற வசதி அவர்களுக்குக் கிடையாது. ஆகவே அவர்கள் நல்ல முறையிலே விவசாயம் செய்வதற்குத் தகுந்தாற்போல், இதை வசதியான முறையிலே மாற்றியமைக்கவேண்டும். இதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் உடனடியாக கவனித்து, விவசாயிகளுக்கு நன்மை செய்யக்கூடிய அளவிலே ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தவிர, ஹரிஜனங்களுக்கு நல்ல முறையிலே புறம்போக்கு நிலங்களை ஜாரி செய்து கொடுக்க வேண்டும். அதற்கு அந்த நிலங்கள் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு தாலுகாவிலும் எவ்வளவு புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன என்பதை கணக்கெடுத்து, யார் யாருக்குக் கொடுக்க வேண்டுமென்பதை கணக்கெடுத்து நல்ல முறையிலே ஜாரி செய்தால் ஏழைகளுக்கு நிலம் கிடைத்து, விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கு வசதியாக இருக்கும். அப்படி கொடுக்கும்போது அந்த நிலங்களில் உள்ளவர்கள் நல்ல முறையிலே விவசாயம் செய்யாமல், தரிசாகவே அப்படியே வைத்திருந்தால், அப்படிப்பட்டவர்களிடமிருந்து வேண்டுமென்றால் நிலங்களை எடுத்துக்கொள்ளலாம். இந்த முறையிலே ஒரு திட்டத்தை வகுத்து, ஏழைகளுக்கு, ஹரிஜனங்களுக்கு வசதி செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களுக்கு வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். அப்படி செய்தால், ஏழைகளுக்கும் அவர்களுடைய தொல்லை தீரும். நாட்டிலேயும் விவசாய அபிவிருத்தி நல்ல முறையில் ஏற்படும்.

இந்த நேரத்திலே நான் ஒன்றை மட்டும் குறிப்பாகக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். மணிமுத்தாறு, தாமிரபரணி ஆகிய பாய்ச்சலுக்கு இரட்டைத் தீர்வை போடப்படுகிறது. இதை ஒரே தீர்வையாக போடவேண்டுமென்று இந்தச் சமயத்தில் கேட்டுக்கொண்டு, இந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்த தலைவர் அவர்களுக்கு நன்றி செலுத்திக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

*SRI S. **RAMASWAMI THEVAR** : கனம் தலைவர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கையைப் பற்றிப் பேசும்போது கோடானு கோடி குறைகளைச் சொல்ல முடியும். இதிலே பல குறைகள் இருக்கிறது என்றாலும், விவாதத்திற்கு குறைவான நேரம் கொடுத்துள்ளபடியால், ஒன்றிரண்டு குறைகளைக் கூறுகிறேன். இதுபற்றி ஏற்கனவே கவர்னர் பெருமானுடைய உரையின்மீது நடந்த விவாதத்தில் சொல்லியிருக்கிறேன். இன்னும் சில குறைகளை இப்போது சொல்ல விரும்புகிறேன்.

ஜமீன் நிலங்கள், இனாம் நிலங்கள் மாற்றப்பட்ட பகுதிகளிலே இருந்து, அதாவது 1361-வது பசலியிலிருந்து, நாளது வரைக்கும் வசூல் நல்ல முறையில் இல்லை. வசூல் பெரும் கடுமையாக நேர்மையற்ற முறையில் இருக்கிறது. கணக்கு வழக்கே இல்லையென்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இதுபற்றி இன்னும் பலது சொல்லலாம். நேரம் குறைவாக இருப்பதால், ஒன்றிரண்டு விஷயங்களைப் பற்றி மட்டும் சொல்கிறேன்.

இன்று ஆளும் கட்சி அங்கத்தினர்கள் கூட ஆங்காங்கு நடக்கக்கூடிய குறைகளை மிகவும் நல்ல முறையிலே எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதற்காக நான் அவர்களைப் பாராட்டுகிறேன். முக்கியமாக ஒருவன் ஒரு நிலத்தை கிரயம் வாங்கும்போது, நான் இந்த நிலத்தை கிரயத்துக்கு இன்னாரிடமிருந்து வாங்கினேன் என்று கையெழுத்து போட்டு, எனக்கு அந்த நிலத்திற்கு பட்டா கொடுக்க வேண்டுமென்று கேட்டு, பத்திரம் பதிவு செய்யப்படுகின்றது. சில இடங்களிலே பட்டாவிற்காக ஸ்டாம்புகூட கட்ட வேண்டியிருக்கிறது. பேராவூரணி சப்-ரிஜிஸ்தரார் ஆபீசிலே ஒரு ரூபாய் ஸ்டாம்பு ஒட்ட வேண்டுமென்று சொல்லி ஒட்டப்பட்டு வருகிறது. அப்படிச் செய்தாலும் உடனடியாக பட்டா கொடுப்பதற்கு முற்படுவதில்லை. அந்த பட்டா பாரம் எஸ்டேட் மானேஜ்மெண்ட் தாசில்தாருக்கு அனுப்பப்பட்டு, பின்பு கிராம கணக்குப் பிள்ளைகளுக்கு அனுப்பப்பட்டு வருகின்றன. இவர்கள் உடனடியாக பட்டாவை மாற்றுவது கிடையாது. அப்படி மாற்ற வேண்டுமென்றால், பல முறை நேரில் சென்று கொஞ்சம் கொடுத்து கெஞ்ச வேண்டியிருக்கிறது. அப்படி கெஞ்சிய பிறகே மாற்ற வேண்டியிருக்கிறது. அப்படி கெஞ்சி பட்டா வாங்கிய பிறகுகூட, ஏற்கனவே நிலத்திற்கு வரி கட்டவில்லையென்று நம்மிடம் வரி கொடுக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது. இதைச் சர்க்கார் கவனித்து, இந்தக் குறைகளையெல்லாம் நீக்கவேண்டும்.

அடுத்ததாக, ஒரு நிலம் பலருக்குச் சொந்தமாக இருக்கிறது. அந்த நிலமானது பலர் பெயரிலே கூட்டுப்பட்டாவாக செட்டில்மெண்ட் ஆகியிருக்கிறது. அதற்கான வரியை அந்த நிலத்திற்குச் சொந்தமான பலரிடம் அவர் அவர் வீதத்தை வசூல் செய்ய வேண்டும். ஆனால் இதிலே பல கெடுபிடி செய்யப்படுகிறது. ஒவ்வொருவருக்கும் இவ்வளவு சென்ட் நிலங்கள் என்று குறிப்பிட்ட கணக்கிருந்தாலும், ஒவ்வொருவரிடமும் அந்த நிலத்திற்குரிய முழு வரியைக் கட்டவேண்டுமென்று பொறுப்பில்லாமல் நடந்துகொள்ளுகிறார்கள். யார் யார் பேரில் நிலம் செட்டில்மெண்ட் ஆகியிருக்கிறதோ, அவர்கள் எல்லோரும் வரி கொடுக்க வேண்டுமென்று சொல்லக்கூடிய அளவிலே கெடுபிடி வசூல் செய்யப்படுகிறது. அம்மாதிரியாக வசூலிக்கவும்படுகிறது. இந்த நிலைமையையும் போக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கூட்டுப் பட்டா நிலங்களுக்கு விகிதப்படியே வசூல் செய்யவேண்டும்.

ஒரு விஷயத்தை நான் அடிக்கடி சொல்லிக்கொண்டு வருகிறேன். இந்த மன்றத்திற்கு வந்த நாள் முதல் கொண்டு, வரி வசூலிக்கப்படுவதற்கு சரியான முறையிலே கணக்கு கொடுப்பதில்லை யென்பதை நான் சொல்லிக்கொண்டு வருகிறேன். ஒருவனுக்கு பாக்கி இருக்கிறது. டிமாண்ட் நோட்டீஸ் அனுப்பப்படுகிறது. ஆனால் அவன் அந்த பாக்கியைக் கட்டுவதற்கு விவரம் கேட்டால் கொடுப்பதில்லை. 65-ம் நெம்பர் பட்டா, இவ்

வளவு பாக்கி, இவ்வளவு பணத்தை உடனடியாக இத்தனை நாட்களுக்குள் கட்ட வேண்டும், தவறினால் ஜப்தி என்ற அளவுக்குத்தான் நோட்டீஸ் அனுப்பப்படுகிறதே ஒழிய, அந்த டிமாண்டு நோட்டீசிலே அவன் சாகுபடி செய்யக்கூடிய நிலம் இவ்வளவு, அதிலே சாகுபடி செய்திருக்கக்கூடிய நிலம் விஸ்தீர்ணம் இவ்வளவு, அதற்கு இவ்வளவு பணம் என்ற விவரத்தைக் கொடுத்தால் என்ன ? கோர்டுக்குப் போனாலும் கூட, பிரதிவாதி செலுத்த வேண்டிய தொகைக்கு விவரம் கொடுக்கிறார்கள். இங்கு விவரம் கேட்டாலும் கொடுப்பதில்லை. இந்தமாதிரி பல தகராறுகள் என்னுடைய தொகுதியிலேயும், பட்டுக்கோட்டை பகுதிகளிலேயும் நடந்துகொண்டு வருகிறது. நிலம் விஸ்தீரண விவரத்தோடு கணக்குகள் கொடுக்கும்படி உத்தரவு போடவேண்டும்.

சமீப காலத்திலே, பேராவூரணி பக்கத்து கழனிவாசல் கிராமத்தில் நல்ல அந்தஸ்தில் உள்ளவருடைய மாடுகளை 15–2–61-ல் ஜப்தி செய்தார்கள். அவர் உடனே ஆர்.டி.ஓ.-விடம் சென்று, நான் இப்போது பணத்தைக் கட்டுகிறேன். ஆனால் எனக்கு கணக்குதான் வேண்டும், நான் இவ்வளவு செலுத்த வேண்டுமென்பதற்கு கணக்குக் கொடுங்கள் என்று கேட்டார். உடனே ஆர்.டீ.ஓ. அவர்கள் டிப்டி தாசில்தாரையும், கணக்குப் பிள்ளையையும் கணக்கு பார்த்து கொடுக்கும்படி கூறினார்கள். ஆனால் இன்னும் கணக்கு கொடுக்கவில்லை. எத்தனை நாட்களுக்கு மாடுகளை பவுண்டில் விட்டுவைப்பது. பணத்தைக் கட்டிவிட்டு மாடுகளை ஓட்டிக்கொண்டு வரக்கூடிய நிலைமைதான் இன்றிருக்கிறது. ஆனால் அவர் மாடுகளை ஓட்டிக்கொண்டு வந்த பின் மறுபடியும் கணக்கு கொடுக்க வேண்டுமென்று நகல் மனு போட்டார்கள். ஒரு மாதமாகியும் நகல் கிடைக்கவில்லை. இம்மாதிரியான கஷ்ட நிலைமைதான் இன்றிருக்கிறது. கேட்கும்போதே கணக்குகள் கொடுக்க வேண்டுமென்ற விதி ஏற்படவேண்டும். பட்டுக்கோட்டை அறந்தாங்கி பகுதிகளிலே அம்மாதிரி இருக்கிறது. இந்த இலாகா பணம் வசூல் செய்வதில் மட்டும் கண்ணும் கருத்துமாக இருக்கக்கூடாது. பணம் வசூல் செய்யப்படும்பொழுது நியாயமான முறையில், நேர்மையான வழியில் வசூல் செய்யப்படவேண்டும். ரெவின்யூ போர்டார் ஒரு வாரத்திற்கு, ஒரு மாதத்திற்குள் அதிகாரிகள் இவ்வளவு வசூல் செய்யவேண்டும் என்று டார்ஜெட் நிர்ணயம் செய்து அந்த டார்ஜெட்படி வசூல் செய்யாவிட்டால் அதிகாரிகள் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள் என்றுகூட சொல்லப்படுகிறது. ஆபீசர்களைக் கேட்டால் "நாங்கள் என்ன செய்வது, மேல் அதிகாரிகள் உத்திரவுப்படி நடக்க வேண்டும்" என்று சொல்லுகிறார்கள்.

எங்கள் பகுதியிலே எங்கு பார்த்தாலும் பணம் கையாடல், சொல்லுவதற்கே வெட்கமாக இருக்கிறது. ஒரு வட்டத்தில் இல்லை. 20, 30 வட்டங்களில் ஆயிரக்கணக்கான ரூபாய் கையாடல் செய்யப்பட்டிருக்கிறது. மக்கள் ரசீது வைத்திருக்கிறார்கள். ரசீதைக் காண்பிக்கிறார்கள். இதைப் பார்க்கவே அவர்களுக்கு வெட்கமாக இருக்கிறது. திருநாளூரில் ஒருவர் லோனைத் திருப்பிக் கட்டினதற்கு ரசீது காண்பித்தார்கள். "ரசீதை வைத்துவிட்டு போங்கள், பரிசீலனை செய்கிறோம்" என்று சொன்னார் ரெவின்யூ இன்ஸ்பெக்டர். வவுசர் கொடுங்கள் என்று கேட்டால், கொடுக்க முடியாது என்று சொல்லுகிறார். ரசீது இருந்தும் இவர் மாடுகள் ஜப்தி செய்யப்பட்டிருக்கிறது. ஆயங்குடி வட்டம் மணியக்காரர் கொஞ்சம் செல்வாக்கு பெற்றவர். அவருக்கு அனுசரணையாக ரசீதைக் காண்பித்தால் ரசீதை வாங்கி கிழித்துக் போடுகிறார் ரெவின்யு இன்ஸ்பெக்டர். செலுத்திய தொகைக்கு என்ன செய்வது. இம்மாதிரி பல தொல்லைகள் எங்கள் பகுதியில் இருக்கின்றன என்பதை வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கெல்லாம் பரிகாரம் அவசியம் தேடவேண்டும். எங்கள் பகுதியிலிருந்து பல மனுக்கள் தாசில்தார் எஸ்டேட் மானேஜர் வசூல் பற்றி வந்துகொண்டிருந்தன. இம்மாதிரி மனுக்கள் திரும்பத்

திரும்ப வந்துகொண்டிருக்கிறதே, பல ரசீதுகள் அனுப்பப்பட்டிருக்கிறதே, பலர் குறைகள் சொல்லுகிறார்களே என்று விளக்கம் கேட்டிருந்தேன். தயவு செய்து 10, 20 நாட்களுக்குள் பதில் கொடுக்குமாறு கேட்டேன். பதிலும் கிடையாது. இம்மாதிரி பதில் கொடுப்பதே இல்லை. உத்தியோகஸ்தர்கள் அரசாங்கத்திற்கு கீழ்ப்படிகிறோம் என்ற இறுமாப்பு இருக்கிறது. அந்த இறுமாப்பு போகவேண்டும். மக்களுக்காகத்தான் ஊழியர்கள், மக்களுக்காக வாழ்கிறோம், மக்களுக்காக நியமிக்கப்பட்டிருக்கிறோம் என்ற எண்ணம் அதிகாரிகளுக்கு உதயமாகவேண்டும். அது இந்த நாட்டில் கிடையாது.

அடுத்தபடியாக வசூல் எந்தக் காலத்திலும் நடக்கிறது. சாகுபடி காலத்திலும் வசூல் நடக்கிறது. கார்த்திகை, ஐப்பசி மாதத்திலும் வசூல் நடக்கிறது. அந்த மாதிரி இருக்கக்கூடாது. எப்பொழுதும் வசூல் தொந்தரவு இருந்தால், எப்படி குடியானவர் சுதந்திர புருஷராக வாழ முடியும். அறுவடைக் காலத்தில் 3 மாதத்தில் தான் பணம் வசூல் செய்யவேண்டும். மற்ற காலங்களில் வசூல் செய்வது நன்றாக இல்லை என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

இன்னும் பல குறைகள் இருக்கின்றன. கழனிவாசல் கிராமத்தில் ஒருவர் மீதுள்ள வஞ்சத்திற்காக, கதிர் அறுக்கக்கூடாது என்று ஜப்தி நோட்டீஸ் வைத்தார்கள். நோட்டீசை வயலில் போட்டுவிட்டுப் போய்விட்டார்கள். எந்த நிலத்தை ஜப்தி செய்ய வேண்டுமோ அந்த நிலம் அல்ல அது. அவருக்கு உள்ள நிலம் அல்ல. அவர்கள் அதைப்பற்றி கவனிக்காமல் கதிர் அறுக்கக்கூடாது என்று தடை செய்தார்கள். மீறி அறுவடையானது, தாசில்தாருக்கு அறிவிக்கப்பட்டு போலிஸ் ஏவப்பட்டது. பார்த்தால் சர்வே நெம்பர் வேறு. இப்படி சர்வே நெம்பர் கூட சரியாக தெரியாமல் இருக்கிற கணக்குப் பிள்ளைகள் இருக்கிறார்கள். இதைக் கவனிக்க வேண்டும். முக்கியமாக பட்டுக்கோட்டை தாலுகாவில் கழனிவாசல் மணியக்காரர், கணக்குப் பிள்ளை மிகவும் மோசமாக நடந்துகொள்கிறார்கள். ரூ. 12,000 வரை கிராம முன்சீப் லோன் பணத்தை சாப்பிட்டிருப்பதாகத் தெரிகிறது. தாசில்தார் சென்று அவருக்கு திரும்ப வேலை தருகிறேன் என்று சொல்லி அந்தப் பணத்தை வசூல் செய்திருக்கிறார்கள். இது போல கையாடல் நடக்கிறது என்று திரும்பத் திரும்ப இந்த மன்றத்தில் அநேகம் தடவைகள் சொல்லிக் கொண்டிருப்பது நல்லதில்லை. அது எல்லோரையும் பாதிக்கிறது. ரெவின்யூ போர்டார் இதில் பெரிதும் கவனம் செலுத்த வேண்டும். எங்கள் பகுதியிலே மக்கள் குமுறிக் கொண்டிருக்கிறார்கள். எத்தனை மனுக்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்கள் ? கணக்கு கொடுத்தால் பணம் கொடுக்கத் தயார் என்று சொல்லுகிறார்கள். அவர்களிடையே இன்றைக்கு ஒரு புரட்சிகரமான உள்ளத்தை சர்க்கார் தூண்டிக்கொண்டிருக்கிறது. அவர்கள் ஒரு புரட்சியே செய்து விடுவார்கள். அந்த அளவுக்கு சர்க்கார் போகக்கூடாது. அவர்களுக்கு இருக்கிற குறைகளை உடனடியாக நீக்கவேண்டும், அவைகளை நல்ல முறையில் கவனிக்க வேண்டும். வசூல், கையாடல், ரசீதிருந்தும் கணக்கில்லாது கொடுமைக்குளளாக்கப்படும் காரியங்கள் யாவையும் கவனிக்க அப்பகுதிகளுக்கு ஒரு விசாரணைக் குழுவை ஏற்படுத்த வேண்டுமென கேட்டுக்கொள்ளுகிறேன். நிர்வாகத்தில் நல்ல கண்காணிப்பு வேண்டும். கிழக்கு ராமநாதபுரத்தில் பேய் மழை பெய்ததின் காரணமாக சாகுபடி மிகவும் கெட்டுவிட்டது. வசூல் ரொம்பவும் கடுமையாக இருக்கிறது. அதிகாரிகள் வசூல் செய்யாவிட்டால் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதில் சர்க்கார் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**Sri N. R. THIAGARAJAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஒலி பெருக்கி என்னோடு ஒத்துழையாமை செய்கிறது. எனென்றால் நான் உயரமாக இருக்கிறேன். அது தாழ்வாக இருக்கிறது. செகரடரி அவர்கள் சொல்லியிருக்கிறாராம், எல்லோருக்கும் ஒரேமாதிரி 'ஸவுண்டு வால்யூம்'

போட வேண்டுமென்று. நான் உயரமாக இருப்பதால் எனக்கு கொஞ்சம் கூடுதலாக ' ஸவுண்டு வால்யூம் ' போட்டால் தான் பொறுத்தமாக இருக்கும. ஆகவே, எனக்கும், என்னைப்போன்று உயரமாக இருக்கிறவர்களுக்கும் கொஞ்சம் ' வால்யூமை ' உயர்த்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : நீங்கள் கொஞ்சம் குனிந்து நின்று பேச வேண்டும்.

SRI N. R. THIAGARAJAN : நான் ' வணங்காமுடி '. நான் எப்பொழுதும் நிமிர்ந்து நிற்பதுதான் வழக்கம். குனிவது வழக்கமில்லை. நான் நிமிர்ந்து நின்றுதான் பேசுகிறேன். ஆகையால் ஒலிபெருக்கியை சற்று உயர்த்திக் கொடுக்கவேண்டும்.

இப்பொழுது கொண்டு வரப்பட்டுள்ள 3, 4 டிமாண்டுகளிலே ரிஜிஸ்டிரேஷன் டிபார்ட்மெண்டைப் பொறுத்த அளவில் எனக்குக் குறையே கிடையாது. எங்கள் ஊரிலிருந்து தினசரி சுமார் 50 பேர்கள் வேறு ஊருக்கு ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸுக்கு போக வேண்டி யிருப்பதால், எங்கள் ஊரில் ஒரு ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸ் ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டிருந்தோம். அதை அமைச்சர் அவர்கள் 6 மாதங்கள் ஆராய்ச்சி செய்து, அவசியம் என்று கருதி, இப்பொழுது எங்கள் ஊரில் ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸ் வைத்துவிட்டார்கள். குறை சொல்லுவதற்கு ஒன்றுமே இடம் இல்லை. ஆறு மாதங்களுக்குள் காரியம் நடைபெற்றுவிட்டது. அதுபற்றி சந்தோஷம்.

ரெவின்யூ டிபார்ட்மெண்டைப்பற்றி எனக்கு ரொம்ப அதிகமாகத் தெரியாது. தெரியாத இடத்தில் காலைக் கையை வைத்து அவஸ்தைப்பட நான் விரும்பவில்லை. ஆனால், டிஸ்டிரிக்ட் அட்மினிஸ்டிரேஷனைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். ஜில்லா நிர்வாகம் எப்படி நடக்கிறது என்பது பற்றி இங்கே எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன். 1958-ம் வருஷத்தில் ஒருவர் ஜில்லா கலெக்டராக இருந்தபோது அந்த ஆண்டில் 1,000 பேபர்கள் அனுப்பினேன். எண்ணூற்று இருபத்தெட்டு பேபர்களுக்கு கையெழுத்து வாங்கி வைத்திருக்கிறேன். அந்த 828 பேபர்களில் ஒன்று கூட நடவடிக்கை எடுக்கப்படவில்லை. குடி தண்ணீர், ரோடு, குளம், மராமத்து இதுபோன்ற பல விஷயங்கள் சம்பந்தமாக எழுதியிருக்கிறேன். ஒன்றுக்குக்கூட நடவடிக்கை எடுக்கப்படவில்லை. மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் அங்கு வந்திருந்தபொழுது, கலெக்டரை நேரில் வைத்துக் கொண்டு ' இவர் உதவாக்கரை, ஒன்றும் கவனிக்கமாட்டேன் என்கிறார். நீங்கள் இவருக்குக் கொஞ்சம் புத்திமதி கூறிவிட்டுச் செல்லுங்கள் ' என்று சொன்னேன். தமிழகத்தில் மதுரை ஒரு முக்கியமான ஜில்லா. வெள்ளைக்காரர்கள் காலத்தில் அதை மிகவும் நன்றாக நிர்வாகம் செய்து வந்தார்கள். அதற்குப் பிற்பாடும் போற்றிப் புகழக்கூடிய வகையிலே திரு வி. எ. ராமகிருஷ்ணன் அவர்கள் நிர்வாகத்தை நடத்தினார்கள். அதற்குப் பிறகு திரு என். எஸ். அருணாசலம் அவர்கள் மிகச் சிறந்த முறையில் நிர்வாகத்தை நடத்தினார்கள். அத்தகைய ஜில்லாவில் ஒரு சிறுவரை ஜில்லா கலெக்டராக போட்டார்கள். அவர் ஒரு காரியம் கூட செய்யவில்லை.

MR. SPEAKER : பெயரைச் சொல்லக் கூடாது.

SRI N. R. THIAGARAJAN : ஒரு சிறுவர் என்றுதான் சொன்னேன்.

MR. SPEAKER : அப்படிச் சொன்னாலும் கண்டுபிடித்துவிடுவார்கள்.

SRI N. R. THIAGARAJAN : எண்ணூற்று இருபத்தெட்டு பேபர்களிலே ஒன்றைக்கூட கவனிக்கவில்லை. அரசாங்கத்திற்கும் பல முறை எழுதியிருக்கிறேன். அசெம்பளியில் கேள்வி ரூபமாகக் கேட்டிருக்கிறேன். பல கேள்விகள் அட்மிஷன் ஆகாமல் தொலைந்து போய் விட்டன. ஒரே நாளில் 1,000 கேள்விகள் கொடுத்திருக்கிறேன். இந்த சட்டசபை சரித்திரத்திலேயே அம்மாதிரி ஒருவரும் கொடுத்ததில்லை. உலக சட்டசபை சரித்திரத்திலேயே இதுவரை யாரும் அம்மாதிரி ஒரே நாளில் 1,000 கேள்விகள் கொடுத்தது கிடையாது. அத்தனை கேள்விகளும் எங்கள் ஜில்லா நிர்வாகத்தைப் பற்றியவை.

SRI A. GOVINDASAMY: ஆன் எ பாய்ண்டு ஆப் ஆர்டர், ஸார். நான் ஒழுங்கு பிரச்னை கிளப்புகிறபொழுது கனம் அங்கத்தினர் அவர்கள் ' இவர் என்ன ஒழுங்குப் பிரச்னை கிளப்புவது? ' என்று கேட்கிருர்கள். சட்டசபை விதிப்பிரகாரம் ஒழுங்குப் பிரச்னை கிளப்புவதற்கு எனக்கு உரிமை இருக்கிறது. நண்பர் என். ஆர். தியாகராஜன் அவர்கள் தவருகக் கருத வேண்டாம். சட்டசபையில் கேள்விகள் அனுமதிக்கப்படவில்லை என்று குற்றம் சாட்டுவது சபாநாயகரைப்பற்றி குறிப்பிடுவதாக இருக்கிறது. அம்மாதிரி குறிப்பிடலாமா என்று கேட்கிறேன்.

MR. SPEAKER : என்னைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை.

(எதிர்த் தரப்பிலிருந்து குரல்கள் ' குறிப்பிட்டார் ' ' குறிப்பிட்டார் '.)

MR. SPEAKER : கனம் ஸ்ரீ என். ஆர். தியாகராஜனுக்குத் தனி உரிமை இருக்கிறது.

SRI N. R. THIAGARAJAN : கனம் சபாநாயகர் எனக்கு தனி உரிமை இருக்கிறது என்று சொல்லுகிருர்கள். அதற்காக நான் அவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த 1,000 கேள்விகளில் 500 கேள்விகள் என் தொகுதியில் உள்ள குறைகளைப் பற்றியது. இதுபற்றி பல முறை அரசாங்கத்திற்கும், கலெக்டருக்கும், பல உத்தியோகஸ்தர்களுக்கும் எழுதி, எழுதி அலுத்துப் போய் தோள்பட்டையெல்லாம் வலி கண்டு விட்டது. அதற்கு மேல்தான் இந்த 500 கேள்விகள் போட்டிருக்கிறேன். பதின்மூன்று வயதிலே நான் கொடி தூக்கியவன். அதிலிருந்து தூக்கிய கொடியை தாழ்த்தியதில்லை. ஆயிரத்து இருநூறு சதுர மைல் விஸ்தீரணம் உள்ள பெரிய குளம் தாலூகாவைப்பற்றி 300 கேள்விகள். மதுரை ஜில்லாவைப் பற்றியது 200 கேள்விகள்........

MR. SPEAKER : அதிலே முக்கால்வாசி கேள்விகள் ' அவுட் ஆப் ஆர்டர் '

SRI N. R. THIAGARAJAN : கேள்விகளெல்லாம் மக்கள் நலனைப் பற்றியது. அங்குள்ள அதிகாரிகள் இவைகளையெல்லாம் சரியாக கவனிப்பதாகத் தெரியவில்லை. நான் கொடுத்திருக்கிற கேள்விகளையெல்லாம் பரிசிலனை செய்து பார்த்து, எவை நியாயமாகச் செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்ய வேண்டும் என்று நான் கனம் சபாநாயகர் அவர்கள் மூலமாக கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். அமைச்சர் அவர்கள் எத்தனையோ சமயங்களிலே பதில் சொல்லும்பொழுது சிரித்துவிடுகிருர், அல்லது சிரிக்கும்படியான பதிலை சொல்லிவிட்டுப் போகிருர். இது நியாயமல்ல. நாங்கள் இங்கே விஷயங்களை எடுத்துச் சொல்லும்பொழுது, அவைகள் சரிதானு என்று பார்க்க வேண்டும். அங்கத்தினர்கள் கூறுவதை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும். டிஸ்டிரிக்ட் அட்மினிஸ்டிரேஷன் சம்பந்தப்பட்ட வரையில் அவற்றை கலெக்டருக்குத் தெரிவிக்க வேண்டும். என்னைக் காட்டிலும் அவர் அனுபவசாலியாக இருக்கலாம். ஜஸ்டிஸ் பார்டியிலே பார்லிமெண்டரி செகரடரியாக இருந்திருக்

10-30 a.m.

கிறார். இந்த மந்திரி சபையிலே அதிக அனுபவம் பெற்றவர் அவர்தான் என்று சிலர் சொல்லுகிறார்கள். நான் அதற்கு நேர்மாறான அபிப்பிராயத்தை வைத்திருக்கிறேன். என்னுடைய ஜில்லா நிர்வாகத்தை சரியாகக் கவனிக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன். என்னுடைய அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன். ஜில்லா போர்டு நிர்வாகத்தை நான் கவனித்திருக்கிறேன். ஒரு ரெஜிஸ்டர் போட்டு ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ஒரு பக்கம் போட்டிருந்தேன். ஏதாவது ஒரு இண்டர்வியூ நடந்தால் அங்கத்தினர் என்ன கூறினாரோ, அதை அவர் பெயர் போட்ட பக்கத்தில் குறித்து வைத்துக் கொள்வேன். பின்னர், நான் குறித்துக்கொண்டதை செய்திருக்கிறேனா என்று பார்ப்பேன். சட்ட பூர்வமாகச் செய்யக்கூடியதாய் இருந்தால் அதைச் செய்து விடுவேன் என்று கூறிவிடுவேன். செய்ய முடியாத காரியமாக இருந்தால், இதை ஏன் சொல்லுகிறீர்கள், விட்டு விடுங்கள் என்று கூறுவேன். அந்தமாதிரி ஒரு முறை இங்கே நடைமுறையில் இல்லை. அங்கத்தினர்கள் இன்று ஒன்று கூறினால் அதை அமைச்சர்கள் நாளையே மறந்து விடுகிறார்கள். நாம் ஏதாவது எழுதினால் அது குவியலோடு குவியலாகப் போய்விடுகிறது. ஒரு ரெஜிஸ்டர் போட்டு அங்கத்தினர்கள் சொல்லுவதை அதிலே எழுதிவைத்துக் கொண்டு ஆராய்ந்து பார்க்க வேண்டும். வரவு செலவுத் திட்டத்திலே 90 கோடி ரூபாய் செலவு செய்கிறோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஆண்டுக்கு 90 கோடி ரூபாய் செலவு செய்யப் போகிறோம். மொத்தம் 180 கோடி ஆகிறது. இப்படி 180 கோடி ரூபாய் செலவு செய்யும்பொழுது ஒரு தொகுதிக்கு 10 லட்சம் அல்லது குறைந்தபட்சம் ஒரு லட்சம் என்றாவது ஒதுக்கி வைத்து, அந்தத் தொகுதியிலுள்ள பெரும்பாலான மக்கள் என்ன குறை கூறுகிறார்கள் என்று பார்த்தால் என்ன? அதைக்கூடச் செய்வது இல்லை.

அடுத்தபடியாக, ஜமீன்தாரிப் பகுதிகளை எடுத்துக் கொண்டால் கண்டமநாயக்கனூர் ஜமீனில் 64 கிராமங்கள் இருக்கின்றன. என்னுடைய தொகுதியிலே மூன்று ஜமீன்கள் இருக்கின்றன. மொத்த ஜனத் தொகையில் 75 அல்லது 80 சதவிகிதம் ஜமீன் பகுதிகளிலே வாழ்கிறார்கள். உலகம் தோன்றிய நாள் முதல் இன்று வரையில் எந்தவிதமான முன்னேற்றத்துக்கும் வழியில்லாமல், ரோடு வசதி, பள்ளிக்கூட வசதி, குடி தண்ணீர் வசதி இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். படுமோசமான நிலையிலே அவர்கள் வாழ்கிறார்கள். பட்ஜெட்டிலே எக்ஸ் ஜமீந்தாரி ஏரியாவுக்கு ஏதேனும் செய்யப் போகிறோம் என்று சர்க்கார் சொல்லியிருந்தால், அதை வாழ்த்தியிருக்கலாம். ஆனால் அப்படி ஒன்றும் சொல்லப்படவில்லை. ஜமீந்தாரிப் பகுதிகளை அதிகமாகக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

சுயநலம் என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். என் சொந்தக் குறையைக் கூறுகிறேன் என்று சொன்னாலும் கூட ஆட்சேபணை இல்லை. நான் உள்ளதை உள்ளபடிக் கூறுகிறேன். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் என் பாட்டனார் ஒரு கண்மாயை வாங்கினார். அறுபத்தைந்து ஏக்கர் நிலம். ஒரு லட்சம் ரூபாய்க்கு மரம் இருக்கிறது. அந்த நிலத்தில் சர்க்கார் பிரவேசித்து, தன்னுடையது என்று கூறிவிட்டது. அமைச்சர் அவர்களிடம் பத்திரங்களைக் காண்பித்துச் சொன்னேன். அதற்கு, அமைச்சர் அவர்கள் "கோர்ட்டுக்குப் போங்கள்" என்று பதில் எழுதியிருக்கிறார்கள். வாஸ்தவமாக அமைச்சருடைய ஊர் என்னுடைய ஊருக்குப் பக்கத்திலே இருக்குமானால், அவருடைய நிலத்தை ஆக்கிரமித்துக்கொண்டு, "நீங்கள் கோர்ட்டுக்குப் போங்கள்" என்று சொல்லி இருப்பேன். இப்படி எழுதுவதில் ஏதாவது அர்த்தம் இருக்கிறதா?

**Mr. SPEAKER** : உங்கள் சொந்த விஷயத்தைப் பற்றி சட்டசபையிலே சொல்வது நல்லதல்ல. உங்களுடைய சொந்த நிலத்தைப்பற்றிப் பேசுகிறீர்கள். இன்னொருவருடைய நிலத்தைப்பற்றிப் பேசலாம்.

SRI N. R. THIAGARAJAN : என்னிடம் ஏமாத்துகிற வேலை கிடையாது. நான் ஊருக்காக உழைக்கிறவன். என்னுடைய சொந்த விஷயத்தை எடுத்துச் சொன்னால் தானே புரியும். சாத்தூர் தொகுதியிலே உள்ள எனக்குச் சொந்தமான கண்மாயை எடுத்துக்கொண்டு விட்டார்கள். எம். எல்.ஏ. என்பதற்காக ஒரு லட்சம் ரூபாய் சொத்தையா எடுத்துக்கொள்ள வேண்டும் ? தேனியிலே பல கண்மாய்களைப் பலர் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். ரெவின்யூ டிபார்ட்மெண்ட் அதிகாரிகள் அதையெல்லாம் விட்டுவிட்டார்கள். எங்கள் குடும்பத்திற்குச் சொந்தமான கண்மாய். பதினான்கு பேருக்குப் பாத்தியப்பட்டது. ஒரு எம்.எல்.ஏ.யின் கண்மாயையா சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும் ? எடுத்ததெற்கெல்லாம் கோர்ட்டுக்குப் போய்ச் சொல்ல வேண்டுமென்று சொன்னால் இங்கு 206 பேர்கள் வர வேண்டிய அவசியமே இல்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த ஜமீன் எஸ்டேட்டுகளுக்கு எல்லாம் விதிகள் இருக்கின்றன. விதிகளுக்கு உட்பட்டால் அந்த அளவுக்கு உட்பட்டு அரசாங்கம் செய்ய முடியும். அதற்கு மேற்பட்டால் கோர்ட் துவாராகப் போக வேண்டும். அதற்கு ஆத்திரப்பட்டால் என்ன செய்ய முடியும்?

MR. SPEAKER : என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன். நல்ல சுமுகமான முறையில் போனால் வேலை நடக்கிறது. யாரை யாவது திட்டினால் வேலை நடக்காது. (சிரிப்பு).

SRI N. R. THIAGARAJAN : காக்காய் பிடிக்கிற வேலை எனக்குத் தெரியாது. அது என்னுடைய வாழ்க்கையிலே என்றுமே கிடையாது. காக்காய் பிடித்து காரியம் சாதிக்கவேண்டுமென்ற எண்ணம் எனக்குக் கிடையாது. உள்ளதை உள்ளபடி சொல்லுவேன். என்னுடைய கண்மாயை எடுத்துக்கொண்டார்களே, ராஜ்யத்திலுள்ள எல்லாக் கண்மாய்களையும் எடுத்துக் கொள்வதுதானே ? தேனித் தொகுதியிலே ஒரு கண்மாயை ஒருவர் சொந்தமாக வைத்துக் கொண்டிருக்கிறார். அவருடைய கண்மாயை ஏன் எடுத்துக் கொள்ளவில்லை ? ஏன் பாரபட்சம் காட்டுகிறார்கள் ? எல்லோரிடமும் சமமாக நடந்துகொள்வது தானே ? இதைப் போன்று பொது மக்களுக்கு இடைஞ்சல்கள் செய்யக் கூடிய நிர்வாகத்தை நல்ல முறையிலே நடத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, என்னுடைய சிற்றுரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI K. R. VISWANATHAN : அவைத் தலைவர் அவர்களே, இந்த நில வருவாய் மான்யக் கோரிக்கையையும், மற்ற கோரிக்கைகளையும் ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மான்யக் கோரிக்கையைக் கொண்டு வந்திருக்கும் வருவாய்த் துறை அமைச்சர் அவர்கள் சென்ற 10 ஆண்டுகளாக இந்த வருவாய்த் துறையை ஏற்றுக் கொண்டு, மிகச் சிறந்த முறையிலே, இந்த இலாகாவை நடத்தி வருவதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. நில உடைமைக் கொள்கையிலே மிகப் புரட்சிகரமான மாறுதல்களைக் கொண்ட பல சட்டங்களை நிறைவேற்றியிருக்கிறார்கள். பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம், நில வாரச் சட்டம், உச்ச வரம்புச் சட்டம் போன்ற ஏழை மக்களுக்கு நன்மை அளிக்கக் கூடிய பல சட்டங்களைக் கொண்டுவந்து, இந்த சட்ட சபையிலே நிறைவேற்றி, நிலச் சீர்திருத்தம் செய்திருப்பதற்கு அவர்களை நாமெல்லோரும் பாராட்டவேண்டி யிருக்கிறது. சில விஷயங்களிலே குறைகள் இருக்கலாம். ஆனால் பெரும்பாலான ஏழை மக்களுக்கு அவர்கள் அளித்துள்ள நன்மையை தமிழ்நாடு என்றும் மறக்காது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

18th March 1961] [Sri K. R. Viswanathan]

பத்திரப் பதிவு இலாகாவைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தாலூக்காவிலே செந்துறை என்ற இடத்திலே ஒரு பத்திரப் பதிவு அலுவலகம் வைக்க வேண்டுமென்று 1953-லேயே ஒரு வேண்டுகோள் செய்யப்பட்டது. மகசர்கள் கொடுக்கப்பட்டன. அரசாங்கத்தால் பரிசீலனை செய்யப்பட்டது. இலாகா தலைவரால் பரிசீலனை செய்யப்பட்டு அரசாங்கத்திற்கு சிபார்சு செய்யப்பட்டது. அப்பொழுது எங்கே பார்த்தாலும் திட்ட வேலைகள் அவசரமாகச் செய்ய வேண்டியிருந்ததன் காரணமாக, அந்த ஆவணப் பதிவகத்திற்கு அவசரம் இல்லை என்று ஒத்தி வைக்கப்பட்டது. இதை 10 வருஷமாகவே ஒத்திப் போட்டுக் கொண்டு போகிறார்கள் என்பதை அமைச்சரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இப்பொழுது மற்ற இடங்களிலுள்ள அலுவலகங்களுக்கு 20 மைல் இரயில் அல்லது 'பஸ்' இல்லாத பாதையில் செல்லவேண்டியிருக்கிறது. உடனடியாக செந்துறையில் ஒரு ஆவணப் பதிவகம் ஏற்படுத்த வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் வருவாய்த் துறையிலே கிராமாதிகாரிகள் அடித்தளத்திலே இருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமை பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். இன்னும் முடிவு எடுத்தபாடு இல்லை. முழு நேர ஊழியர்களா அல்லது பகுதி நேர ஊழியர்களா என்ற முடிவு விரைவில் எடுக்க வேண்டும். பகுதி நேர வேலை என்று சொன்னால் அவர்களுக்கு எந்த விதத்திலே சலுகைகள் இருக்கின்றன என்று கேட்கிறேன். பகுதி நேர வேலை என்று ஏற்றுக்கொண்டாலும், அவர்கள் தேர்தலில் நிற்க முடியாது, வேறு அலுவல்களை ஏற்றுக் கொள்ள முடியாது. இப்படி பல கட்டுப்பாடுகள் இருக்கின்றன. அவர்களுக்குப் போதிய ஊதியம் கிடையாது. இத்தகைய கஷ்டங்களை அவர்கள் எத்தனை நாட்களுக்கு அனுபவிக்க முடியும் ?

அந்தக் காலத்தில் இருந்திருக்கலாம், கிராமத்திலுள்ள பெரிய பணக்காரர்கள் கிராம அதிகாரிகளாக வந்தவர்கள் என்ற நிலை. ஆனால் இன்றைக்கு சமுதாயத்தில் ஏற்பட்டுவரும் மாறுதல்கள் காரணமாக, கிராம முன்சீப், கர்ணம் பதவிகளுக்கு கிராமத்தில் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் வருவதில்லை. ஆகவே அரசாங்கம் வெகு சீக்கிரத்திலேயே இந்த கிராம உத்தியோகஸ்தர் வேலையை அது பகுதி நேரமா அல்லது முழுநேரமா என்று வரையறுக்கப்பட வேண்டும். மாவட்டத்தில் இன்றைக்கு எல்லா வேலைகளையும் கலெக்டரிடம் கொடுத்திருக்கிறார்கள். ஜில்லாவில் எந்த வேலையானாலும், கலெக்டர்தான் பொறுப்பாளி. அதே போல கிராம மட்டத்திலே எல்லா வேலைகளுக்கும் இந்த கிராம அதிகாரிகளே பொறுப்பாக்கப்படுகிறார்கள். அவர்கள் வேலை இன்னது என்று வரையறுக்கப்படவில்லை. எந்த இலாகா வேலையானாலும் இவர்களே செய்ய வேண்டியிருக்கிறது. கிராம அதிகாரிகளின் வேலை வரையறுக்கப்படவேண்டும் ; அவர்களுடைய ஊதியம் வரையறுக்கப்படவேண்டும் ; அவர்களுடைய வேலை நேரமும் வரையறுக்கப்படவேண்டும். அப்படிச் செய்யாதலால் எத்தனையோ ஊழல்கள் நடக்கின்றன. இவற்றை வரையறுத்தால்தான் கிராமத்தையே சீர்திருத்த முடியும்.

இந்த அரசாங்க அதிகாரிகளுக்கு சமீப காலத்தில் ஊதிய உயர்வு அளிக்கப்பட்டது. அது சிறிதளவுக்கு அவர்களுக்கும் திருப்தி அளித்திருக்கிறது. மன நிறைவு ஏற்பட்டிருக்கிறது. அதோடு இந்த சமயத்தில் அரசாங்கம் செய்ய வேண்டிய கடமையும் ஒன்று இருக்கிறது. நாம் அறிவோம், 10 ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள் எண்ணிக்கையை, census எடுக்கிறோம். நான் ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். அதே மாதிரி 10 ஆண்டுகளுக்கு ஒரு முறை வேறொன்றும் செய்ய வேண்டும். மக்கள் எண்ணிக்கை பெருகப் பெருக அரசாங்க அலுவல்களும் அதிகரிக்கிறது. ஆனால் அம்மாதிரி அலுவல்களுக்குத் தக்கவாறு அதிகாரிகளின் எண்

ணிக்கை உயர்கிறதில்லை. பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை எடுக்கப்படும் கணக்கிலிருந்து எப்பொழுது அதிக அலுவல்கள் அதிக மடங்கு பெருகி யிருக்கிறது என்று தெரிகிறதோ அப்பொழுது அதிகாரிகளின் எண்ணிக் கையையும் அதிகரிக்க வேண்டும். இன்றைக்கு உயர் மட்டத்திலே, கொஞ்சம் அதிகமாக இருக்கிறார்கள் என்பது உண்மையே. மாவட்ட கலெக்டர் களுக்கு, உதவியாக, துணை அதிகாரிகள், பி.ஏ. என்றும் D.R.O. என்றும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், கீழ் மட்டத்தில் வேலை அதிகரித் திருப்பதற்குத்தக்க அதிகாரிகள் அதிகம் இல்லை. அந்த அடிப்படையிலும் அதிகமாக அதிகாரிகளை நியமிக்கவேண்டும். . . . . . . . .

**Sri M. A. B. ARUMUGASWAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மானியங்களை ஆதரித்து பேச இந்தச் சந்தர்ப்பம் கொடுத்ததற்கு நன்றி தெரிவித்துக் கொண்டு இந்தச் சந்தர்ப்பத்திலே, என்னுடைய தொகுதியிலுள்ள குறைகளையும் செய்ய வேண்டிய வேலைகளையும் பற்றி குறிப்பிட விரும்பு கிறேன். இன்றைக்கு நம் சர்க்கார் இனும்களையும், ஜமீந்தார்களையும், ஒழித்துக் கட்டினார்கள். ஆனால், ஜமீன்களை ஒழித்துக் கட்டிவிட்டு ஜமீன் பிரதேசங்களில் செய்ய வேண்டிய காரியங்களை மேற்கொள்ளவில்லை. ஜமீன் பிரதேசங்கள் ஜமீன் நிர்வாகத்தில் இருந்த காலத்தில் மிகவும் பின் தங்கிய பிரதேசங்களாக இருந்தன. எந்த வேலையும் நடக்காமல் இருந் தது. ஆனால் என்னுடைய தொகுதியான கன்னிவாடி ஜமீன், ஜமீன் நிர்வாகத்தில் இருந்த காலத்திலேயே, அங்கு மலையில் உற்பத்தியாகும் ஆறுகளில் ஓடும் தண்ணீரை அணைக்கட்டித் தேக்கி பாசன வசதி கொடுக்க, அந்த மலைக் கிராமங்களுக்கு உதவ இரண்டொரு திட்டங்களை ஜமீன் காலத் திலேயே உத்தேசித்திருந்தார்கள். இன்றைக்கு ஜமீன்களை ஒழித்திருக்கும் இந்த மாநில சர்க்கார் அந்த திட்டங்களை மேற்கொள்ள வேண்டும் என்று பல சந்தர்ப்பங்களிலே எடுத்துச் சொல்லி வந்திருக்கிறோம். என்னுடைய தொகுதியில் 4, 5 மலை கிராமங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மலை கிராமங்களில் வாழ்பவர்கள் பெரும்பாலும் ஆதி வாசிகள். நிலச் சொந் தக்காரர்களும் அங்கே வசிக்காமல் நாட்டுப் புறத்தில் தான் வசிக்கிறார்கள். இந்த ஆதி வாசிகளுக்கு உதவி செய்யும் திட்டமாகவாவது நினைத்துக் கொண்டு அங்கே ரோடு வசதி செய்வது மிகவும் அவசியம். சுமார் 10 ஆண்டு களுக்கு முன்னால், இந்தப் பகுதி ஜில்லா போர்ட் நிர்வாகத்தில் இருந்த போது, என் தொகுதியில் (பாய்ச்சலூர்) பன்னப்பட்டி—பாய்ச்சலூர் ரோட்டை அமைக்க ஜில்லா போர்டில் தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அந்த ரோட் டைப் பற்றி எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. அங்குள்ள ஆதி வாசிகளும், பொது மக்களும் சர்க்காரால் ஒரு விதமான நன்மையும் அடையவில்லை என்று பெரும் குறைபடுகிறார்கள். அவர்களுடைய குறை களை நிவர்த்திக்க, மலை கிராமங்கள், அதிலும் ஜமீன் நிர்வாகத்தில் இருந்த கிராமங்கள் என்று ஒரு சலுகை காட்டி, அந்த கிராமங்களுக்கு நான் குறிப்பிட்ட சாலையை அமைத்துத் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

என் தொகுதியிலுள்ள காட்டுக்குத் தகுதியில்லாதவைகளை மலையடிவாரங் களில் வசிப்பவர்கள் மிகவும் பின் தங்கிய வகுப்பினர்கள் அங்குள்ள நிலங்களில் கூலிகள் கிடைக்காத காலத்தில் தங்கள் குடும்பத்தாரை வைத்துக் கொண்டே தாங்களோகவே இரண்டு, மூன்று எக்கர்கள் வெட்டிப் பயிர் செய்து தீர்வை மட்டும் செலுத்தி வந்திருக்கிறார்கள். ஆனால், அந்தக் காலத்தில் அவர்களுக்கு நிலங்களை பட்டா செய்து கொள்ள வேண்டும் என்று முயற்சி எடுக்கத் தெரியவில்லை. ஜமீன் ஒழிப்பிற்குப் பிறகு, காட்டிலாகா அதிகாரிகள், ரெவின்யூ அதிகாரிகள் அவர்களை அப்புறப்படுத்த நிர்ப்பந்திக் கிறார்கள். அதைப் பற்றி அமைச்சரவர்களிடம் அடிக்கடி எடுத்துச் சொல்லி

வந்திருக்கிறேன். செட்டில்மெண்ட் ஆகும் வரையிலாவது நிர்ப்பந்தம் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளு கிறேன். அந்த நிலங்கள் காடு வளர்ப்பதற்கோ மற்றதற்கோ தேவை இல்லாதவை. ஆகவே, அவற்றை மிகவும் பிற்போக்குள்ள சமூகத்திலுள்ள அம்மக்களுக்கு பட்டா செய்து தர வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பத்திரப் பதிவு மானியம் சம்பந்தப்பட்ட வரை, நான் ஏற்கனவே சொன்னது போல் என் தொகுதி மலைக் கிராமங்கள் நிறைந்தவை. நிலச் சொந்தக்காரர்களும் ஐயம்பாளையம், பட்டிவீரன்பட்டி போன்ற கிராமங்களில்தான் வசிக்கிறார்கள். அவர்கள் தங்கள் நிலங்களை விற்க வோ, ஈடு செய்யவோ, ஒத்தி வைக்கவோ வேண்டு மென்றால், ஐயம் பாளையம் பட்டிவீரன்பட்டியிலிருந்து 50, 60, மைலுக்கு மேல் சென்று பத்திரப் பதிவு செய்ய வேண்டியிருக்கிறது. அதே கிராமங்களில் உள்ளவர்களுக்கு பஸ் போக்குவரத்து வசதிகளும் கிடையாது. 16, 17 மைல் வரை நடந்தே சென்று பத்திரப்பதிவு செய்ய வேண்டியிருக்கிறது. சத்திரப்பட்டி, வத்தலகுண்டு, ஆத்தூர் பத்திரப் பதிவு ஆபீசுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. வருஷம் ஒன்றுக்கு 1,400, 1,500 பத்திரங்கள் வரை பதிவாகக் கூடிய கணக்கு இருக்கிறது. சுமார் 1,000 பதிவு செய்யும் வாய்ப்பு இருந்தாலும் ஒரு தனி சப்-ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் ஏற்படுத்தலாம் என்று அறிகிறேன். இங்கே 1,500 பத்திரங்கள் வரை பதிவாகின்றன. அப்படியிருந்தும் அங்கே ஒரு தனி ஆபீஸ் இல்லை. இந்த வருஷத்திலாவது என்னுடைய சொந்த ஊரான மதுரை ஜில்லா ஐயம்பாளையத்தில் ஒரு பத்திரப் பதிவு ஆபீஸ் ஏற்படுத்த முயற்சிகள் எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதன் மூலமாக பொது மக்களுக்கு மட்டுமல்ல. விவசாயிகளுக்கும் இது பெரிதும் உதவியாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஜில்லா நிர்வாகம் என்ற தலைப்பில் நான் சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். என்னுடைய மதுரை ஜில்லாவில் உள்ள சமுதாய நலத் திட்டப் பகுதிகளைப் பற்றியது. ஏற்கனவே எங்கள் தொகுதியான ஆத்தூர் பிர்க்கா சமுதாய நலதிட்டப்பகுதி ஒன்று இருந்தது. அப்புறம் அதை ஆத்தூர்–1, ஆத்தூர்–2, என்று பிரிக்கப் பட்டது. அப்படிப் பிரிக்கப்பட்ட நேரத்தில் ஆத்தூர்-2-க்கு தலைமைக் காரியாலயம் எங்கு ஏற்படுத்துவது என்பது பற்றிய வாதம் ஜில்லா அபி விருத்திக் கவுன்ஸிலிலேயே வந்தது. கலெக்டர் சொன்ன ஊரை ஒத்துக் கொள்ளவில்லை என்பதற்காக தலைமைக் காரியாலயம் எங்கே ஏற்படவேண் டும் என்பது தீர்மானித்து, அந்த இடத்திலே கட்டிடம் கட்டுவதற்கு ஊரின் அருகாமையில் நிலம் இனமாகத் தருவதாக வாக்கு அளித்திருந்த போதிலும் கூட அந்த இடத்திற்கு ஒரு மைல் அப்பால், ஒரு தனிப்பட்ட வருக்குச் சலுகை காட்ட வேண்டும் என்கிற நோக்கத்துடனேயே அங்கே கட்டிடம் கட்டுவதற்கு உத்திரவிட்டிருப்பதாகத் தெரிகிறது. இப்படிச் செய் வதால் அந்தத் தொகுதியில் உள்ள மக்களுக்கு, குறிப்பாக அந்த வட்டாரத்தில் உள்ள மக்களுக்கு—ஒரு தனிப்பட்டவருக்கு சலுகை காட்ட வேண்டும் என்பதற்காக என் பொதுமக்களுக்கு கஷ்டத்தை விளைவிக்கும் காரியத்தைச் செய்கிறார்கள் என்று அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது. இதைப் பற்றி நன்றாக விசாரித்து இப்படிப்பட்ட காரியங்கள் நடைபெறாமல் இருப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

Sri V. K. KOTHANDARAMAN : கனம் அமைச்சர் அவர்கள் கோரியிருக்கும்படியான மானியத்திற்கு பிரேரிக்கப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணைகளை ஆதரித்துப் பேச விரும்புகிறேன். நமக்கு முன்னால் இருக்கக் கூடிய ரெவின்யூ இலாகா சம்பந்தப்பட்ட பிரச்சனைகளைப் பற்றி

பலர் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் உள்பட, எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் அவ்வளவு பேர்களுமே அதில் இருக்கக் கூடிய குறைபாடுகளை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். ரெவின்யூ இலாகாவின் நிர்வாகத்திற்கு என்று ஸ்டாண்டிங் ஆர்டர் ஆப் ரெவின்யூ போர்டு என்று வெள்ளைக்காரன் காலத்திலேயே சில சட்டதிட்டங்கள் வகுக்கப்பட்டன. அதில் கொஞ்சம் கூட மாறுதல் செய்யப்படாமல் இப்போதும் இருக்கிறது என்று நினைக்கிறேன். அது எப்படி இருக்கிறதென்றால் அர்த்தநாரீஸ்வரர் என்று சொல்வார்களே ஒரு பக்கம் பார்த்தால் ஆண் மாதிரியும், ஒரு பக்கம் பார்த்தால் பெண் மாதிரியும் சேர்த்துப் பார்க்கிறபோது இரண்டு உருவமும் தெரிகிறது போல இன்றைக்கு இந்த ஸ்டாண்டிங் ஆர்டர் வேண்டிய போது வேண்டியபடி அமுல் செய்துகொள்வதற்கு உதவியாக இருக்கிறது. அதிகாரிகள் எப்படியெல்லாம் நினைக்கிறார்களோ அப்படியெல்லாம் வியாக்யானம் செய்துகொள்ளத்தான் பயன்படுகிறது. குறிப்பாக திட்டவட்டமான மாறுதல்கள் அந்த ஸ்டாண்டிங் ஆர்டரில் செய்யப்படாவிட்டால் ஏழை மக்களுக்கோ, ஹரிஜனங்களுக்கோ ஒன்றுமே நலம் செய்ய முடியாது. இன்றைக்கு உள்ள சிக்கல்களினால் அதிகாரிகள் தவறே செய்யவில்லை என்று சொல்ல முடியாது. அப்படித் தவறு செய்கிறவர்கள் பேரிலே கூட கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியாத வகையில் சர்க்காருடைய கொள்கைகள் இருப்பதனால் இதுபோன்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறதென்று எடுத்துக் காட்ட ஆசைப்படுகிறேன். இப்போது ஹரிஜன மக்களுக்கு வீடு மனை கொடுக்கிற விஷயத்தில் கிராமத்திலே இருக்கக்கூடிய பஞ்சாயத்து அதிகாரிகள் மாத்திரம் அல்ல—ஹெல்த் இன்ஸ்பெக்டர்கள் குறுக்கே நிற்கக் கூடிய நிலைமை இருக்கிறது. இந்த ரெவின்யூ இலாகாவுக்கும், போலீஸ் இலாகாவுக்கும் கூட ஒரு சில இடங்களில் தொடர்பு இருக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. காரணம் குறிப்பாக பல ஆண்டுகளாக சர்க்கார் புறம்போக்கு நிலத்தைப் பயன்படுத்தி, விவசாயம் செய்து கொண்டுவந்த நிலமில்லாத ஏழை ஹரிஜனங்களுக்கு—அவர்களுடைய கோரிக்கையின் பேரில் அவர்களுக்கே அந்த நிலங்களைப் பட்டா செய்து கொடுக்கவேண்டியது இருக்க, அவர்களை நிலத்தில் இருந்து வெளியேறுமாறு நோட்டீஸ் கொடுத்து, அதை மீறுகிறவர்கள் பேரில் சரண்டினன், திருடினன் எனக் கேஸ் போட்டு பலாத்காரமாக அவர்களை நிலத்தில் இருந்து வெளியேற்றி— பிறகு உடனே அந்த நிலங்களை ரெவின்யூ இலாகாவில் உள்ளவர்களின் உறவினர்களுக்கு, அல்லது போலீஸ் இலாகாவில் உள்ளவர்களின் உறவினர்களுக்கு—இவர்களுக்குக்கொடுக்கக்கூடாது என்று நான் சொல்லவில்லை—ஏற்கனவே அந்த நிலத்தில் இருந்தவர்களை வெளியேற்றிவிட்டுக் கொடுத்திருக்கிறார்கள். உதாரணத்திற்கு வேண்டுமானால் சொல்வேன். பவானி தாலூக்கா, சத்யமங்கலம் பிர்க்காவில் நடந்திருக்கிறது. இது சம்பந்தமாக அதிகாரிகளுக்கும் பல மனுக்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இதுவரையில் அவ்விஷயத்தைக் கவனிக்க முடியாத அளவுக்கு நிலைமை இருக்கிறது.

இன்றைக்கு பஞ்சாயத்து நிலம் வேண்டுமென்று கேட்ட போதிலும் பல ஆண்டு காலமாக நிலம் ஜாரி செய்து கொடுக்கப்படாமல் இருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவில் வெள்ளூர் பஞ்சாயத்து போர்டு, பஸ் ஸ்டாண்டு கட்டுவதற்காக நிலம் ஆர்ஜிதம் செய்து தரவேண்டுமென்று பல வருஷங்களுக்கு முன்பாகவே கோரியிருக்கிறது. ஆனால் இன்னும் ஜாரி செய்து கொடுக்கப்படவில்லை. குடியாத்தம் தாலுக்காவில் மாட்டம்பட்டி கிராமத்தில் ரோடு போடுவதற்காக நிலம் ஆர்ஜிதம் செய்து தரவேண்டுமென்று கோரியிருக்கிறார்கள். ஆனால் இதுவரையில் இப்படி பொதுக்காரியங்களுக்காக கோரப்படுகிறபோது ரெவின்யூ இலாகா தனிப்பட்டவர்களுடைய நிலத்தை ஆர்ஜிதம் செய்ய நடவடிக்கை எடுக்க முடியாத அளவுக்கு நிலைமை இருக்கிறது.

ஹரிஜனங்களுக்காக வென்றே ஒதுக்கப்பட்ட டி.ஃஸி. புறம்போக்கு நிலம் இருக்கிறது. அந்த நிலங்களைக்கூட உயர்ந்த ஜாதிக்காரர்களுக்குக் கொடுத்து அவர்கள் விவசாயம் செய்துகொண்டிருக்கிறார்கள். ஹரிஜனங்கள் கேட்டபோதிலும் கூட அவர்களுக்கு அந்த நிலங்கள் கொடுக்கப்படவில்லை. இது விஷயமாகக் கூட பல மனுக்கள் சர்க்காருக்கு எழுதப்பட்டிருக்கின்றன. இதுவரையில் நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்று குறிப்பிட ஆசைப்படுகிறேன். இதையெல்லாம் நல்ல முறையில் மாற்றித் திருத்தக்கூடிய அளவுக்கு நடவடிக்கை எடுக்கவேண்டும். அதேபோன்று பட்டா செய்வதற்கு நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான மனுக்கள் வரக் கூடிய நேரத்தில் ஒரு கிளார்க்கைப் போட்டுவிட்டால் அவர் என்ன செய்வார் ? ஒரு நாள் பூரா வேலை செய்தாலும் கூட இரண்டு பட்டாதான் எழுத முடிகிறது. அதுவும் பக்கம் பக்கமாக எழுதவேண்டியிருக்கிறது என்று காரணம் காட்டக்கூடிய நிலைமை தான் இருக்கிறது. ஆகவே இங்கெல்லாம் வேலையைத் துரிதமாகச் செய்வதற்கு அதிக சிப்பந்திகளைப் போடவேண்டுமென்றால் கூடப் போடுவதற்கு சர்க்கார் முன்வர வேண்டும். அதேமாதிரி ரெவின்யூ போர்டு ஸ்டாண்டிங் ஆர்டரை உடனடியாகத் திருத்தி மாற்றி அமைப்பதற்கும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

இந்தச் சட்டம் வருவதற்கு முன்னால் யார் யார் விவசாயம் செய்து 12 noon.
கொண்டிருந்தார்களோ அவர்கள் பேரில் அந்த நிலத்தை பட்டா செய்து கொடுக்கவேண்டியது அவசியம் என்றளவில் உத்தரவு இடவேண்டும். குடியாத்தம் தாலூகாவில் தர்மர்தோப்பு என்பது பழைய காலத் தோப்பு. அங்கு 50 ஏக்கர் நிலத்தை ஒரு மோட்டார் மன்னர் 14,000-க்கு வாங்கியிருக்கிறார்கள். அது சம்பந்தப்பட்ட பேப்பர் என்னவாயிற்று என்று தெரியவில்லை. அதை சரியாக்கிவிட்டார்கள் என்று சொல்கிறார்கள். இது விஷயமாகவும் கவனிக்கவேண்டும். பின்னர், ஸ்டாம்ப்ஸ் அட்மினிஸ்ட்ரேஷன். ஏழை மக்கள் மனு செய்யவேண்டுமென்றால், எட்டணா, ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் ஸ்டாம்ப் ஒட்டவேண்டுமென்றால் அவர்களுக்கு கஷ்டமாக இருக்கிறது, ஆகவே குறைந்தபட்சம் 100 ரூபாய்க்குள் வருமானம் இருக்கக் கூடியவர்களையாவது, அவர்களுக்கு இதிலிருந்து விதிவிலக்கு அளிக்கவேண்டும். பின், பஞ்சாயத்து கணக்குகளை ஆடிட் செய்ய பஞ்சாயத்து அதிகாரிகள் கையில் ஒப்படைக்கப்பட்டிருப்பது கூடாது. தனியாக ஆடிட்டர்களை நியமிக்க வேண்டும். சம்பளக் கமிஷன் சிபார்சுபடி சம்பளம் பஞ்சாயத்து அதிகாரிகளுக்கு கொடுக்கப்படவில்லை. ஆகவே, இதையும் உடனடியாக கவனித்து கொடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். பின்னர், காம்பன்சேஷன் டு ஜெமீந்தார்ஸ். சர்க்காரை, ஆளும் கட்சியைக் கவிழ்க்கக் கூடிய முறையில் சர்க்காருக்கு நேர் விரோதமாக பணம், காம்பன்ஸேஷன் வாங்கிக்கொண்டு சர்க்காரை எதிர்த்து போராடக்கூடிய அளவிற்கு இன்று நிலைமை இருக்கிறது என்பதை மறந்து விடக்கூடாது. அப்படித்தான் இருக்கிறது, ஜமீன்தாரர்களின், மஹாராஜாக்களின் போக்கு. அதற்காகவேண்டித்தான் காம்பன்சேஷன் கொடுக்கப்படுகிறதா ? அதை ஏழை மக்களுக்காக வேண்டி உபயோகப்படுத்தலாம். அவர்களுக்கு காம்பன்சேஷன் கொடுக்காவிட்டால் அவர்கள் கஷ்டப்பட மாட்டார்கள். அதை. 20 ஆண்டுகள் கழித்தும் கொடுக்கலாம். ஆகவே அதை நிறுத்துவது மிகவும் நல்லதாகயிருக்க முடியும் என்று தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRIMATHI C. KOLANDAI AMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் இன்று கொண்டு வந்திருக்கும் மானயக் கோரிக்கையை ஆதரித்து எங்கள் ஜில்லாவைப் பொறுத்த மட்டில் ஒரு சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன. கோவை ஜில்லாவைப் பொறுத்த மட்டில், கலெக்டர் ஆபீஸ், மற்ற ஆபீஸ்களில் நல்ல முறையில் நிர்வாகம் நடந்து வருகிறது என்பதை பெரும்பாலான அங்கத்தினர்கள் இந்தச் சபையிலேயே கூறியிருக்கிறார்கள். அதோடு கூட,

[Srimathi C. Kolandai Ammal] [18th March 1961

தாலுகா ஆபீஸ் போன்ற யிடங்களில் மின்சார விளக்கு, மின்சார விசிறி போன்ற வசதிகள் ஆன்றி, ரெவின்யூ டிப்பார்ட்மெண்டில் வேலே செய்கிற வர்கள் காலவரையறையின்றி வேலே செய்யும்போது, முற்போக்கான இந்த நேரத்தில் கூட அந்த ஆபீஸ்களில் மின்சார விளக்குகள் இல்லாமல் கிராமங்களில் இருக்கக்கூடிய ரெவின்யூ இலாகாவில் வேலே செய்கிறவர்கள் மிகவும் அவதிப்படுகிருர்கள். அதைச் சீக்கரம் கவனித்து அவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கப்படவேண்டும். கலெக்டர்களுக்கு அதிக வேலேயிருக்கிறது என்ற நிமித்தத்திஞல் ரெவின்யூ அதிகாரிகளே நியமித்திருக்கிருேம். அப்படி அதிகமாக ஆபீஸர்களே நியமித்தும் கூட கலெக்டர்களுக்கு ஒப்பாக அவர்களே வேலேயை ஏற்றுக்கொள்கிருர் களா என்று எண்ணிப்பார்த்தால் அதில் சில தயக்கங்கள் இருக்கின்றன. ஆகவே ரெவின்யூ ஆபீஸர்களுக்கு குறிப்பாக வேலேகளே பங்கிட்டுக் கொடுப்ப தோடு கூட அந்த வேலேகளே அவர்கள் தாங்களாகவே செய்து முடிக்கும் சூழ்நிலேயை அதிகாரத்தில் கொடுத்தால் தான் முடியும். அதிலும் கலெக்டரை, மாதம் 30 நாட்களில் 25 நாட்களுக்கு எங்களால் பார்க்கவே முடியாது. தங்கள் வேலேகளே கவனிப்பதோடு அவர்கள் வெளி ஊர் களுக்கும் செல்லவேண்டியிருக்கிறது. ஞாயிற்றுக்கிழமை லீவ் என்ருலும் வாரத்தில் இன்னின்ன நாளாவது அவர்கள் ஜில்லா தலேநகரில் இருப்பார் கள் என்ற நம்பிக்கை இருக்க வேண்டும். அவர்கள்மாதத்தில் ஒரு சில நாட்கள் இருக்கும்போது நாங்கள் வெளியே வந்து விடுகிருேம். பின்னர், கலெக்டர் ஆபீஸில் போன் இருக்கிறது. ஹரிஜன இலாகா எகப்பட்ட வேலேகளே செய்து வருகிருர்கள். ஹரிஜன நல இலாகா அதிகாரியோடு பேச வேண்டுமென்ருல் கலெக்டர் ஆபீஸிலிருந்து கனெக்ஷன் கொடுக் கிருர்கள். அவர் இருக்கிருர்களா என்று பார்த்து வருகிருேம் என்று சொல்லிப் போய், அதற்குள் கலெக்டர் பேச வேண்டுமென்ருல் அந்தக் கணக்ஷனே டிஸ்கனக்ட் செய்து விடுகிருர்கள். ஆகவே, அவர்களோடு பேச முடிவதில்லே. அவர்கள் இருக்கிருர்களா இல்லேயா என்று பார்த்து வரப் போகிறவர்கள் ஒரு மணி நேரம், இரண்டு மணி நேரம் எடுக்கிருர் கள். ஆகவே, ஹரிஜன இலாகா அதிகாரி, கோவாப்பரேடிவ் டிபார்ட் மெண்ட் அதிகாரி இவர்களுக்கு தனி போன் கனக்ஷன் கொடுக்கவேண்டும். கோவை ஜில்லாவில் உடனடியாக கொடுக்க வேண்டும்.

அடுத்தபடியாக, என்.ஜி.ஒ.-க்களுக்கு கொடுக்கப்படுகிற வீட்டு வாடகை அலவன்ஸ் 12 ரூபாய். கோயம்புத்தூரில் 12 ரூபாய்க்கு ஒரு வீடு கிடைக்குமா என்று எண்ணிப் பார்க்கவேண்டும். 50 ரூபாய் கொடுத்தாலும் ஒரு என்.ஜி.ஒ.-க்கு வீடு கிடைப்பதில்லே. டெப்டி கலெக்டர் கிரேடில் உள்ளவர்களுக்கு கூட வீடு கிடைப்பதில்லே. அவர்கள் வந்து ஹோட்டல் களில்தான் தங்குகிருர்கள். அவர்கள் அங்கு தங்கி சாப்பிட்டு, வேலே பார்த்துக்கொண்டு உயிரோடு இருக்கமுடியுமா என்று எண்ணிப்பார்க்க வேண்டும். வேலே செய்தே செத்துப் போய் விடுவார்கள், அதோடு ஹோட்டலில் சாப்பிட்டு ரெவின்யூ இலாகாவிலும் வேலே செய்து கொண்டு அவர்கள் எவ்வளவு நாட்கள் உயிரோடு இருக்கமுடியும். 24 மணி நேர மும் வேலே செய்பவர்களுக்கு வீட்டுக் கஷ்டம் இருக்கக்கூடாது. ஆகவே கோவை ஜில்லாவைப் பொறுத்தவரையில் என்.ஜி.ஒ.-க்களுக்கு வீடுகள் கட்ட பலயிடங்களிலும் நிலம் வாங்கிப் போட்டிருக்கிருர்கள். **(Deputy Speaker in the chair)** மூன்று வருடங்களுக்கு மேலாகிவிட்டது. ஆனல் வீடுகள் வெற்றிகரமாகக் கட்டிக்கொடுக்கக்கூடிய முறையில் ஏற்பாடுகள் ஆகவில்லே. ஆகவே, சீக்கிரத்தில் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். பின்னர், வைத்திய வசதி கொடுக்கப்படுகிறது. அது வரவேற்கத்தக்கது. ஜில்லா ஹெட்குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரிக்குச் சென்று வைத்தியம் செய்து கொள்ள வேண்டுமென்றிருக்கிறது. அங்கு, டாக்டர் குறிப்பிட்டுக் கொடுக்கும் மருந்து ஆஸ்பத்திரியில் இல்லேயென்று சொன்ஞல் மேல் அதிகாரிக்கு எழுதி

பெர்மிஷன் வருகிறபோது மருந்து வாங்கிக்கொள்ளமுடியாது. மருந்து அவசரத்திற்கு வேண்டியதாகும். ஆகவே உண்மையில் டாக்டர் எழுதிக் கொடுத்திருப்பார்களானுல் அதற்குரிய பணத்தை உடனே கொடுக்கவேண்டும். அது இங்கு இல்லாவிடில் அதாவது டாக்டர் சர்டிபிக்கேட் கொடுத்தால் அதை உடனே வாங்கி பின் மேல் அதிகாரி உத்தரவு வரும்போது அதைத் திரும்பப் பெற்றுக்கொள்ளக்கூடிய சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டும். பின்னர், புறம்போக்கு நிலங்கள், 10, 15 ஆண்டுகளாக ஹரிஜன மக்களும், தாழ்த்தப்பட்ட மக்களும் அங்கு விவசாயம் செய்து கொண்டுவருகிருர்கள். அவர்களுக்கு, அவர்கள் விவசாயம் செய்துகொண்டு வரும் நிலத்தை பட்டா செய்து கொடுக்க வேண்டுமென்று பல முறை இங்கு வற்புறுத்தியும் கூட அங்கு வீடுகள் கட்டப் போகிருர்கள் என்றெல்லாம் கூறி, அது செய்யப்படவில்லை. தொடர்ந்து பத்து, இருபது வருடங்கள் அவர்கள் அந்நிலத்தில் விவசாயம் செய்து வருகிருர்கள் என்ருல் அந் நிலத்தை அவர்களுக்கே எழுதிக்கொடுக்க யோசனை செய்தாகவேண்டும். அதுபற்றி கேட்டால் போர்டுக்கு எழுதியிருக்கிறோம் என்று சாக்குப் போக்கு சொல்கிருர்கள். இந்த நிலையை சீர்ப்படுத்த வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும். மிகவும் அவசியமாகயிருக்கிற புறம்போக்கு நிலங்களைத் தவிர மற்றவைகளை நிலமில்லாத ஏழை ஹரிஜன மக்களுக்கு கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பின், என் தொகுதியில் ஹரிஜனங்களுக்கு நிலம் வாங்கிக் கொடுக்கும் திட்டம்பற்றிய பேப்பர் இப்பொழுது போர்ட்டில் இருக்கிறது. கணபதி என்ற கிராமத்தில் 97,000-க்கு வீடுகள் வாங்க அந்தப் பேப்பர் எங்கெங்கு போய் வந்தது என்று சொல்லமுடியாது, அதன் பின்னுலே போயும் கூட இன்னும் பட்டா செய்து கொடுக்க முடியவில்லை. தாமதத்திற்குக் காரணம், நிலம் விற்கிற விலையை விட அதிகமான தொகை, விலை கோர்ட் தீர்ப்புப்படி இருக்கிறது. சூலூர் பிர்க்காவில் தொழில் பண்ணைகள் ஏராளமாக இருப்பதால் அங்கு ஒரு செண்ட் 500 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. அந்தயிடங்களை வாங்கிக் கொடுக்க இன்னும் முடியவில்லை. நான் இந்த சமயத்தில் தெரிவிக்க விரும்புவது அங்குள்ள மக்களின் பிரதிநிதிகளாக வந்திருக்கும் நாங்கள் சொல்வதை நம்ப வேண்டும். செண்ட் 300 முதல் 1,000 வரை விற்கும்போது கோர்ட் கொடுத்திருக்கிற தீர்ப்பை வைத்துக் கொண்டு கவனித்தால் எவ்வளவு பேர்கள் வந்தாலும், என்ன செய்தாலும் முடியாது. ஹரிஜன மக்களுக்கு மனைக்கட்டுகள் வழங்குவதற்கு நிலத்தை சீக்கிரத்தில் ஆர்ஜிதம் செய்து கொடுக்க வேண்டும்.

**DEPUTY SPEAKER** ; The hon. Member's time is up.

**Srimathi A. S. PONNAMMAL** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்களால் கொண்டு வரப்பட்டிருக்கும் மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். முன்னுல் பேசிய பல அங்கத்தினர்கள் நிலச்சீர்த் திருத்தச் சட்டம் கொண்டு வருவதற்கு காலதாமதம் ஏற்படுகிறது, 1962-வது வருடத்திலாவது வருமா என்றும் கேட்டார்கள். இது எப்படியிருக்கிறது என்ருல், பணக்காரர்கள் இந்த நாட்டில் இருந்துதான் ஆகவேண்டும், அவர்களுடைய கை ஓங்க வேண்டும், அவர்களுக்கு எந்த விதமான பாதகமும் ஏற்பட்டு விடக் கூடாது என்று சொல்லக்கூடிய சுதந்திரக் கட்சியுடன் கூட்டுச் சேர்ந்து கொண்டு இங்கு வந்து ஏழைகளைப்பற்றி பேசுவதைப்பார்த்தால், தொட்டிலில் குழந்தையைப் போட்டுவிட்டு ஒரு கையால் ஆட்டிக்கொண்டு, இன்னெரு கையால் குழந்தையைக் கிள்ளி விடக்கூடிய நிலைமை தான் இருந்து கொண்டிருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பலவித குறைகளைப்பற்றி பல அங்கத்தினர்கள் கூறி விட்டார்கள். வீட்டு வசதி செய்து கொடுக்கும் விஷயத்தில் போலீஸ்காரர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கிறோம். இன்னும் அது போன்று

[Srimathi A. S. Ponnammal] [18th March 1961

பல உத்தியோகஸ்தர்களுக்கும் வீடு கட்டிக்கொடுக்கிறோம். ஆனால் ரெவின்யூ டிப்பார்ட்மெண்ட் அதிகாரிகள் வீட்டு வசதியில்லாமல் பல இடங்களிலும் அவஸ்தைப்படுகிறார்கள். குறிப்பாக மதுரை ஜில்லாவில் அவர்கள் மிகவும் அவதிப்படுகிறார்கள். இந்தக் குறையை இந்த 1961–62-வருடத்திலாவது நிவர்த்தி செய்து வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்ததாக மின்சார வசதி இல்லாத காரணத்தினால் பல இடங்களிலும் பங்கா இழுக்கக்கூடிய நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. அதிலும் இந்த வேலையில் வயதானவர்கள் அதிகமாக இருந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சிலவேளைகளில் அசந்து தூங்கிவிடுகிறார்கள். இதைப்பார்த்து விட்டால் அதிகாரி உடனே அவரை டிஸ்மிஸ் செய்துவிடுகிறார்கள். எவ்வளவோ வசதிகள் பெருகிக்கொண்டிருக்கின்ற இந்த காலத்தில் ஒரு மனிதர் உட்கார்ந்து கொண்டு, இன்னொரு மனிதர் பங்கா இழுக்கக்கூடிய இந்த அவல நிலையை நாம் மாற்றியாக வேண்டும். ஆகவே இம்மாதிரிப்பட்ட கேவலமான நிலை இருக்கின்ற இடங்களில் எல்லாம் உடனடியாக மின்சார வசதி கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நிலம் ஜாரி செய்து கொடுக்கிற விஷயத்தில், பல கோளாறுகள் ஏற்படுகின்றன. ஒவ்வொரு நாளும் இதற்கென்று நியமித்திருக்கும் ஜில்லா ஆபீஸரிடத்திலும், அக்விஸிஷன் ஆபீஸரிடத்திலும் போக வேண்டியிருக்கிறது. இதற்காக அடிக்கடி அலைந்து கொண்டிருக்கின்ற பரிதாப நிலைமையை நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். எங்கள் பக்கத்தில் கண்ணுப்பட்டி என்ற இடத்தில் 32 ஆண்டு காலமாக பயிரிட்டுவந்த செட்டியார் ஒருவருடைய இடத்தை—அவர் தண்டத் தீர்வை செலுத்திய ரசீது, பி. மெமோ ரசீது, இன்னும் என்னவெல்லாமோ ரசீதுகள் வைத்திருந்தும் கூட—காந்தி ஸ்மாரக் சமாஜில் இருக்கக்கூடிய—300 ரூபாய் சம்பளம் வாங்கக் கூடிய ஒரு நபருக்கு அதை பட்டாப்போட்டு கொடுத்துவிட்டார்கள். இதைப்பற்றி அமைச்சர் அவர்களிடத்திலும் சொல்லியிருக்கிறேன் என்று நினைக்கிறேன். இன்னொரு இடத்தில் ஓர் ஏழை ஹரிஜன் 13 ஆண்டு காலமாக அனுபவித்து வந்த இடத்தை ஒரு சினிமா கொட்டகை முதலாளிக்கு பட்டா போட்டுக் கொடுத்துவிட்டார்கள். நல்ல காலமாக அவர் ஒரு காங்கிரஸ்காரராய் இருந்தார். அவரிடத்தில் போய் இந்த இடத்தை 13 ஆண்டு காலமாக வேறு ஒருவர் அனுபவித்து வருகிறார் என்று சொன்னதின் பின்னால் அவரும் திரும்பி அந்த ஏழைக்கே கொடுப்பதற்கு சம்மதித்துவிட்டார். இதை ஏன் சொல்லுகிறேன் என்றால் இம்மாதிரி பல இடங்களில் தினசரி நடந்து கொண்டிருக்கிறது. பல கம்மாப் புறம்போக்கு நிலங்களில் பல ஏழைகள் உழுது பயிரிடுகிறார்கள். பின்னால் அதை பெரிய பணக்காரர்கள் தங்களுக்கு சொந்தமாக்கிவிடுகிறார்கள். அதோடு இம்மாதிரிப்பட்ட இடங்களில் இரண்டு பக்கமும் பெரிய பணக்காரர்கள் உழுதிருப்பார்கள், நடுவில் ஏழை உழுதிருப்பான். இவ்விதம் நடுவில் ஏழை உழும்போது அதில் மட்டும் நீர்கசிவு ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லக் கூடிய அவல நிலை இருந்துகொண்டிருக்கிறது. ஆகவே இம்மாதிரிப்பட்ட புறம்போக்கு நிலங்களை எல்லாம் கணக்கெடுத்து அதை நிலமில்லாத ஏழைகளுக்கு ஜாரி செய்து கொடுக்க வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நம்முடைய அமைச்சர் அவர்கள் எந்த சிறு காரியத்தை சொன்னாலும் உடனே அதன் பேரில் நடவடிக்கை எடுக்கிறார்கள். எங்கள் தொகுதியைப் பொறுத்தவரையில் எந்த சிறிய விஷயமாய் இருந்தாலும் அது நியாயமாக இருந்தால் அதை உடனே செய்து கொடுக்கிறார்கள், நியாயம் இல்லை என்றால் இது நியாயமில்லை, ஆகவே அதை செய்ய முடியாது என்று சொல்லிவிடுகிறார்கள். அந்த முறையில் எங்கள் தொகுதி மக்கள் சார்பில்

18th March 1961] [Srimathi A. S. Ponnammal]

அவர்களுக்கு எங்கள் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். சிலர் தொந்தரவு கொடுக்கிறார்கள் என்ற காரணத்திற்காக அவர்களிடத்தில் போய் சில நியாயமில்லாத விஷயத்தைப் போய் சொன்னால் அதை அவர்கள் ஒப்புக்கொள்வதில்லை. ஆகவே இந்த விஷயத்தில் அவர்கள் ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொரு குறை என்னவென்றால், பள்ளிக்கூட ஆரம்ப காலத்தில், தாசில்தார் அவர்களிடத்திலிருந்து சர்டிபிகேட் வாங்குவதற்காக ஏராள மான பேர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். மகாராஜாக்களைக்கூட சீக் கரமாக பார்த்துவிடலாம். அதைவிட கஷ்டமாக இருக்கிறது, இவர்களைப் பார்ப்பதற்கு. கால்கடுக்க, மணிக்கணக்காக காத்து நின்றால் தான் சர்டிபிகேட் கொடுக்கிறார்கள். கழிந்த ஆண்டில் என்னிடத்தில் இந்தக் குறை வந்தது. நான் அங்கே போய் பார்த்த போது நூற்றுக்கணக்கான பேர்கள் கையெழுத்துக்காக காத்துக்கொண்டிருந்தார்கள். பின்னால் நான் போய் அவர்களிடத்தில் கேட்டுக்கொண்டேன். அதன்பிறகு சீக்கிரமாக எல்லோருக்கும் கையெழுத்துப் போட்டுக்கொடுத்தார் என்று நினைக்கிறேன். ஒவ்வொரு ஊரிலும் ஒன்றிரண்டு பேர்கள் பணக்காரர்களாக இருப்பார்கள். மற்றவர்களுக்கு இந்த ''பாவர்டி சர்டிபிகேட்'' வாங்க வேண்டிய நிலைமை ஏற்படும். அவர்கள் ஹரிஜனங்களாக இருந்தாலும் சரி, அல்லது பிற்பட்ட ஏழைக் குழந்தைகளாக இருந்தாலும் சரி அவர்களுக்கு எல்லாம் இம்மாதிரியான நிலைமை ஏற்படாமல் இருப்பதற்கு ஆவன செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், ஸ்டாம்புகளை விற்பதற்காக நாம் வெண்டர் என்பவரிடம் கொடுக்கிறோம். அவர் சர்க்காரிடத்தில் டிப்பாசிட் கட்டி ஸ்டாம்புகளைவாங்கி விற்பனை செய்து வருகிறார்கள். முக்கியமான சில நேரங்களில் ஸ்டாம்பு வேண்டும் என்று கேட்கும் போது உடனடியாக இல்லை என்று சொல்லி விடுகிறார்கள். பின்னால் லஞ்சம் கொடுத்த பிறகு, ஒரு ரூபாய் அல்ல இரண்டு ரூபாய் அதிகமாக கொடுத்த பிறகு ஸ்டாம்பு கொடுக்கிறார்கள். இந்த நிலைமை மாற வேண்டுமென்றால் ஒவ்வொரு சப்-ரெஜிஸ்ட்ரார் ஆபீஸிலும் ஸ்டாம்புகளை சர்க்காரே விற்க வேண்டும். இன்னொரு விஷயம் என்னவென்றால், ஐந்து ரூபாய் அல்லது ஏழு ரூபாய் ஸ்டாம்பு வேண்டு மென்று கேட்டால் 10 ரூபாய் ஸ்டாம்பு தான் இருக்கிறது என்று சொல்லி விடுகிறார்கள். இதையும் தவிர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு, என்னுடைய ஜில்லாவைப் பொறுத்த அளவில், பல காரியங் கள் அதிகாரிகள் சொல்லுகிறபடி நடைபெறுவதில்லை. இங்கு சபையில் அமைச்சர்களால் சொல்லப்படுகிற பதில்களின்படி காரியங்கள் நடைபெறு கின்றனவா என்பதை பார்ப்பதற்கு நாம் இங்கு ஒரு கமிட்டியை நியமித் திருக்கிறோம். மதுரை ஜில்லாவைப் பொறுத்த வரை நாங்கள் டெவலப் மெண்ட் கௌன்சில் கமிட்டிகளில் பல தீர்மானங்களை போட்டிருக்கிறோம். நாலைந்து ஆண்டுகளாக போடப்படுகிற தீர்மானங்களின்படி எந்த காரிய மும் நடப்பதில்லை. ஆகவே அங்கு தீர்மானிக்கிற காரியங்கள் நடைபெறு கின்றனவா என்பதைப் பார்ப்பதற்கு, அதற்காக ஒரு சிலரை ஒரு சில மெம்பர்களை போட்டு ஒரு கமிட்டி நியமித்து இதை பார்த்து வருவதற்கு வழிவகை செய்வோமானால் ஜில்லா லெவலில் காலதாமதம் ஏற்படுவதை தவிர்க்க முடியும். ஆகவே இதை அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்ததாக, பொதுவாக கிராம தான கிராமங்களுக்கு லோன் கொடுக் கப்படுகிறது. இதற்காக மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன. அதற்கும் கீழேயிருந்து எழுதி மேலே போக வேண்டியிருக்கிறது. எவ்வளவு தான் ஸ்பெஷல் என்று எழுதினாலும் காலதாமதம் ஏற்படுகிறது. பம்பு செட் ஏற்படுத்த வேண்டும், கிணறுகள் வெட்ட வேண்டும், மொத்தமாக கொடுப் பதாக இருந்தாலும் தனித்தனியாக 10, 12 மனுக்கள் வருவதால் அதை

அரசாங்கம் பரிசீலனை செய்து தான் முடிவு எடுக்கவேண்டியிருக்கிறது. ஆகவே இம்மாதிரி காரியங்களில் அதாவது, பம்ப் செட் கொடுப்பதிலும், கிணறுகள் வெட்டுவதிலும் இது போன்ற காரியங்களில் எல்லாம் ஸ்பெஷலாக கன்ஸிடரேஷன் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். (மணியடிக்கப்பட்டது) இன்னும் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிட்டு விட்டு முடித்துக்கொள்கிறேன்.

எங்கள் தொகுதிக்கு சப்-ரெஜிஸ்டிரார் ஆபீஸ் வேண்டும் என்று பல முறை எழுதி எத்தனையோ தடவை நேரிலும் சொல்லியாய்விட்டது. ஐ.ஜி. ஆப் ரெஜிஸ்டிரேஷன் அவர்களிடத்திலும், ஃபைனான்ஸ் டிப்பார்ட்மெண்டிலும் கேட்டதில் அவர்கள் நல்லபடியாக சிபாரிசு செய்திருப்பதாகத்தான் சொல்லுகிறார்கள். ஆனால் இப்போது வந்திருக்கும் வரவு செலவு திட்ட புத்தகங்களைப் பார்த்தால் எட்டு ஆபீஸ்களுக்கு சிபாரிசு செய்யப்பட்டதாகவும், அதில் ஆறு எடுக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. நான் குறிப்பிடும் வாடிப்பட்டி என்கிற இடம் ஏழாவதாகவோ இருக்கிறது. ஆகவே மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து நாங்கள் கேட்டிருக்கும் கோரிக்கையை நிறைவேற்றித்தரவேண்டும் என்று எங்கள் தொகுதி மக்கள் சார்பில் கேட்டுக்கொள்கிறேன்.

* SRI SOWDI S. SUNDARA BHARATHI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு கீழ் ராமநாதபுரம் பகுதியில் பெய்த பெரு மழையும் அடித்த பெரும் புயலும், அதன் காரணமாக ஏற்பட்ட பொருள் சேதமும், சில இடங்களில் ஏற்பட்ட உயிர் சேதமும் நம் எல்லோருக்கும், இந்த நாட்டு மக்களுக்கும் தெரியும். அதற்கு அரசாங்கம் பல உதவிகளைச் செய்வதில் சில இடங்களில் கடனைக் கொடுத்து சில உதவிகள் வழங்கியது. பிற்பாடு ஐந்து ஆண்டுகளில் அந்தப் பகுதியிலுள்ள குடியான மக்கள் இருக்கிறார்களே அவர்களுக்கு நிலத்திலிருந்து சரியான வருவாய் கிடைக்கவில்லை. கடந்த மகசூல் காலத்தில் இதற்கு முன்னால் கொடுத்த தொகைகள் கிஸ்தி எல்லாவற்றையும் வசூலிக்க அரசாங்கம் கையாண்ட முறை இருக்கிறதே அது வருந்தத்தக்க ஒரு முறை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அந்தப் பகுதி மக்கள், எந்த விதமான நன்மையையும் பெறாத மக்கள்; விவசாயத்தில் ஈடுபட்டுள்ள மக்கள் இருக்கிறார்களே அவர்கள் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் அல்லது மற்ற விதமான திட்டங்களினால் எந்த விதமான பயனையும் அடையவில்லை. அந்தப் பகுதி மக்களுக்கு கடந்த ஆண்டுகளிலே கொடுத்த பாக்கிகள் எல்லாவற்றையும் திடீரென்று ஒரே ஆண்டில் வசூலிக்க முற்பட்டது குறித்து நான் வருந்துகிறேன். ஒரு வேளை இந்த அரசாங்கத்திற்குத் தெரியாமல், ஏதோ சம்பந்தப்பட்ட ஆபீஸர்கள் மட்டுமே இந்தத் தவறை செய்து விட்டார்களோ என்று நினைக்கிறேன். இந்த அரசாங்கத்திற்கு இது தெரியாமலிருந்தால், இதற்கு சம்பந்தப்பட்டவர்கள் யார், என் இந்த மாதிரி ஒரு தவறான முறையை கையாண்டார்கள் என்று சற்று பரிசீலிப்பது அவசியமாக எனக்குத் தோன்றுகிறது. கடந்த மகசூல் காலத்தில் அந்தப் பகுதி மக்கள் தங்களுடைய பாக்கித் தொகையைக் கொடுக்க பட்ட கஷ்டங்களை நினைத்துப் பார்க்கும்போது மிகவும் வருந்தத் தக்கதாக இருக்கிறது. அந்தப் பகுதி பெருமை வாய்ந்த குடியான மக்கள் வாழக்கூடிய பகுதி. அவர்கள் இந்தத் தொகைகளைக் கொடுக்க வேண்டாமென்று நினைத்தது கிடையாது. அவர்கள் கொடுக்க முடியவில்லையே என்று மிகவும் வருந்தி கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பெரும்தன விவசாய மக்கள் தங்கள் மாடுகளை அரசாங்கம் ஜப்தி செய்ய முன்வரும்போது அதற்காக விடக்கூடிய கண்ணீர் எல்லோருடைய உள்ளத்தையும் தொடக் கூடியதாக இருக்கிறது. அவர்கள் மாடுகளை உயிரினும் மேலாக, தெய்வத்தைப் போலக் கருதி வணங்கி வருகிறார்கள்—மதிப்பு கொடுத்திருக்கிறார்கள். என்னிடம் கூட ஒருவர் சொன்னார். தங்களுக்கு இருக்கக்கூடிய பொருள்கள் எல்லாவற்றையும்

நிலத்தில் போட்டு விட்டு வருவாயை எதிர்பார்க்கும் காலத்தில் நீங்கள் இந்தத் தொகை பூராவையும் கட்ட வேண்டுமென்று சொல்லி எந்த வித பொருளும் இல்லாமல் மாடுகளைப் பிடித்துக்கொண்டு போகும்போது அவர்கள் விடக் கூடிய கண்ணீர் இருக்கிறதே அதை நினைக்கும்போதே நடுங்கக் கூடிய அளவில் இருக்கிறது. அவர்கள் அவ்வளவு தூரம் ஆத்திரப் படுகிறார்கள்—ஒரு குடியானவனுக்குத்தான் தெரியும் அந்த உணர்ச்சி. ஜப்தியாகப் போகிறது என்று நினைக்கும்போது பதறுகிறேன். நான் இந்த மாதிரி ஒரு இடத்தில்தான் இருக்கும் என்று நினைத்தேன். ஆனால் இந்த மாதிரி பல இடங்களில் நடந்ததாக இங்கே பல அங்கத்தினர்கள் பேசியதிலிருந்து தெரிகிறது. மண்டலமாணிக்கம் என்ற கிராமத்தில் எல்லா நிலங்களையும் ஜப்தி செய்திருக்கிறார்கள். ஒரு சில விவசாயிகள் மட்டும் பாக்கியைக் கொடுக்க முடியாமல் இருந்தால் அது அவர்கள் குறை என்று கருதலாம். இருக்கக்கூடிய கிராம மக்கள் எல்லோரும் தங்களுடைய பாக்கியைக் கொடுக்க முடியாத நிலையில் இருந்தால் அது மக்களுடைய குறை அல்ல என்று சற்று தெரிந்துகொள்ள வேண்டும். கொடுக்க முடியாத நிலை ஏற்படும் இடத்தில் சிறிது சலுகை காட்ட வேண்டும். அந்தச் சலுகைகளைக் கொடுக்கத் தவறியது மிகவும் வருந்தத் தக்கது. அரசாங்கமே ஒரு மாதத்திற்கு ஒரு லட்சம் ரூபாய் வசூல் செய்ய வேண்டுமென்று அதிகாரிகளை விரட்டுவதும், அதிகாரிகள் அதற்காக அவர்களுக்குக் கீழ் இருக்கும் சிப்பந்திகளை விரட்டுவதும், அராஜகமான நிலைமையில் அத்தகைய முறைகள் கையாளப்பட்டது என்பது கண்டிக்கத் தக்க விஷயம். இதை கலெக்‌ஷன் டிரைவ் என்று சொல்லுகிறார்கள். இது கலெக்‌ஷன் டிரைவ் அல்ல—ராபெரி டிரைவ் என்று சொல்லக்கூடிய அளவில்தான் அங்கு கையாளப்படுகிற முறை இருந்து வருகிறது (கனம் ஸ்ரீ. வி. ராமையா: வசூலே செய்ய வேண்டாமென்று சொல்லுகிறீர்களா ?) நான் அப்படிச் சொல்லவில்லை. அந்தப் பகுதி மக்கள் எந்தத் தொகையையும் கொடுக்க மாட்டோம் என்று சொல்லவில்லை. எப்படியாவது அவர்கள் கொடுக்க வேண்டுமென்று நினைக்கிறார்கள். கடந்த ஐந்து ஆண்டு காலமாக கொடுக்க முடியாத நிலை ஏற்பட்டு விட்டது. அவர்களுக்கு நல்ல பலன் கிடைக்க வில்லை. நீர்ப்பாசனத் திட்டங்கள் இருந்தால் அதன் மூலமாக நன்மை கிடைத்தால் வருவாய் கிடைக்கலாம். ஆனால் அந்த மாதிரி இல்லை.

கடைசியாக, இந்த மாதிரி மற்ற பகுதிகளிலும் இருப்பதாக கனம் அங்கத்தினர்கள் பேசியதிலிருந்து தெரிகிறது. இந்த மாதிரி இனிமேல் நடக்காது இருக்க வேண்டும் என்று மீண்டும் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். சில மக்கள் அந்தப் பகுதியில் அன்னிய அரசாங்கம் இருந்த போது கூட இந்த மாதிரி வரி வசூல் செய்தது இல்லை என்று சொல்லி வருத்தப்பட்டார்கள். அந்த மாதிரி நடந்திருக்கிறது. அந்தப் பகுதியில் வரி வசூல் செய்ய எடுத்துக்கொள்ளப்பட்ட முறை சரியானதா என்று பரிசீலித்து, அந்த மாதிரி இனிமேல் நடக்க வேண்டாமென்று கூறிக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI A. GOVINDASAMY : கனம் சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, இன்றைய தினம் பிரச்னைக்கு உரிய மான்யங்கள் மீது கொடுக்கப்பட்டிருக்கிற வெட்டுப் பிரேரணைகளை ஆதரித்து நான் பேச விரும்புகிறேன். கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் இந்த இலாகாவை ஏற்றுக்கொண்ட நாளிலிருந்து நிலச் சீர்திருத்தம் சம்பந்தமாக தஞ்சை பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம், நியாய வாரச் சட்டம் முதலிய சட்டங்களை நிறைவேற்றி இறுதியாக நில உச்ச வரம்புச் சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றுகிறேன் என்று சொல்லி, அது இப்போது காற்றில் பறக்க விடப்பட்டிருக்கிறது என்ற குற்றச்சாட்டைச் சொல்ல விரும்புகிறேன். நிலச் சீர்திருத்தச் சட்டம் வருகிறது, வருகிறது என்று 1953-லிருந்து சொல்லி வந்த காரணத்தினால் நில சொந்தக்காரர்கள் ஜாக்கிரதையாக நில வுடமையைப் பிரித்து விட்டார்கள் என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்—

[Sri A. Govindasamy] [18th March 1961

அதைப்பற்றி நான் பல முறை சுட்டிக்காட்டியிருக்கிறேன். 1960-ம் ஆண்டிலே எப்ரல் மாதத்தில் நில உச்சவரம்பு சட்டத்தை இங்கே கொண்டு வந்து பிரேரேபித்திருக்கிறார்கள். இப்போது 1961, எப்ரல் நெருங்குகிறது. செலெக்ட் கமிட்டியிலேயே இருக்கிறது. அதை துரிசப்படுத்த வேண்டுமென்று இந்தக் குற்றச்சாட்டைச் சொன்னேன். இதை எதிர்பார்த்திருக்கிற விவசாயிகளுக்கு நன்மை செய்யும் அளவில் இல்லாமல் பெரிய நிலச்சுவாந்தார்களுக்குச் சாதகமாகி சர்க்காருடைய கொள்கை தோற்றுவிட்டது என்று சொன்னால் இதிலே சர்க்காருக்குப் பொறுப்பு இல்லை என்று சொல்வதற்கில்லை. திராவிட முன்னேற்றக் கழகமோ, சுதந்திரா கட்சியோ இதற்கு பொறுப்பு என்று சொல்ல முடியாது. காங்கிரஸ் கட்சியிலேயே சுதந்திரா கட்சி கொள்கை உள்ளவர்கள் அதிகமாக இருப்பதால்தான் இந்த காலதாமதம் ஆகிறது என்ற குற்றச்சாட்டை நான் சொல்ல விரும்புகிறேன். அதிலும் ஸ்டாம்ப் பேப்பர் விற்றிருக்கிறதைப் பார்க்கும்போது ரூ. 321·51 லட்சமாக 1958–59-ல் இருந்தது, ரூ. 414·22 லட்சமாக 1959–60-ல் உயர்ந்தது. 1960–61-ம் ஆண்டுக்கு ரூ. 413·00 லட்சம் என்று பட்ஜெட் எஸ்ட்டிமேட் போட்டு அது இப்போது ரூ. 441·00 லட்சமாக உயர்ந்திருக்கிறது. திடீரென 1959–60-ம் ஆண்டில் உயர்ந்ததற்குக் காரணம் என்ன? சட்டம் வருகிறது என்றவுடனே அவசரம் அவசரமாக எழுதியிருக்கிறார்கள் என்று எடுத்துக் காட்டுகிறது. 'They anticipated larger receipts from the sale of stamps' என்று இதிலே குறிப்பிடுகிறார்கள். அவர்களும் அதை எதிர்பார்க்கிறார்கள். விற்க வேண்டும்—விற்கட்டும்—என்று அவர்களே சொல்லுகிறார்கள். அதே போன்று பதிவுக் கட்டணத்தைப் பார்க்கும்போது 1958–59-ல் 60·55 லட்சமாக இருந்தது, 1959–60-ல் 74·56 லட்சமாக உயர்ந்து, 1960–61ல் 62 லட்சம் எஸ்டிமேட் போட்டு, அதுவே 75 லட்சமாகக் கிடைத்திருக்கிறது. அதைப் பார்க்கும்போது 'The increase is mainly due to increase in the registration of documents' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த இரண்டு தொகையையும் வைத்துப் பார்க்கும்போது, ஸ்டாம்ப் பேப்பர் வாங்கி பதிவு செய்து விட்டார்கள். இந்தச் சட்டம் வெற்றி பெறாத அளவுக்கு நடைமுறை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது என்று இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக கடன் வசூலிக்கும் விஷயத்தில் அதிக கெடுபிடி இருக்கிறது. கடலூர் ஓ.டி.-யில் மணியக்காரர் ஒருவரை அவர் வாங்கிய சொந்தக் கடனுக்காக சிதம்பரம் ஆர்.டி.ஓ. பார்வையிட்டிருக்கிறார். பார்வையிட்டு கடன் தொகையை திருப்பிக் கேட்ட நேரத்தில் அந்த மணியக்காரர் பணம் இல்லை என்று சொல்லிய நேரத்தில், அவர் அப்போது நிலவரி வசூல் செய்து 10 ரூபாய் வைத்திருந்தார். அந்த 10 ரூபாயை எடுத்துக்கொண்டு அதை சொந்தக் கணக்கில் வைத்துக் கொண்டு ஈடு செய்து அந்த மணியக்காரருடைய பேனாவை ஜப்தி செய்து எடுத்துக்கொண்டு போயிருக்கிறார். மணியக்காரரை வேலையிலிருந்தும் சஸ்பெண்ட் செய்துவிட்டார். நடு வீதியிலே டாம் டாம் போட்டார்கள். அந்த அவமானம் தாங்காமல் தற்கொலை செய்து கொண்டாரென்று சொன்ன சோக கதையைக் கேட்டு நான் உண்மையிலேயே வருத்தப்படுகிறேன். இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து, நியாயம் வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

12–30 p.m. கிராம உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு கொடுக்க வேண்டுமென்று கேட்ட நேரத்திலே, அவர்கள் எல்லாம் கௌரவ உத்தியோகஸ்தர்கள் என்ற முறையிலே வேலை செய்யக்கூடியவர்கள், அவர்களுடைய சம்பளத்தைப்பற்றி நீங்கள் கவலை எடுத்துக்கொள்ளக் கூடாது என்று சொன்னார்கள். இப்போது கிராம பஞ்சாயத்து யூனியன் வந்த பிறகு, கிராமக் கணக்குகளையெல்லாம் பார்ப்பதோடு, பஞ்சாயத்து காரியதரிசியாகவும் வேலை செய்ய வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஜனநாயகத்திலே

பற்றுள்ளதாகக் கூறுகின்ற இந்த சர்க்கார், இந்த நேரத்திலே பஞ்சாயத்தில் சர்க்கார் பிரதிநிதியாகப் போட்டு தலையிடக் காரணமென்ன? பஞ்சாயத்தை ஜனங்களின் பிரதிநிதிகளே நடத்த வேண்டுமென்று சொல்கிறார்கள். தவிர, ஏற்கெனவே வேலைகள் அதிகமிருக்கிறது என்று சொல்லும்போது, பஞ்சாயத்து வேலைகளையும் கவனிக்கச் சொல்லி, அந்தக் கணக்குகளையும் பார்க்க வேண்டுமென்று சொன்னால், எந்த வேலைகளும் ஒழுங்காக நடைபெறாது. அப்படி இரண்டு வேலைகளையும் செய்யக்கூடிய கிராம உத்தியோகஸ்தர்களுக்கு போதுமான சம்பளமும், அலவன்சும் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். இதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் கவனித்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தீப்பிடித்துக் கொண்டாலும், வெள்ளத்தால் பாதிக்கப்பட்டாலும் வெள்ளைக்காரனுடைய காலத்திலே குடிசை ஒன்றுக்கு 30 ரூபாய்தான் அதிகபட்சமாக கொடுக்கப்பட்டது. அப்போது விலைவாசிகள் எல்லாம் மலிவாக இருந்தகாலம். ஆனால் இப்போதும் அதே நிலையில்தான் கொடுக்கப்பட்டு வருகிறது.

THE HON. SRI M. A. MANICKAVELU: அப்போது 30 ரூபாய் கொடுக்கப்படவில்லை. இப்போதுதான் கொடுக்கப்படுகிறது.

SRI A. GOVINDASAMY: இப்போதுதான் 30 ரூபாய் கொடுப்பதாக இருந்தாலும், அது போதுமா? சிந்தித்துப் பார்க்க வேண்டும். முப்பது ரூபாய் என்று சொல்லப்படுகிறதே தவிர, எல்லாருக்கும் அந்த 30 ரூபாய் கொடுக்கப்படுவது இல்லை. சில இடங்களில் 20, 10 என்று கூட கொடுக்கப்படுகிறது. சில இடங்களில் அதிகாரிகள் வந்து பார்த்து குறித்துக் கொண்டு போய், பணமே வழங்கவில்லை. அண்மையிலே தென் ஆற்காடு மாவட்டத்தில் சிதம்பரம், கடலூர், விழுப்புரம் ஆகிய தாலுகாவிலே பல கிராமங்கள், சேரிகள் பாதிக்கப்பட்டன. சேரிகளுக்கு நஷ்ட ஈடு எதிர் பார்த்த அளவு கொடுக்கவில்லை. அதேபோல் விவசாயிகளுக்கு நஷ்ட ஈடும் கொடுக்கப்படவில்லை. ஏதோ ஒரு சில இடங்களில் சலுகை காட்டப்பட்டிருக்கிறது. பரவலாக செய்யவில்லையென்பதை இந்த நேரத்திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நெய்வேலியில் போதுமான நஷ்ட ஈடு விவசாயிகளுக்குக் கொடுக்கவில்லை. 1953-லே நில ஆர்ஜிதச் சட்டம் கொண்டு வந்த நேரத்திலேகூட, அங்குள்ள மக்களுக்குச் சரியான முறையில் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டு வந்தது. ஆனால் அப்படி சரியான முறையிலே கொடுக்காததால், ஹைகோர்டுக்குப் போய் அவர்கள் வெற்றி கண்டார்கள். ஆனால் அதற்கும் மேல் சர்க்கார் மேல் கோர்ட்டுக்குப் போகிறார்களே தவிர, ஹைகோர்ட் நீதி வழங்கியபடி விவசாயிகளுக்குப் போதுமான நஷ்ட ஈடு கொடுக்க மறுக்கப்படுகிறது. அவர்களுக்குப் போதுமான நஷ்ட ஈட்டை கொடுக்க வேண்டுமென்று இந்த நேரத்திலே வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

என்னுடைய தொகுதியிலுள்ள ஒரு கிராமத்தில் புட் புரொடக்ஷன் அதாவது விவசாய அபிவிருத்தி என்று சொல்லி, அந்த இடத்திலே நீர்ப்பாசன வசதியை அதிகரிப்பதாகக் கூறி கலிங்கலை உயர்த்தினார்கள். விழுப்புரம் தாலூகா சின்னத் தச்சூர் கிராமத்தில் தான் மேற்படி கலிங்கல் உயர்த்தப்பட்டது. இதனால் டி. புதுப்பாளையம் பாதிக்கப்பட்டது. புதுப்பாளையம் கிராம விவசாயிகள் ஆட்சேபணை தெரிவித்ததின் பேரில், ரெவின்யூ இலாகாவும் உணவு உற்பத்தி இலாகாவும் கலிங்கலை உயர்த்தியது தவறு என்று உணர்ந்து, கலிங்கலைத் தாழ்த்த வேண்டும் என்று உத்திரவு போட்டுங்கூட சின்னத்தச்சூர் மக்கள் எதிர்ப்பதால், கலிங்கலை இன்னும் தாழ்த்தாமலே விட்டு வைத்திருக்கிறார்கள். உடனடியாகத் தாழ்த்த வேண்டும்.

விவசாய வருமான வரி போட்ட காலத்திலே, அதிலே அரசாங்கம் எதிர்பார்த்த அளவு நல்ல பலன் கிடைக்கவில்லை என்று காலையில் கொடுத்த புள்ளி விவரங்களிலிருந்துகூடத் தெரிகிறது. தென் ஆற்காடு ஜில்லாவிலே ரூ. 3,460-90 ந. பை. வருமென்று எதிர்பார்த்தார்கள். ஆனால் கிடைத்ததோ ரூ. 8-95 ந.பை. அதேபோல் தஞ்சை மாவட்டத்தில் வரையறை செய்யப்பட்ட தொகை ரூ. 65,859—72 ந.பை. ஆனால் கிடைத்திருக்கிறது ரூ. 13,628 தான். நேரமில்லாமையால் இந்தப் புள்ளி விவரத்தை மட்டும் உதாரணத்திற்காகச் சொல்கிறேன். இதிலிருந்து என்ன தெரிகிறது ? அரசாங்கம் எதிர்பார்க்கிறபடி வருமானம் கிடைக்கவில்லை என்பது நன்கு தெரிகிறது. இதற்குக் காரணம் விவசாயிகள் ஜாக்கிரதையாக முன் கூட்டியே நிலத்தைப் பிரித்து விட்டார்கள் என்பதை எடுத்துக் காட்டுகிறது என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக, ஆதித்திராவிட மக்களுக்கும், பின்தங்கிய மக்களுக்கும் நிலத்தை ஜாரி செய்து கொடுக்க வேண்டும். அதோடு அவர்கள் குடும்பங்களுக்குக் குடியிருப்பு வீடுகள் கட்டிக் கொள்ள வசதி செய்து கொடுக்க வேண்டும். அதோடு அவர்கள் நல்ல முறையிலே பயிரிடுவதற்கும் வழி வகை செய்து கொடுக்க வேண்டும். என்னுடைய உரையை முடித்துக் கொள்வதற்கு முன் இன்னும் ஒரே ஒரு விஷயத்தைச் சொல்லி முடித்துக் கொள்கிறேன். தென் ஆற்காடு மாவட்டத்தைக் கடலூர், விழுப்புரம் என்ற இரு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். விழுப்புரம் மத்திய இடமாக இருந்தும், ஆர்.டீ.ஓ.-வை, திருக்கோயிலூரிலே போட்டிருக்கிறார்கள். திருக்கோயிலூர், திண்டிவனம், செஞ்சி ஆகிய இடங்களுக்கு விழுப்புரம் தான் மத்திய இடமாக இருப்பதால், இங்கு ஆர்.டீ.ஓ.-வை மாற்றினால் வசதியாக இருக்கும். அதோடு இப்போது பீ.டீ.ஓ.-க்களுக்கு ஜீப் கொடுத்திருக்கும்போது, அதேபோல் தாசில்தார்களுக்கும் ஜீப் வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI S. R. MUNUSAMY : கனம் சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மான்யத்தின் மீது இந்தியக் குடியரசுக் கட்சியின் சார்பாக என்னுடைய அபிப்பிராயங்களைச் சொல்கிறேன். இப்போது ரெவின்யூ இலாகாவிலே ஒதுக்கப்பட்டிருக்கும் நிலங்கள் எத்தனை, அதிலே விவசாயத்திற்கு உகந்த நிலங்களாக மாற்றப்பட்டவை எவ்வளவு, புறம்போக்குகளாக உள்ளவை எவ்வளவு என்று கணக்குகள் எடுத்துப் பார்ப்பார்களேயானால் ஆங்காங்கு வாழக்கூடிய எண்ணிக்கைகளுக்குத் தகுந்தவாறு எப்போதுமே நிலங்கள் ஒதுக்கப்படவில்லை யென்பது தெரியும். இதை நான் இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

உண்மையிலேயே, குறிப்பாக நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். அரக்கோணம் தாலுகாவிலே சூறை கிராமத்திலே டி.சி. புறம்போக்கு 500 எக்கர் இருக்கிறது. அங்கு வாழக் கூடிய ஒதுக்கப்பட்ட மக்கள் 20 குடும்பங்கள் இருக்கிறார்கள். அதை விவசாயம் செய்வதற்கு ஏழை விவசாயிகள் கோரினால், அங்கே அன்னிய கிராமத்தார் விவசாயம் செய்வதற்கு நிலம் கொடுக்கக்கூடாது என்று சட்டம் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

அதேபோல் நிலமில்லாத விவசாயிகள், அநேகமாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பிலே உள்ளவர்கள், ஆங்காங்கே இருக்கக்கூடிய ஆட்சேபணைக்குரிய புறம்போக்கு நிலங்களிலே விவசாயம் செய்து, அதற்கு தண்டத் தீர்வை கட்டிக் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். அதற்காக என்னுடைய விவசாயச் சங்க சார்பிலே, சென்ற ஆண்டு மே மாதம் சர்க்காருக்கு ஒரு மகா நாட்டுத் தீர்மானத்தை அனுப்பினோம். அதே போல் சென்ற ஆண்டு நவம்பர் மாதம் விவசாய சங்கத்திற்கு வந்த தகவல்களை வைத்துக்கொண்டு சுமார் 2,000 மனுக்களை நான் சேகரித்து, இந்தச் சர்க்காருக்கு

அனுப்பினேன். அதிலே குறிப்பிட்டிருப்பது அத்தனையும் தண்டத் தீர்வை கட்டக் கூடிய விவசாயிகள். உண்மையிலேயே வட ஆற்காடு ஜில்லாவிலே இன்றைக்கு நில வருமானத்தைவிட, தண்டத் தீர்வை கட்டக் கூடிய மக்கள்தான் அதிகமாகிக் கொண்டு வருகிறார்கள். ஆனால் வட்டார வளர்ச்சித் திட்டத்தின்கீழ் பார்ப்போமேயானால் எங்களுடைய வட்டாரத்திலே ஒரு நபருக்கு மூன்று ஏக்கர் நிலம் இருக்க வேண்டுமென்று சொல்லப் படுகிறது. ஆனால் என்னுடைய மாவட்டத்திலே நிலம் மிகக் குறைவு. ஒவ்வொரு வட்டாரத்திற்கும் 22,000 ஏக்கர் நிலங்கள்கூடத் தருவது கிடையாது. அப்படி இருக்கக்கூடிய நாங்கள் அதிகமாகப் புறம்போக்குகளைத் தான் ஏராளமாக ஆக்கிரமித்து தண்டத் தீர்வை கட்ட வேண்டியவர்களாக இருக்கிறோம். அதற்காகத்தான் இதைப்பல முறைகள் சர்க்காருக்கு மனுக்கள் அனுப்பியதோடு, நானும் எங்கள் தலைவர் ஸ்ரீ சிவராஜ் அவர்களும் 1955-லிருந்து, இது வரையினும் வலியுறுத்திக் கொண்டு வருகிறோம். அப்படிச் சொல்லியும், சர்க்கார் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஒதுக்கியிருக்கிறார்களா என்றால் இல்லை. டி.சி. புறம்போக்கு நிலங்களை 1925-ல் நாம் அடிமைகளாக இருந்த காலத்தில், வெள்ளையன் காலத்தில் ஒதுக்கப் பட்டதே தவிர, இன்றைக்கு நாம் ஜனநாயகம் அடைந்த பிறகுகூட, இது வரையில் ஒன்றும் செய்யாமல் இருக்கிறோம். ஆகவே, அவர்களுக்கு நல்ல காரியம் செய்யக்கூடிய முறையிலே இதை ஒரு கைங்கரியமாகக் கருதி, புறம்போக்காக உள்ள நிலங்களைக் கொடுக்க வேண்டுமென்று நாங்கள் வற்புறுத்தி வந்திருக்கிறோம். ஆனால் சர்க்கார் அந்த நல்லெண்ணத்தோடு கூட இல்லாமல், இன்றைக்கு டி.சி. புறம்போக்குகளைக் கைப் பற்றக்கூடிய நிலையில்தான் இருக்கிறது.

சூறை கிராமத்தில் இருக்கக்கூடிய 500 ஏக்கர் பூமியிலே, அங்குள்ள சுமார் 60 தாழ்த்தப்பட்ட மக்களை அங்கு குடியேற்றுவதற்கு நாங்கள் சர்க்காருக்கு மனு அனுப்பினால், உடனே அந்தப் புறம் போக்கு நிலத்தை காட்டுக்கு ஒதுக்கி இருப்பதாக அங்குள்ள பீ.டி.ஓ. ரேஞ்சருக்குச் சிபாரசு செய்திருக்கிறார். அதை ஆட்சேபித்து சென்ற வாரத்தில் சர்க்காருக்கு ஒரு மனு அனுப்பியிருக்கிறேன். வெள்ளையர் காலத்திலே ஒதுக்கப்பட்ட 'டி.ஸி' புறம்போக்குகளைக் கைப்பற்றக் கூடாது என்பதை அறிமுகப்படுத்தி இருக்கிறேன்.

அடுத்தபடியாக, வேலூர் தாலுகாவில் பாலமதியில் 'டி.ஸி.' புறம் போக்கு நிலம் 144 ஏக்கர் இருக்கிறது. அதிலே தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஒன்றுமே கிடையாது. புறம்போக்கு யாருக்குப் பயன்படுகிறது என்று பார்ப் போமானால், அங்குள்ள கணக்குப்பிள்ளை, மணியக்காரருக்குக் குத்தகைக்கு விடுவதற்குப் பயன்படுகிறது. பிற்பட்ட மக்களுக்கு யாருக்காகிலும் பட்டா செய்திருக்கிறார்களா என்றால், இல்லவே இல்லை. ஆம்பூர் பெரியாங் குப்பம் கிராமத்திலே 15 ஆண்டுகளாக ஏழை விவசாயிகள் கிணறு வெட்டிப் பிழைக்கிறார்கள். புறம்போக்கு நிலத்தை அவர்களுக்குப் பட்டா செய்து கொடுக்க வேண்டும் என்று பலமுறை கேட்கப்பட்டிருக்கிறது. 1955-ம் வருஷத்திலிருந்து விவசாயச் சங்கம் கேட்டுக் கொண்டிருக்கிறது. அவர்கள் ஏமாற்றப்படுகிறார்கள், தோப்பு வைப்பதாகச் சொல்லி, விவசாயிகளின் மீது பொறாமையின் காரணமாகக் கொடுக்க மறுக்கிறார்கள். ரெவின்யூ அதிகாரிகள் கூட அந்த பிரசிடெண்டை வற்புறுத்துகிறார்கள், 'கொடுத்து விடுங்கள், இதெல்லாம் ஏன்' என்று. அப்பேர்பட்ட தகராறு உள்ள இடத்தை ஒரு காங்கிரஸ் முக்கியஸ்தராக இருக்கக்கூடியவருடைய மைத் துனருக்குக் கொடுக்கிறோம் என்றால், அது கட்சிப் பாகுபாடு இல்லாமல் இருக்கிறதா என்று சர்க்காருக்கு அறிமுகப்படுத்துகிறேன் (டெபுடி ஸ்பீகர்: டைம் ஆகிவிட்டது) விவசாயிகளுக்குக் கடன்கொடுப்பதிலே கண்டிஷன் பட்டா வாக இருக்கிறது, அதனால் கடன் கொடுக்கக்கூடாது என்று சொல்லுகிறார்கள். இதனால் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வேறு வழியே இல்லை. ஒதுக்கப்பட்ட

'டி.வி.' புறம்போக்கு நிலங்களைத் தாழ்த்தப்பட்டவர்களுக்கு பட்டா செய்து கொடுக்க வேண்டுமென்றும், விவசாயம் செய்வதற்கு லாயக்கற்ற பூமியைத் திருத்தி அமைப்பதற்குக் கடன் கொடுத்து உதவ வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**Sri M. KALYANASUNDARAM:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மாவட்ட நிர்வாகம் இன்னும் அடுத்து ஒரு வருஷத்திற்கு நடப்பதற்கு வேண்டிய தொகையை நம்முடைய அமைச்சர் அவர்கள் கேட்கிறார்கள். இந்த வருஷம் நிர்வாகம் எப்படி நடந்திருக்கிறது என்பதைப் பார்த்து, அடுத்த வருஷத்திற்கு இவ்வளவு தொகை கொடுக்கலாமா என்பதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். செலவு அதிகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. வருஷா வருஷம் புத்தகம் பெரியதாக ஆகிக் கொண்டிருக்கிறது. டெவலப்மெண்டு எகானமியில் அப்படித் தான் இருக்கும் என்று மந்திரி அவர்கள் சொல்லலாம். வளர்ந்து வரக்கூடிய பொருளாதாரத்தில் செலவு அதிகமாக ஆகிறது, அதற்குத் தான் இது அடையாளம் என்று சொல்லலாம். அதற்குத் தகுந்தாற்போல் வருமானமும் இருக்கிறது. நிர்வாகத்திற்கு ஆகக்கூடிய செலவை ஓரளவுக்கு அந்தந்த இலாகாவிலேயே வசூலிக்கக் கூடிய கொள்கை தான் இப்பொழுது இருக்கிறது. கனம் நிதி அமைச்சர் அவர்கள் ' நாங்கள் புதிய வரி ஒன்றுமே போடாமல் பட்ஜெட் தயாரித்து விட்டோம் ' என்று சொன்னார்கள். சபையில் கையும் தட்டப்பட்டது. ஏற்கனவே போடப்பட்ட வரி ஒரு பக்கம் இருக்கட்டும். மத்திய அரசாங்கம் போட்ட புதிய வரி ஜனங்களைப் பாதிக்கக் கூடியது, இன்னொரு பக்கத்தில் இருக்கட்டும். பட்ஜெட்டில் புதிய வரி ஒன்றும் போடா விட்டாலும் ஜனங்களுக்குப் புரியாதப்வகையில், மறைமுகமாக தந்திரமாக ஜனங்களின் இரத்தத்தை உறிஞ்சக்கூடிய வகையில் வரி போடுவதில் நம்முடைய மந்திரி சபைதான் முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. ஸ்டாம்பு கட்டண வருமானத்தைப் பற்றி நண்பர் திரு. கோவிந்தசுவாமி அவர்கள் சொன்னார்கள். அந்த வருமானம் உயர்ந்திருப்பதற்கு அவர் ஒரு காரணம் கூறினார். அதுவும் ஒரு காரணம் தான். திடீரென்று வருமானம் உயர்ந்திருப்பதற்கு அவர் கூறியதும் ஒரு காரணம்தான். அதற்கு மேலே அடுத்த வருஷத்தில் வருமானம் ரூ. 4,83,00,000-ல் நிலைத்து நிற்கிறது. நிலங்கள் பிரிக்கப்பட்டு பரிவர்த்தனை செய்யப்பட்டதால் திடீரென்று வருமானம் உயர்ந்ததற்கு ஒரு காரணம் என்று சொன்னார். அதுவும் ஒரு காரணம் தான். ஆனால், எந்த டிபார்ட்மெண்டை எடுத்துக் கொண்டாலும் சரி, ஒரு காகிதம் உள்ளே போக வேண்டுமென்றால், அதற்கு ஸ்டாம்பு ஒட்ட வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. 1954-55-ல் ஸ்டாம்பு மூலம் வருமானம் ரூ. 2,52,00,000-ஆக இருந்தது, பிறகு ரூ. 4,83,00,000-ஆக அந்த அளவுக்கு உயர்ந்து அதில் நிலைத்து விட்டது என்பதைப் பார்க்கிறோம். எந்த டிபார்ட்மெண்டை எடுத்துக் கொண்டாலும், சாதாரணமாக ஹரிஜன மக்கள் தங்களுக்குக் குடிக்கும் தண்ணீர் கிடைக்கவில்லை, கிணறு வெட்ட வேண்டுமென்று கோரி 10, 20 கையெழுத்து வாங்கி ஒரு மனு கொடுத்தால் கூட, அதற்கும் ஸ்டாம்பு ஒட்ட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். விதி விலக்கு கொடுக்கலாம் என்று இருக்கிறது. ஆனால், அவர்களே பயந்து கொண்டு ஸ்டாம்பு ஒட்டிக் கொடுக்கிறார்கள். ஏனென்றால், இல்லாவிட்டால் காகிதங்கள் திருப்பி அனுப்பப்பட்டு விடுகின்றன. எம்.எல்.ஏ. ஸ்டாம்பு இல்லாமல் ' பெடிஷன் பிரசெண்டு ' செய்யலாம் என்று இருக்கிறது. இருந்தாலும் நான் அனுப்பிய ஒரு மனுவை ஒரு டி.ஆர்.ஓ. ஸ்டாம்பு இல்லை என்று திருப்பி அனுப்பிவிட்டார். இம் மாதிரி பெடிஷனுக்கு ஸ்டாம்பு ஒட்ட வேண்டுமென்று சொல்லுவதற்கு இந்த சபையின் அனுமதி கிடையாது. சர்க்காருக்கு இருக்கிற நிர்வாக அதிகாரத்தை உபயோகப்படுத்தி சர்க்காருக்கு வரக்கூடிய ஒவ்வொரு காகிதமும் ஸ்டாம்பு ஒட்டி அனுப்பப்பட வேண்டும் என்று நீங்களே நிர்ப்பந்தப் படுத்துகிறீர்கள். ஜனங்கள் வேறு வழி இல்லை, பதில் கிடைக்க வேண்டுமே என்று ஸ்டாம்பு ஒட்டி அனுப்புகிறார்கள். ஜனநாயகத்தில் அரசாங்கத்திற்கு

ஸ்டாம்பு இல்லாமல் ஒரு கடிதம் எழுதி பதில் பெறுவதற்குக்கூட மக்களுக்கு உரிமை இல்லை. இம்மாதிரி ஸ்டாம்பு வரி போட்டுவிட்டு, புதிய தாக ஒன்றும் வரி போடவில்லை என்று சொல்லுவது சரியல்ல. வேறு ரூபத்தில் வரி போடப்படுகிறது என்றுதான் சொல்லவேண்டும்.

அப்படிப் போட்ட வரியாவது ஜனங்களுக்கு நல்ல முறையில் உபயோகப் படுகிறதா என்று பார்த்தால் அதுவும் இல்லை. தாலூகா ஆபீஸ்கள் 20 வருஷங்களுக்கு முன்னால் எப்படி இருந்ததோ அதே நிலைமையில்தான் இப்பொழுதும் இருந்து கொண்டிருக்கிறது. தாலூகா ஆபீசுகளில் ஜனங் கள் வந்து உட்காருவதற்கோ அல்லது அதிகாரிகளைப் பார்ப்பதற்கோ பேசுவதற்கோ வேண்டிய வசதி கொஞ்சம்கூட கிடையாது. இரண்டு, மூன்று பேர்கள் சேர்ந்தாற்போல் தாசில்தாரைப் பார்க்க வந்துவிட்டால், நாற்காலி போடுவதற்குத் திண்டாடுகிறார்கள். 'சிப்பந்திகள்' உட்காருவதற்குக்கூட வசதி இல்லை. ஸ்டூல், பெஞ்சு ஆகியவைகளைப் போட்டுக் கொண்டு வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். தாலூகா ஆபீஸ், ஆர்.டி.ஓ. ஆபீஸ்களில் வேலை செய்யக் கூடியவர்கள் மேஜை, நாற்காலி இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். 'ஸ்டாப்' அதிகமாக்கப்பட்டாலும், அதற்குத் தகுந்தபடி மேஜை, நாற்காலி வாங்குவதில்லை. அதை யெல்லாம் கொஞ்சம் கவனிக்க வேண்டும். என்.ஜி.ஓ.-வினர் என்று ஒரு ஜாதி, 'கெஜெட் ஆபீஸர்' என்று ஒரு ஜாதி என்பது கூடாது. லைட் இருந்தால்கூட, என்.ஜி.ஓ.-வினருக்குச் சில காலங்களில் 'பான்' போடக் கூடாது என்று ஒரு விதி இருக்கிறது. அம்மாதிரி விதி இனி இருக்கக் கூடாது. அந்த ஏற்றத்தாழ்வு வேண்டிய தில்லை. 'பான்' போடுவதென்பது அந்தஸ்துக்காக இல்லை. மின்சார விசிறி போட்டு வசதி செய்து கொடுப்பது ஒரு அந்தஸ்துக்கு அடையாளம் அல்ல என்று கருதுபவன் நான். பெரிய அதிகாரிகள் வேண்டுமானால் அவ்வாறு கருதலாம். சாதாரணமாக எல்லா ஊழியர்களுக்கும் அலுப்பு ஏற்படாமல் சுறுசுறுப்பாக வேலை செய்யும் பொருட்டு, வேலைத் திறமையை அபிவிருத்தி செய்வதற்கு செய்து கொடுக்கக்கூடிய வசதி என்று கருதி, எல்லா ஊழியர்களுக்கும் மின்சார விசிறி போட்டு வசதி செய்து கொடுக்க வேண்டும். அதில் அனுகூலம் இருக்கிறது. மின்சார விளக்கு, 'பான்' மேஜை, நாற்காலி, காகிதம், பென்சில் போன்ற வசதிகள் எல்லாவற்றை யும் இந்த உத்தியோகஸ்தர்களுக்குச் செய்து கொடுக்க வேண்டும். காகிதம், பென்சில் போன்றவைகளை அவர்கள் சொந்தச் செலவில் வாங்க வேண்டிய நிலைமை சில சமயங்களில் ஏற்படுகிறது. ஸ்டாம்பு மூலம் வசூல் செய்யும் தொகையை நிர்வாகத்தில் வேலை செய்யக் கூடிய ஊழியர்களுடைய வசதியை பெருக்குவதற்காகச் செலவு செய்தால் பரவாயில்லை. ஏதோ சர்க்கார் கஜானாவுக்கு எந்த முறையில் பணம் வந்து சேர்ந்தாலும் சேரட்டும் என்று இப்படி வசூலித்துக் கொண்டு போகக் கூடாது என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

கலெக்டர்களுக்கு இப்பொழுது வேலை ரொம்ப ஜாஸ்தியாகப் போய் விட்டது. அவர்கள் காரியாலத்திலே இருப்பதே இல்லை, அநேகமாக எல்லா கலெக்டர்களும், கலெக்டரை அவசரமாகப் பார்க்க வேண்டு மென்றால், அவரைக் காரியாலயத்தில் நிச்சயமாக ப்பார்க்க முடியும் என்பதே கிடையாது. அநேகமாக 27, 28 நாட்கள் வெளியிலே தான் இருக்கிறார்கள். டூர் ப்ரோகிராம் பார்த்தால் தெரியும். அவர்கள் வெளியில் போய் என்ன வேலை செய்திருக்கிறார்கள், எதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்? மந்திரி களோடு பழகிய சகவாச தோஷம் அவர்களை விடவில்லை. மந்திரிகளுடைய அரசியல் அவர்களையும் பிடித்திருக்கிறது. அவர்கள் அரசியல் பிரசங்கம் செய்கிறார்கள். இப்பொழுது டெவலப்மெண்டு வேலையையும் அவர்கள் கவனிக்கிறார்கள். அவர்களுக்கு ஜில்லா டெவலப்மெண்டு கமிஷனர் என்று வேறு பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. முன்போல் கலெக்டர் என்ற நிலை மாத்திரம் இல்லை. சர்க்காருடைய ஊழியர்கள் என்று அவர்கள் கருத வேண்டும். அதை விட்டு விட்டு அமைச்சர்கள் கொள்கைப்

படி, அவர்கள் சொல்லுகிறபடி வேலை செய்வது என்பது ரொம்ப ஆபத்து. அமைச்சர்கள் சொல்லக்கூடிய விதத்தில், அவர்கள் போகிற போக்கிலேயே காரியங்கள் செய்து கொண்டு போகும் நிலைமை மாறி, கலெக்டர்கள் சுயேச்சையாக மனச்சாட்சிப்படி நடப்பதற்கு உள்ள நிலைமை இருக்க வேண்டும். எதிர்க்கட்சியினருக்கு அனுகூலம் காட்ட வேண்டுமென்று சொல்லவில்லை. அமைச்சர்களாக இருந்தாலும் சரி, எம்.எல்.ஏ.-வாக இருந்தாலும் சரி, எந்தக் கட்சியாக இருந்தாலும் சரி, அரசியல் வாதியாக இருந்தாலும் சரி, யாருக்கும் பயப்படாத வகையில் சுயேச்சையாகப் பணி புரிய வேண்டும். அமைச்சர் கலெக்டருக்குத் தந்தி கொடுத்து இந்த காங்கிரஸ் தலைவரைப் பார்த்து ப்ரோகிராம் போட்டு அனுப்ப வேண்டு மென்று சொன்னால், உடனே கலெக்டர் எழுந்திருந்து அவர் வீட்டுக்கு ஓடுகிறார். அந்த நிலை இருக்கக்கூடாது, அப்படியிருந்தால் அவர்கள், எப்படி அவர்களுடைய மனச்சாட்சிப்படி வேலை செய்ய முடியும்? அந்த நிலை ஏற்படாமல் அமைச்சர் இதைக் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். கலெக்டர்கள் சுற்றுப் பிரயாணத்தைக் குறைத்துக் கொண்டு, நிர்வாக வேலைகளில் இன்னும் அதிகமாகக் கவனம் செலுத்த வேண்டும். ரெவின்யூ பகுதி வேலையைக் கவனிக்க ஜில்லா ரெவின்யூ ஆபீசர்கள் நியமிக்கப்பட்டு அந்த வேலை அவர்களால் கவனிக்கப்படுகிறது. மற்ற டெவலப்மெண்டு வொர்க்ஸ் கூட, அதாவது அபிவிருத்தித் திட்டங்கள் சம்பந்தமான வேலைகளை எடுத்துக்கொண்டால்கூட, கலெக்டர்கள் பேப்பர்களை துரிதமாகப் பார்த்து நடவடிக்கை எடுத்து வேலை செய்யக்கூடிய நிலைமை ஏற்படவில்லை. சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டு அவர்களும் அரை மந்திரிகளாக ஆகிவிட்டார்கள். கல்நாட்டு விழா, திறப்பு விழா, பிரசங்கங் கள், இவைகளிலே அதிகக் கவனம் செலுத்துகிறார்கள். அதிகார முறை யிலே அதிகார வரம்புக்கு உட்பட்டுச் செய்யலாம். அதை நான் ஆட்சேபிக்க வில்லை.

இந்த மான்யத்திலே ரூ. 6,50,000 "பப்ளிசிடி அண்டு பிராபகாண்டா" என்ற தலைப்பில் அமைச்சர் அவர்கள் கேட்கிறார்கள். நமது ராஜ்ய சர்க்கா ரிலே பப்ளிசிடி டிபார்ட்மெண்ட் ஒன்று இருக்கிறது. அதிலே சில காங்கிரஸ் காரர்களை வைத்திருக்கிறார்கள். அவர்கள் காங்கிரஸ் பிரசாரம் செய்கிறார் கள். காங்கிரஸ் கட்சி நலனுக்காகவே அந்த இலாகா உபயோகப்படுத்தப் படுகிறது. எது அரசாங்கத் திட்டம், எது கட்சித் திட்டம் என்று பிரிக்க முடியாத நிலையிலே கஷ்டப்படுகிறோம் என்று கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அந்தக் கஷ்டம் ஒரு புறம் இருக்கட்டும். இந்த 6 லட்சத்தை என்ன பண்ணப்போகிறார்கள் என்று கேட்கிறேன். ஜில்லாக் களிலே ஊழியர்களைத் தயார் பண்ணி எதிர்க்கட்சிகளுக்கு விரோதமாகப் பிரசாரம் பண்ணுவதற்காக இந்தப் பணத்தை வைத்துக்கொண்டு சப்சிடி கொடுக்கப்போகிறார்களா? பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன, டெவலப் மெண்ட் கவுன்சில்கள் இருக்கின்றன. எம்.எல்.ஏக்கள் இருக்கிறார்கள், அதிகாரிகள் இருக்கிறார்கள். இவர்கள் செய்யும் விளம்பரம் போதாதா? இந்த 6 லட்சம் ரூபாயை கிணறுகள் வெட்டுவதற்கோ, சாலைகள் போடு வதற்கோ, வேறு நல்ல காரியங்களுக்கோ உபயோகிக்கலாமே. ஆகவே இந்த 6 லட்சம் ரூபாயை இதிலிருந்து விலக்கி விடவேண்டும். இந்த மாதிரி புது ஸ்கீம்களைப் போட்டு ஜில்லாக்களிலே குழப்பத்தை உண்டாக்க வேண்டாம். இப்பொழுது நடைபெறுகிற பிரசாரத்தில் ஏற்பட்டுள்ள குழப்பம் போதும். இன்னும் குழப்பத்தை அதிகப்படுத்த வேண்டா மென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஜில்லா அதிகாரிகளுடைய வேலை நன்றாக நடக்க வேண்டுமென்று சொன்னால், சர்க்கார் போடுகிற விதிகளைப் பற்றிய தெளிவு அவர்களுக்கு இருக்கவேண்டும். இப்பொழுது யாருக்குமே தெளிவு இருப்பதில்லை. என்னென்ன சட்டங்கள் இயற்றப்படுகின்றன என்று படிப்பதற்குக்கூட

நேரம் இல்லை. ஜில்லா அதிகாரிகளுக்குப் பல பிரிவுகளிலிருந்து உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. ஒவ்வொரு இலாகாவிலிருந்து உத்தரவு போகிறது. டெவலப்மெண்ட் கமிஷனரிடமிருந்து உத்தரவு போகிறது. எது லேட்டஸ்ட் உத்தரவு என்று அதிகாரிகளுக்குத் தெரியவில்லை. எந்த இலாகாவிலிருந்து உத்தரவு வந்திருக்கிறது, வரக்கூடிய தபால்கள் என்ன, போகக்கூடிய தபால்கள் என்ன என்று பார்ப்பதற்கும் கூட நேரம் இல்லை. பல சட்டங்களின் கீழ் பிறப்பிக்கக்கூடிய விதிகளை சர்க்கார் சீக்கிரத்தில் தொகுத்து அனுப்புவதில்லை. பஞ்சாயத்துச் சட்டம் சம்பந்தமாக விதிகளைத் தொகுத்து அனுப்புவதற்கு இன்னும் ஏற்பாடு செய்யப்படவில்லை. பிரிவு பிரிவாக அனுப்பப்பட்டு வருகிறது. இதனால் அதிகாரிகளுக்கும் சங்கடம் ஏற்படுகிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு தினுசாக நடந்து கொண்டிருக்கிறது. போர்டு ஸ்டாண்டிங் ஆர்டர்களை இப்பொழுது இருக்கிற நிலைமைக்குத் தகுந்தவாறு எப்படி மாற்றி அமைக்கலாம் என்று பரிசீலனை செய்ய ஒரு விசேஷ குழுவை அமைக்க வேண்டுமென்ற யோசனையை நான் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். ஜில்லா நிர்வாகம் எவ்வளவு திறமையாக நடக்கிறதோ அதைப் பொறுத்து தான், அபிவிருத்திக்காக ஒதுக்கப்படுகிற பணத்தை நியாயமாகச் செலவு செய்வதற்கும், அதனால் மக்கள் முழுப் பலனை அடைவதற்கும் முடியும். ஜில்லா நிர்வாகம் அவ்வளவு திறமையாக நடப்பது இல்லை. அதிகமான லஞ்ச ஊழல்கள் இருக்கின்றன என்று சொன்னபோது, கனம் நிதி அமைச்சர் அவர்களுக்குக் கோபம் வந்தது. குறிப்பிட்டுச் சொல்ல முடியுமா என்று கேட்டார். எதை என்று குறிப்பிடுவது ?. அபூர்வமாக இங்கே ஒன்று, அங்கே ஒன்று இருந்தால் சொல்ல முடியும் ? இந்த ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் லஞ்சம் வாங்குவதைப் பற்றி நான் சொல்லவில்லை. பெர்மிட்டுகள், லைசென்சுகள் வழங்குவதிலே ஏற்படுகிற லஞ்சத்தைப் பற்றித்தான் சொல்லுகிறேன். இவற்றை யெல்லாம் பார்த்துச் செய்யவேண்டும். ஸ்பெஷல் பிராஞ்சு போலீசை அனுப்பித்து எங்கெங்கே என்ன நடக்கிறது என்று கண்டு பிடிக்க வேண்டும்.

பஞ்சாயத்து யூனியன்களுக்கு பர்னிச்சருக்காக 10 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 396 பஞ்சாயத்து யூனியன்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் 2,500 ரூபாய் தான் கிடைக்கும். அதை அதிகப்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எல்லாப் பஞ்சாயத்துக்களுக்கும், புதிதாக ஏற்படுத்தப்பட்ட பஞ்சாயத்துக்களுக்கும், உடனடியாக தேவைக்கு வேண்டிய பணத்தை ஒதுக்கவேண்டும். பஞ்சாயத்துக்களுக்கு வருமானம் வரக்கூடியது எண்டெர்டெயின்மெண்ட் டாக்ஸ். சினிமாக் கொட்டகைகளிலே வசூலுக்காக இரண்டு கணக்குகள் வைக்கப்பட்டிருக்கின்றன. டிக்கட்டுகள் விற்பதற்கு ஒரு கணக்கு. அதே டிக்கட்டுகளை உள்ளே போகும் இடத்தில் கொடுக்காமல் மறுபடியும் கொண்டு வந்து விற்கிறார்கள். இரண்டு விதமான டிக்கட்டுகள் விற்கப்படுகின்றன. பஞ்சாயத்து வருமானம் குறைகிறது. இப்பொழுது சினிமாக் கொட்டகைகள் அதிகரித்துக் கொண்டு வருகின்றன. ஜனங்களுடைய பணம் தான். கொட்டகைக்காரர்களுக்குப் பாதியும் அதிகாரிகளுக்குக் கொஞ்சமும் என்கின்ற முறையிலே இந்த வரிப் பணம் பங்கு போட்டுக் கொள்ளப்படுகிறது. இதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். பஞ்சாயத்துக்கள் திறமையாக வேலை செய்ய வேண்டுமானால், கலெக்டருக்கு அதிகாரத்தை மாற்றிக் கொடுத்து விட்டால் மட்டும் போதாது. இந்தச் சபையிலேயே பல தடவை சொல்லியிருக்கிறேன். பஞ்சாயத்துகளுக்குக் கொடுக்க வேண்டிய புத்தகங்கள், பாரம்கள் இன்னும் போய்ச் சேரவில்லை என்ற புகார் வருகிறது. இந்த பஞ்சாயத்துக்கள் திறமையாக இயங்குவதற்கு இந்த விதிகளை எல்லாம் தொகுத்து, அவைகளுக்குத் தேவையான புத்தகங்களையும், மற்ற வெளியீடுகளையும் அனுப்பிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். ரெவின்யு இலாகா அதிகாரிகள் எம்.எல்.ஏக்கள் அனுப்புகிற கடிதத்திற்காவது பதிலளிக்க வேண்டும். கலெக்டர்களுக்கும், மற்ற அதிகாரிகளுக்கும் எழுதின கடிதங்களுக்குப் பதிலே வருவது கிடையாது. என்ன நடவடிக்கை எடுத்தார்கள் என்று தெரியவில்லை. கால தாமதம் ஆனாலும் ஒருவாறு புரிந்து கொள்ள முடியும். செக்ரடேரியட்டுக்குக் கடிதம் எழுதினாலாவது, 6 மாதங்களுக்குப் பிறகு இல்லை என்ற பதில் வருகிறது. முதலிலே அக்நாலெட்ஜ்மெண்ட் வருகிறது. ஆனால் கலெக்டரிடமிருந்து அக்நாலெட்ஜ்மெண்டு கூட கிடையாது. மேலே எடுத்த நடவடிக்கைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள சந்தர்ப்பம் கிடையாது. சாதாரண ஜனங்கள் கொடுக்கக்கூடிய மனுக்கள் எல்லாம் வேஸ்ட் பேப்பர் பாஸ்கெட்டிலே போகக் கூடிய நிலையில் இருக்கின்றன. அப்படியே நடவடிக்கைகள் எடுத்தாலும் எல்.டி. போட்டு அனுப்பி விடுகிறார்கள். பைல் தீர்ந்தது என்கிற நிலையிலே வேலை நடந்து கொண்டிருக்கிறது. எம்.எல்.ஏக்கள் டெவலப்மெண்ட் கவுன்சில் மெம்பர்கள், பஞ்சாயத்து சேர்மன் ஆகியவர்கள் எழுதுகிற கடிதங்களுக்கு உடனடியாகப் பதில் அளிக்க வேண்டும். நடவடிக்கையும் எடுக்க வேண்டும்.

அடுத்தபடியாக நிலம் மாற்றிக் கொடுப்பதிலே தாமதம் ஏற்படுகிறது. சர்க்கார் கடனுக்கு வட்டி கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பார்க், மார்க்கெட் இவைகளுக்கு நிலம் கொடுக்கும்போது, ரெவின்யு டிபார்ட்மெண்டிலே காலதாமதம் ஏற்படுகிறது. நிலத்திற்குள் பிரவேசிக்க முடிவதில்லை. துரிதகமாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று அதிகாரிகளுக்கு உத்தரவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தின் மீது கொண்டுவரப்பட்ட வெட்டுப் பிரேரணையே நான் ஆதரிக்கிறேன். இந்த மான்யத்தின் மீது அநேக அங்கத்தினர்கள் பேசினார்கள். முக்கியமாக, ஆளும் கட்சியிலுள்ள அங்கத்தினர்கள் இந்த இலாகாவிலே மாமூலாக இருந்து வரும் கஷ்டங்களை எல்லாம் சொன்னார்கள். குறிப்பாக, டிலேயைப் பற்றிச் அடிக்கடி சொல்லியிருக்கிறோம். கனம் அமைச்சர் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும்பொழுது, கலெக்டர், ஆர்.டி.ஓ., தாசில்தார்களுடன் போகிறார்கள். இவர்களை வைத்துக் கொண்டு ஒவ்வொரு முகாமிலும், எவ்வளவு பேப்பர்கள் வந்தன, எவ்வளவு பைசல் செய்தார்கள், எவ்வளவு தாமதம் ஏற்படுகிறது என்பதை யெல்லாம் பரிசீலனை செய்ய வேண்டும். இதை அடிக்கடி சொல்லுவதில் பிரயோசனம் இல்லை. உடனடியாக தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். ரெவின்யு போர்டு மெம்பர்களும் சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள். அவர்களும் பேப்பர்கள் ஏன் டிலே
1 p.m. ஆகிறது, தாமதத்திற்குக் காரணம் என்ன என்று கீழேயுள்ள அதிகாரிகளை எச்சரிக்கை செய்ய வேண்டும். உதாரணமாக சினிமா லைசென்ஸ், ரைஸ் மில் லைசென்ஸ் இவைகளை எடுத்துக் கொண்டால், இரண்டு வருஷ காலமாக பேப்பர்கள் குவிந்து கிடக்கின்றன. மக்கள் கஷ்டப்படுகிறார்கள். அதைத் தவிர்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். எங்கும் ரிஜிஸ்டர்கள் சரிவர வைத்துக் கொள்வதில்லை ; ரசீதுகள் சரிவரக் கொடுக்கப்படுவதில்லை அப்ரோப்ரியேஷன் அக்கௌண்டிலே 1958–59-ம் வருஷத்திலே 83-ம் பக்கத்தில் 1,65,000, 1,31,000 ரூபாய்களுக்கு ரசீதும் கொடுக்கப்படவில்லை, தக்க நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை என்று இருக்கிறது. இம்மாதிரி ஊழல்களைத் தவிர்க்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். லஞ்ச ஊழல்கள் என்று சொல்லும்போது, சரிவர இன்னின்ன என்று சொன்னால் தானே என்று கனம் நிதி அமைச்சர் கூடச் சொன்னார்கள். சாதாரணமாக இருந்தது வெள்ளையர் இருந்த காலத்தில். இன்றைக்கு சுதந்திரம் அடைந்த பிறகு அது அதிகமாகிக் கொண்டே போகிறது

இப்படி எல்லா அதிகாரிகளும் வாங்குகிறார்கள் என்று சொல்லவில்லை. சில அதிகாரிகள் வாங்குகிறார்கள். அவர்களை ஸி.ஐ.டி.—யை வைத்து கண்டு பிடித்து தக்க நடவடிக்கை எடுத்து இம்மாதிரி ஊழல்களைத் தவிர்க்க வேண்டும். இதைப் பற்றி அமைச்சர் எங்களைத் திட்டவட்டமாகச் சொன்னால் தான் என்று சொல்வது பிரயோஜனம் இல்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

இந்த ரெவின்யூ டிபார்ட்மெண்டில் பழைய மாதிரியே தான் எல்லாம் நடத்துகிறார்கள். அங்கிருந்து வரும் கடிதங்கள் பெரிய கட்டளையாக வருகிறது. அநேகம் பேர்கள் வரி செலுத்திய பிறகு கூட நோட்டீஸ் வருகிறது. அதில், "Show cause why you should not be prosecuted?", "So and so is directed to appear before me" like this, என்று இம்மாதிரி பழைய ரீதியிலே தான் வருகிறது. இருக்கலாம், நோட்டீஸ் கொடுக்க வேண்டியது அவசியம், ஆனால் அதை கொஞ்சம் சாந்த மாக போடக் கூடாதா ? நாகரீகம் முற்றி வரும் இந்தக் காலத்தில் பணிவாக இருந்தால் நலமாக இருக்கும். ஆகவே, இந்தப் பாரங்களை மாற்றி அமைக்க முடியுமா என்று பார்க்க வேண்டும். இம்மாதிரி வந்ததாக அமைச்சர் கூட சொல்லியிருக்கிறார்கள். அந்தப் பழைய முறை மாறவேண்டும்.

ரெவின்யூ டிபார்ட்மெண்டிலே, மற்ற டிபார்ட்மெண்டிலே கூட, அந்த ஆபீசர்கள் ஒரே இடத்தில் இருக்கும்படி செய்ய வேண்டும். ஜில்லா ஆபீசர்கள், சப்-டிவிஷனல் ஆபீசர்கள் இவர்கள் கூட, தங்கள், தங்கள் இடத்திலேயே வசிக்கக் கூடிய ஏற்பாட்டைச் செய்ய வேண்டும்.

ரெஜிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்டை எடுத்துக் கொண்டால், அந்த அதிகாரி கள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு பிரமோஷனே கிடையாது. அவர்களை வேறு டிபார்ட்மெண்டுகளில் எடுத்துக்கொள்வதும் கிடையாது. அந்த இலாகாவில் இருந்து விட்டால், வேறு டிபார்ட்மெண்டார் எந்த இலாகாவிற்கும் லாயக்கில்லை என்று கருதுகிறார்களா என்று தெரிய வில்லை. இந்த ரெஜிஸ்ட்ரேஷன் செய்வதை ஒரு "மொபைல் ரெஜிஸ்ட் ரேஷனாக" வைத்து வாரத்திற்கு ஒரு முறை இன்னின்ன இடம் என்று பிரித்துச் செய்தால் உள்புறங்களில் இருக்கும் போக்குவரத்து வசதியே இல்லாத இடங்களுக்கும் சௌகர்யமாக இருக்கும். அதை பிர்க்கா வாரியாகக் கூடச் செய்யலாம். அப்படிச் செய்தால் மக்களுக்கும் திருப்தியாக இருக்கும். முன்னே ஒரு நடுத்தர உத்தியோகஸ்தர் இருந்தார், இன்ஸ்பெக்டர் ஆப் ரெஜிஸ்ட்ரேஷனுக்கு உதவியாக. அது இப்பொழுது இல்லை. அந்த போஸ்டை மறுபடியும் போட்டால் சுற்றுப் பிராயணம் செய்து சமாசாரங்களை அறியவும், அட்மினிஸ்ட்ரேஷனை டோன் அப் செய்ய அது உதவியாக இருக்கும். அந்த டிபார்ட்மெண்டிலே பீஸ் வாங்குவது ஒரு கம்பர்ஸம் ப்ரொஸிஜராக (Cumbursam procedure) இருக்கிறது. இந்த விதியைத் திருத்தி "ரூ. 100 அண்ட் ப்ராக்ஷன் தேராப்," என்று போட்டால் தொந்தரவுகள் தொல்லைகள் இருக்காது. ரெஜிஸ்ட்ரேஷன் ஆபீசுக்கெல்லாம் இடவசதி சரியாக இல்லை. அங்கெல்லாம் லேட்டுகள் கூடக் கிடையாது. அங்கே போகும் பொது மக்களுக்கும் உட்காரக் கூட இடம் கிடையாது. இரவில் 6 அல்லது 7 மணி வரை அவர்களும் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. நான் கேள்விப் பட்டேன். வட ஆற்காடு ஒரு பிர்க்காவில் அநேகம் பேர் தங்கள் சொந்த லாந்தர்களைப் கொண்டுவந்து கொடுத்தார்களாம். அப்படி இருந்தால் அது வெட்கப்பட வேண்டிய விஷயம். (மணியடிக்கப்பட்டது) ஒவ்வொரு பிராந்தியங்களில் போதுமான வசதிகள் இல்லை. அதையும் கவனித்து, முக்கியமாக நாங்கள் சொல்லும் குறைகளைக் கவனித்து, யோசனைகளை எடுத்துக் கொண்டு நல்லவிதமாகப் பணியாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடிக்கிறேன்.

THE HON. SRI V. RAMAIAH : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான்கு வருஷங்களுக்குப் பிறகு இந்த ஆண்டில் இந்த ரெஜிஸ்ட்ரேஷன் இலாகா மான்யத்தை விவாதிக்க செய்ய அரை மணி நேரம் ஒதுக்கிக் கொடுத்தார்கள். அந்த அரை மணி நேரம் கூடக் கிடைக்காமல் போய் விட்டது. இருந்தாலும் இதிலே மூன்று, நான்கு அங்கத்தினர்கள் கலந்து கொண்டு இருக்கிறார்கள். குறிப்பாக, கனம் எதிர்க் கட்சித் தலைவர், தலைவர் என்றே சொல்லுகிறேன். கனம் ராமசாமி முதலியார் அவர்கள் கொஞ்சம் விரிவாகவே இந்த இலாகாவைக் குறித்துப் பேசினார்கள். இந்த இலாகாவைப் பொறுத்த வரையில் அங்கத்தினர்கள் மத்தியில், பொது மக்கள் மத்தியில் இருக்கக்கூடிய நினைப்பு என்னவென்றால், சாதாரண கிராம வாசிகளுக்கு அதிகம் தொண்டு செய்யயும் இலாகா, தங்களுடைய தேவைகளை இன்னும் கிராமவாசிகளுக்கு நல்ல முறையிலே செய்து கொடுக்க வேண்டும். இந்த இலாகாவிற்குக் கிளை ஸ்தாபனங்கள் அதிகமாக வேண்டும் என்ற கருத்து இருக்கிறது. அதே நேரத்திலே இந்த இலாகாவை நன்றாகப் புரிந்து கொண்ட ஸ்ரீ கே. ஆர். விஸ்வநாதன், அவர்களே சப்-ரிஜிஸ்ட்ராராக இருந்தவர்கள், குறிப்பிட்டார்கள், சமீப காலம் வரை அரசாங்கம் அதிகமாக அபிவிருத்தி வேலைகளுக்கு அக்கறை காட்டிய காரணத்தினால், இந்த இலாகாவினுடைய விஸ்தரிப்பைப் பற்றி அதிகம் கவனம் செலுத்தவில்லை என்று நிலையைச் சொன்னார்கள். ஆனால், கடந்த இரண்டு, மூன்று வருஷ காலமாக இந்த இலாகாவின் அமைப்பையும், இந்த இலாகா மீது மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கையையும் நன்றாக நான் புரிந்து கொண்ட காரணத்தினால், சமீபத்தில் மற்ற இலாகா அதிகாரிகளை அழைத்து மக்கள் தேவைகளை, விருப்பங்களை வலியுறுத்திச் சொன்னதினால், இந்த வருஷத்திலிருந்து, இந்த இலாகாவும் அபிவிருத்தி வேலைகளில் சம்பந்தப்பட்ட இலாக்காக்களில் ஒன்று என்று ஒப்புக் கொண்டிருக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது; வருகிற நிதி ஆண்டிலிருந்து இது எப்படி வேலை செய்யும். வரும் வருஷத்தில் அது புதிய சப்-ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்கள் ஆரம்பம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், அந்தப் பட்டியலில் பார்க்கும்போது, கனம் விஸ்வநாதம் சொன்ன ஊர் அதில் இல்லை. ஆனால் இந்தப் பொதுக் கருத்தை ஏற்றுக்கொண்டு, இதற்குப் பிறகு துரிதமாக வரும் வருஷங்களிலே, மக்கள் விருப்பத்திற்கு இணங்க சப்-ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்கள் துவங்கப்படும். இன்றைக்கு ஆறு ஆபீஸ்கள் புதிதாக அமைக்கப்படும்; அவை, (1) மோகனூர், சேலம் ஜில்லா, (2) தாம்பரம், செங்கல்பட்டு ஜில்லா, (3) காரியாப்பட்டி, ராமநாதபுரம் ஜில்லா, (4) பால்கோல், கன்யாகுமரி ஜில்லா, (5) முதுக்கூர், தஞ்சாவூர் ஜில்லா, (6) காயல்பாடி, ராமநாதபுரம் ஜில்லா, ஆக, ராமநாதபுரத்திற்கு இரண்டு ஆபீஸ்கள். இந்த ஆறு இடங்களில் புது சப்-ரெஜிஸ்ட்ரார்கள் ஆபீஸ்கள் திறக்கப் போகிறார்கள். இன்னும் இந்த இலாகாவில் திரு. விஸ்வநாதனுக்குத் தெரியும், கனம் எதிர்க்கட்சித் தலைவர் திரு. ராமசாமி முதலியார் அவர்களும் சொன்னார்கள். இந்த இலாகாவில் யாரேனும் புகுந்து கொண்டால், ஒரு நல்ல காலமே வராதோ என்று சந்தேகம் எல்லோருக்கும். அப்படி இரண்டு, மூன்று வருஷங்களாக சப்-ரெஜிஸ்ட்ரார்களும் திரும்பத் திரும்பச் சொல்லி, அவர்கள் கஷ்டங்களைப் பரிசீலனை செய்யும் போது, அரசாங்கம் ஒரு பே கமிஷனை நியமித்தார்கள். ஆகவே இந்த இலாகா சம்பந்தப்பட்ட பிரச்னையும் அவர்களிடம் விடப்பட்டது; நான் தனிப்பட்ட முறையில் எதுவும் செய்ய வேண்டிய அவசியம் இருக்கவில்லை. பே கமிஷன் முடிவுக்குக் காத்திருந்தோம். அந்த பே கமிஷனும் நல்ல முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இம்மாதிரி 1951-ம் வருஷத்திலேயே கொடுத்திருந்தால், கனம் விஸ்வநாதம் அரசியலிலேயே வந்திருக்க மாட்டார்கள். அவர்களைப் பொறுத்த வரையில் இந்த இலாகாவில் புகுந்து கொண்டால் நல்ல காலம் கிட்டாது என்று சப்-ரெஜிஸ்ட்ரார் பதவியை விட்டிருக்கலாம். ஆனால், தனிப்பட்ட முறையில் நமக்கு அது ஒரு பெரிய லாபம் என்றே நான் கருதுகிறேன். சட்ட சபை அங்கத்தினர்

18th March 1961] [Sri V. Ramaiah]

களுள் மிகவும் பின் தங்கிய பகுதியினருக்கு, பின் தங்கிய மக்களின் பிரச்னைகளைத் தைரியமாக எடுத்துக் கூறும் ஒரு அங்கத்தினரைப் பார்க்க வேண்டுமானால், அது திரு. விஸ்வநாதன் அவர்கள். ஆகவே, அன்று சம்பளம் குறைந்து இருந்ததே, விஸ்வநாதனைப் பொருத்து வரை நல்லதாகப் போய்விட்டது என்று கருதுகிறேன். அவர்கள் பட்ட கஷ்டத்தால், பே கமிஷன் உயர்வுகளும் போதாது என்று சொல்லுகிறார்கள். இப்பொழுது இருக்கக்கூடிய சப்-ரிஜிஸ்ட்ரார்கள் நிலையில் உயர்வு காண மூன்றில் ஒரு பங்கு சப் ரெஜிஸ்ட்ரார்கள் "பர்ஸ்ட் கிரேட்" ஆக ஆக்க வேண்டும் என்ற் ஒரு முடிவை சொல்லுகிறார்கள்.

அந்த முடிவையும் அரசாங்கத்தார் ஒப்புக் கொண்டு வரக்கூடிய நிதி வருஷத்தில் இருந்து 34 செகண்டு க்ரேட் சப் ரிஜிஸ்ட்ரார் பதவிகளை பர்ஸ்ட் க்ரேட் சப்-ரிஜிஸ்ட்ரார் பதவிக்கு உயர்த்தியிருக்கிறது. அதனால் அந்த அதிகாரிகள் வருஷா வருஷம் ஒன்று கூடி கோரிக்கை விடுவது போல இந்த வருஷம் விடுவதற்கில்லை. நிச்சயமாக கனம் அங்கத்தினர்களுக்குச் சொல்லிக்கொள்வேன். இது ஒரு புறக்கணிக்கப்பட்ட இலாகா என்று இது வரையில் சொல்லப்பட்டு வந்தது போல இனி இருக்காது.

இது வரையில் இரண்டு கஷ்டங்களை நிவர்த்தி செய்திருக்கிறோம். பே கமிஷன் ரிப்போர்ட் வந்த பிறகு ஓரளவு அந்த இலாகாவிலும் நான்கு லோயர் டிவிஷன் க்ளார்க்குக்கு ஒரு அப்பர் டிவிஷன் கிளார்க் கொடுப்பது என்று தீர்மானித்து கிட்டத்தட்ட 137 லோயர் டிவிஷன் க்ளார்க் பதவிகள் அப்பர் டிவிஷன் க்ளார்க் பதவிகளாக மாற்றப்பட்டிருக்கிறது. கனம் வி. கே. ஆர். குறிப்பிட்டது போல இனிமேல் அந்த இலாகா புறக்கணிக்கப்பட்ட இலாகாவாக இருக்காது.

அதோடு அநேக அபிவிருத்தி வேலைகள் நடந்து கொண்டிருக்கும்போது அதற்கேற்ற முறையில் இந்த இலாகாவும் நல்ல முறையில் செயல்பட்டாக வேண்டும். அதுவும் புல் பிணன்ஷியல் ஸ்கீம் அமுலுக்கு வந்துள்ள இடங்களில் ரிஜிஸ்ட்ரேஷன் ஆபீஸ் ஒழுங்காக செயல்பட்டால் தான் விவசாயிகளுக்கும், மற்றவர்களுக்கும் சௌகர்யமாக இருக்கும் என்பதை ஒப்புக் கொள்கிறேன்.

திரு. சுப்பையா கூட ஒரு பெரிய கருத்தைச் சொன்னார்கள். தலை நகரங்களில் இருக்கும் காரியாலயங்களில் சிலவற்றைக் கட்டிடங்கள் அதிகமாக இருக்கிற வேறு ஊர்களுக்கு மாற்றலாமே என்றார். குறிப்பாக ரிஜிஸ்ட்ரேஷன் இலாகாவை இங்கிருந்து வேறு ஊருக்கு மாற்றலாம் என்றார். இந்தக் கருத்து நீண்ட காலமாக இருக்கக்கூடியதுதான். இங்கே கட்டிடக் கஷ்டம் இருப்பதனால் எங்கே வசதியாகக் கிடைக்கிறதோ அங்கே மாற்றலாம். இதைக்கூட அதிகாரிகள் நன்றாகப் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். (ஒரு அங்கத்தினர் புதுக்கோட்டைக்கா ?) புதுக்கோட்டைக்கோ, காரைக்குடிக்கோ போகவேண்டுமென்று நான் அபிப்பிராயப்படவில்லை. எனக்காக என்று ஓரிடத்திற்குப் போக வேண்டாம். செட்டி நாட்டை எடுத்துக் கொண்டால் உண்மையிலேயே பெரிய பெரிய கட்டிடங்கள் எல்லாம் காலியாகக் கிடக்கின்றன. அவற்றை இடிக்கிறார்கள். இது பெரிய தேசீய நஷ்டம். இந்த மாதிரியான கட்டிடங்கள் வசதியாக உள்ள இடங்களுக்கு மாற்றலாம்.

இப்படி அந்த இலாகாவை ஒழுங்குபடுத்துவதற்கு, எல்லா விதமான நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன. இந்த இலாகா சம்பந்தமான விஷயங்களைப்பற்றி விவாதிப்பதற்குக் கொஞ்சமாவது நேரம் கிடைத்தது பற்றி எனக்குச் சந்தோஷம். இனி அடுத்த ஆண்டில் இருந்து 2 மணியாவது இதற்கென்றே ஒதுக்கி விவாதிப்பதற்கு வழி செய்தால்

மிகவும் நன்றாக இருக்கும். இதனால் அவ்விலாகாவில் உள்ளவர்களுக்குக் கூட ஊக்கம் ஏற்படும். ஆகவே இவ் விலாகாவுக்காகக் கோரப்பட்டிருக்கிற மானியத்திற்கு வெட்டுப் பிரேரணை வேண்டும். திரு. கோதண்டராமன் அவர்கள் தம்முடைய வெட்டுப் பிரேரணையைக் கூட வற்புறுத்தக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் பதில் அளிக்க 45 நிமிஷம் வேண்டுமென்று கேட்டேன். அப்புறம் அரை மணி சொன்னார்கள். இப்போது அதுவும் குறைந்து இருபது நிமிஷமாகிவிட்டது. குறிப்பிட்ட நேரத்திற்குள் எல்லாவற்றையும் சொல்ல முடியாது. இருந்தாலும் சொல்லிக்கொண்டே போகிறேன். எங்கே நிறுத்தச் சொன்னாலும் நிறுத்துவதற்குத் தயார்.

DEPUTY SPEAKER : If necessary we can sit for some more time.

TH HON. SRI M. A. MANICKAVELU : இந்த மானியத்தின் மீது பல விஷயங்கள் பேசப்பட்டன. எல்லா விஷயங்களுக்கும் பதில் சொல்ல இந்தக் காலத்திற்குள் முடியாது. பொதுவான விஷயங்களை விஸ்தாரமாகச் சொல்லிவிட்டு அப்புறம் ஒவ்வொரு அங்கத்தினரும் என்ன என்ன சொன்னார்கள் என்று சொல்லுகிறேன்.

முதலில் நிலம் ஜாரி செய்கிற விஷயமாக அநேகம் பேர் பேசினார்கள். அதைப்பற்றி கொஞ்சம் விளக்கமாகச் சொல்ல வேண்டியது அவசியமாக இருக்கிறது. நிலம் கொடுக்கிறது, 1952-க்கு முன்னே ஒரு விதியிருந்தது. முதலில் தியாகிகளுக்கு நிலம் கொடுக்க வேண்டுமென்று இருந்தது. அதை அப்புறம் மாற்றி நிலம் இல்லாத ஏழைகளுக்குக் கொடுப்பது என்று தீர்மானிக்கப்பட்டது. நிலம் இல்லாத ஏழைகள் என்கிறபோது தியாகிகள், ஹரிஜனங்கள், எக்ஸ் ஸர்விஸ்மென் எல்லோரும் வந்து விடுகிறார்கள் என்ற அடிப்படையில் அவர்களுக்குக் கொடுக்கிறது. புறம்போக்கு என்றால் அதிலே மேய்ச்சல் புறம்போக்கு, டாங்க் பெட், எரி பெட், கிராம நத்தம் எல்லாம் வருகிறது. அதை வால்யுபில் நான் வால்யுபில் என்று இரண்டாகப் பிரித்து நான் வால்யுபில் எல்லோருக்கும் கொடுக்கப்படுகிறது. வால்யுபில் என்கிறபோது கொஞ்சம் பணம் கொடுக்கிறவர்களுக்கு அல்லது ஏலத்தில் விடப்படுகிறது. வால்யுபில் என்பது நீர்ப்பாசன வசதி உள்ள நிலம். நான் வால்யுபில் என்பது பாசன வசதி அற்றது. இந்த நிலம்கூட ஒருத்தருக்கு 5 எக்கரா வீதம் கொடுக்கப்படுகிறது.

என்கிட்டே இருக்கக்கூடிய புள்ளிவிவரப்படி 1949-ம் வருஷம் ஜூன் மாதம் 11-ம் தேதியிலே ஆறு லட்சத்து முப்பத்தேழாயிரத்து நூறு எக்கரா புறம்போக்கு இருந்ததாக இருக்கிறது. இதில் இரண்டு லட்சத்து பன்னிரண்டாயிரத்து தொள்ளாயிரத்து அறுபத்தாறு எக்கரா 1958-ம் வருஷம் டிசம்பர் மாதம் 31-தேதி வரையில் வழங்கப்பட்டது.

1959-ம் வருஷத்தில் மொத்தம் கொடுக்கப்பட்ட நிலம் 34,000. அதில் ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்பட்டது 9,255 எக்கர். ஆகவே, ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்படவில்லை என்று கூறுவதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை. 1960-ம் வருஷத்தில் 41,062 கொடுக்கப்பட்டது. ஹரிஜனங்களுக்கு 10,130 எக்கர் கொடுக்கப்பட்டது. மிச்சம் மற்றவர்களுக்குக் கொடுக்கப்பட்டது என்று அர்த்தம். இரண்டு லட்சத்து எண்பத்தெட்டாயிரத்து எழுபத்தெட்டு எக்கர் 1960-ம் வருஷம் டிசம்பர் மாதம் 31-ம் தேதி வரையில் வழங்கப்பட்டது. பிற்பாடு 3,790 எக்கர் ஜனவரி 1961-க்கு உள்ளாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மொத்தம், 291,872 எக்கராகிறது. பின், ஏன் இவ்வளவு காலதாமதமாகிறது என்று கேட்கலாம். மனு போடுகிறார்கள், அதற்கு எதிர்மனு போடுகிறார்கள், ஆக எல்லாவற்றையும் பரிசீலிக்க

வேண்டியிருக்கிறது. தித்திப்பை அதிகமாகச் சாப்பிடக் கூடாது என்று சொன்னாலும் குழந்தைகள் அதைத்தான் அதிகமாக வேண்டும் என்பது போல் ஏரி புறம்போக்கு, டாங்க் பெட்ஸ் இவைகளைத்தான் எல்லோரும் கேட்கிறார்கள். டாங்க் பெட்ஸ் நிலம், மேய்க்கால் நிலம் இவைகளைக் கொடுக்க முடியாது என்றால், அதன் மேல் அப்பீல், அப்பீல். அது, இங்கு வந்து முடிகிறது. அதற்குப் பின்பும் ரெவ்யூ, ரெவ்யூ, ரெவ்யூ என்று மூன்று நான்கு ரெவ்யூ ஆகிறது. ஆகவே, இப்படி அடிக்கடி மனு போடுவதால், இனி இப்படி மனுப் போட்டால் கவனிக்கப் படமாட்டாது என்று கூட உத்தரவு போட வேண்டியிருக்கிறது. ஆகவே, தாமதம், தாமதம் என்று சொன்னால் இதனால் தான் தாமதம் ஏற்படுகிறது. பின்னர், சிவாஜிமா செய்து வந்தவர்களுக்கு ஏன் கொடுக்கவில்லை என்று கேட்கப்பட்டது. ஒரு அம்மையார் சொன்னார்கள், இந்த நிலத்தை அங்கு தூக்குகிறார்கள், அந்த நிலத்தை இங்கு தூக்குகிறார்கள் என்று, நிலத்தை யாரும் தூக்க முடியாது. சிவாஜிமா செய்கிற ஆசாமியிடம் ஐந்து ஏக்கர்களுக்கு மேல் இருக்கிற தென்றால் அவருக்குக் கொடுக்க முடியாது. சிவாஜிமா செய்து கொண்டிருப்பார்கள், அவர்களுக்குக் கொடுக்க வேண்டியது நியாயம் தான். ஆனால் அவர்கள் ஐந்து ஏக்கர்களுக்கு மேல் என்கிரோச் செய்திருப்பார்கள், ஆக ஐந்து ஏக்கர்களுக்கு மேல் பத்து ஏக்கர்களுக்கு மேல் இருந்தால் எப்படிக் கொடுக்க முடியும், கொடுக்க முடியாது. எல்லாவற்றையும் உடனே கொடுப்பதுதானே, ஏன் இவ்வளவு காலதாமதம் என்றார்கள். அநேக ஜில்லாக்களில் இதற்கு தனி ஸ்டாப் போட்டிருக்கிறோம். நார்த் ஆற்காடு, ஸவுத் ஆற்காடு, கோயம்புத்தூர் ஜில்லாக்களில். இப்பொழுதுதான் டெம்போ வந்திருக்கிறது. 1959–60 ஃபிகரைப் பார்த்தால் வேலை ஜரூராகத்தான் நடக்கிறது. அப்போதைக்கப்போது தாக்கீதுகள் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். இப்பொழுது புதிதாக ஒரு உத்தரவு இடப்பட்டிருக்கிறது. அதாவது, 15 நாட்களுக்கு ஒரு முறை ரிப்போர்ட் அனுப்ப வேண்டுமென்று, இதற்குள் எவ்வளவு ஜாரி செய்தீர்கள் என்று. அடிக்கடி இப்படிக் கேட்கிறார்களே என்று துரிதமாக வேலை செய்கிறார்கள். ஆக, பல காரியங்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. அதுவும் தனி ஆள் ஒன்று செய்தால் அது வேறு விஷயம். ஆனால் அரசாங்கம் ஒரு காரியத்தைச் செய்யும்போது, சட்டத்திற்கு, ரூல்ஸ்-ஐ ஒட்டி செய்ய வேண்டியிருக்கிறது. திரு. அண்ணாமலை அவர்கள் சொன்னார்கள், ஜமீந்தார், ஜாகீர்தார் காலங்களில் நடந்தது பற்றி சொன்னார்கள். அதற்கு திரு. ஸ்ரீனிவாஸ அய்யர் அவர்களும், திரு. சுவாமிக்கண்ணு படையாச்சி அவர்களும் பதில் சொல்லி விட்டார்கள். எதுவாயிலும், டாங்க் பெட்ஸிலும் விவசாயம் செய்வதால், ஏற்கனவேயுள்ள ஆயக்கட்டுதாரர்களை அது பாதிக்கிறதென்று. எதவாயில் விவசாயம் செய்வதினால் மண் லூஸாகி விடுகிறது. அதனால் ஏரி தூர்ந்து விடுகிறது. ஏரி எதிர்வாய்களில் பயிர் செய்கிறவர்கள், ஏரியில் கூடுதல் தண்ணீர் சாகுபடி செய்ய முடியாதே என்று அதில் அதிகப்படி தண்ணீர் வர முடியாதபடி, அதைத் திருப்பி விடுகிறார்கள், அல்லது வெட்டி விடுகிறார்கள். ஆகவே, ஏரி எதிர்வாய்களில் சாகுபடி செய்ய அனுமதிப்பது சரியல்ல. ஏழைகள் நீண்ட நாட்களாக விவசாயம் செய்து வருகிறார்கள். அவர்களை வெளியேறச் சொல்வது சரியா, அது அநியாயம் அல்லவா அது இது என்றெல்லாம் சொல்கிறார்கள். மூன்று வாரத்திற்கு மேல் நீர் பிடிப்பு இருந்தால் அதிகமில்லை, அதற்குள் இருந்தால் கொடுக்கலாம் என்றெல்லாம் பல விதத்தில் விதிகள் தளர்த்தப்பட்டு கூடுமான வரையில் மக்களுக்கு என்னென்ன சௌகரியங்கள் செய்து கொடுக்க முடியுமோ அவை எல்லாம் செய்து கொடுக்கப்பட்டு வருகிறது. ஜமீந்தார் காலத்தில், ஜாகீர்தார் காலத்தில் என்னென்னவோ எப்படி எப்படியோ எல்லாம் காரியங்கள் நடந்தன. அந்தக் காலத்தில் எல்லாம் நடந்ததே, ஜனநாயகத்தில் அப்படி நடக்கவில்லையே என்று சொன்னால் அது சரியான வாதம் அல்ல. ஒரு காரியம் செய்யும்போது, அது மற்றவர்களைப் பாதிக்குமா என்று பார்க்க

வேண்டும். ஏரி எதிர்வாய்களில் அனுமதி கொடுப்பதில்லை. ஏற்கனவே யுள்ள ஆயக்கட்டுதாரர்களுக்குப் பாதகம் இல்லாத முறையில், அவர்களை பாதிக்காத முறையில் நாம் நிலம் கொடுக்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் இருக்கிறது. பின்னர், இங்கு நிலச் சீர்திருத்தம் பற்றி, சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம் பற்றியெல்லாம் சொல்லப்பட்டது. எல்லாவற்றையும் நனகு ஆராய்ந்து பார்த்து நல்ல வகையில் செய்ய வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் கொள்கை. டெல்லி, மற்றயிடங்களிலிருந்து வருகிற தபால்களைப் பார்த்தால், நிலச் சீர்திருத்த விஷயத்தில் மற்ற மாநிலங்களை விட சென்னை மாநிலம்தான் சரியான விதத்தில் அமைத்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. மற்றவர்கள் சொல்கிறார்கள்: அதை எடுத்துக் கொண்டால் எடுத்துக் கொள்ளலாம், இல்லாவிட்டால் வேண்டாம். மற்ற வர்கள் சொல்வதை இங்கு சொல்கிறேன. ஆக, எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து பார்த்துச் செய்கிறோம். இந்த மசோதா சென்ற ஏப்ரலில் சமர்ப்பிக்கப்பட்டது. அதை ஒரு ஜாயின்ட் செலக்ட் கமிட்டிக்கு அனுப்பி னோம். 1960-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 28-ம் தேதியில் பொறுக்குக் கமிட்டி கூடிற்று மதுரையில்; மே மாதம் ஊட்டியில் கூடிற்று. பின் எவிடன்ஸ் எடுக்க, என்னென்ன கஷ்ட நஷ்டங்கள் இருக்கின்றன என்று பார்க்க எவிடன்ஸ் எடுக்கப்பட்டது. 1960-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 22-ம் தேதியிலிருந்து 1960-ம் வருஷம் டிசம்பர் மாதம் 17-ம் தேதி வரை இந்த விவகாரங்கள் பற்றி கேட்கப்பட்டது. ஆக, 206 பேர்கள் சாட்சியம் சொன்னார்கள். ஏன் இவ்வளவு தாமதமாயிற்று என்று கேட்கும் அங்கத்தினர் அவர்கள்கூட இந்தக் கமிட்டியில் இருந்தார்கள். அவர்களும் வந்திருந்தார்கள். ஏப்ரல் மாதத்தில் இந்தக் கமிட்டி மீண் டும் கூடப் போகிறது. அப்பொழுது சாட்சியங்கள் எல்லாவற்றையும் வைத் துக் கொண்டு ரிப்போர்ட் அனுப்ப வேண்டும். மறுபடியும் சட்டசபை கூடும் போது, ஜூலை, செப்டம்பர் மாதத்திற்குள் வரும். அரசியல் கண்ணோட் டத்துடன் பார்க்கக் கூடாது. டைமிங் செய்கிறார்கள் என்று சொன்னார்கள். அவர் சொன்ன பிற்பாடுதான் எனக்கு அது தெரிய வந்தது. எபபொழுதுமே, ஒன்று ஒரு சாராருக்கு அனுகூலமாயிருந்தால், அது இன்னொரு சாராருக்குப் பிரதிகூலமாயிருக்கும்.

1-30 p.m. கனம் கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள். இந்த நிலச்சீர்திருத்தச் சட்டம் வந்ததின் பின்னால் அனேகம் பேர்கள் தங்கள் நிலத்தைப் பிரித்துக் கொண்டார்கள் என்று. இதனால் நம்முடைய கொள்கை ஒன்றும் போய்விட வில்லை. இதில் நம்முடைய முக்கியமான கொள்கை, ஒருவரிடத்திலே நிலம் குவிந்திருக்கக் கூடாது என்பது தான். 'கான்ஸென்ட்ரேஷனாக' ஒருவரிடத் திலே 500 ஏக்கர்கள், 1,000 ஏக்கர்கள் என்றிருக்கக்கூட து என்பதுதான்....

Sri M. KALYANASUNDARAM : 'கான்ஸென்ட்ரேஷன்' அப்படியே இருக்கிறது, பத்திரம் தான் மாறிக் கொண்டிருக்கிறது.

The Hon. Sri M. A. MANICKAVELU : பத்திரம் மாறுவது மட்டு மல்ல, ஆளும் மாறிக் கொண்டிருக்கிறது. ஜனநாயகத்தில் அப்படித்தான் இருக்க முடியும். ஏப்ரல் மாதம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்தோம், அதன் பின்னால் யாராவது துஷ்பிரயோகம் செய்திருந்தால் அது செல்லுபடி யாகாது என்று சொல்லியிருக்கிறோம். நமது அடுத்த மாகாணமாகிய ஆந்திராவில் இதே போன்று ஒரு மசோதா கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இந்த மசோதா கொண்டு வந்து சட்டமாக ஆக்கப்பட்ட தின் பின்னால் தான் எல்லா விதிகளும் செல்லுபடியாகும் என்று சொல்லி இருக்கிறார்கள். இந்த மசோதா கொண்டு வந்த தினத்திலிருந்தே செல்லுபடியாகும் என்று சொல்லியிருக்கிறோம். ஓரளவுக்கு நாம் அட் வான்ஸாக இருக்கிறோம் அவர்களைவிட. ஆகவே ஏதோ பிரிவினை நடந்து கொண்டிருக்கிறது என்று சொல்லுவதால் எந்தவிதமான பாதகமும்

18th March 1961] [Sri M. A. Manickavelu]

ஏற்பட்டு விடாது. நம்முடைய எண்ணம் நிலம் ஒரே நபரிடத்தில் குவிந்து இருக்கக் கூடாது என்பது தான், நிலம் பரவலாக இருக்க வேண்டும் என்பது தான். ஆகவே இப்போது நடந்துக் கொண்டிருப்பதைப்பற்றி யாரும் கவலைப்பட்டுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

கனம் அண்ணாமலை அவர்கள், சாகுபடியாளர் சட்டத்தைப்பற்றி சொன்னார்கள், அதிகாரிகள் ஒருவருக்குமே இந்தச் சட்டத்தைப்பற்றி தெரியவில்லை என்றும், தானே ஒரு அதிகாரிக்குப் புத்தகம் கொண்டு கொடுத்ததாகவும் சொன்னார். அப்படிப் புத்தகம் கொடுத்திருப்பதால் அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்லிவிட முடியாது. என்னிடத்தில் புத்தகம் இல்லை என்றால் எதிர்ப் பக்கத்திலுள்ளவர்களிடமிருந்து புத்தகத்தை எடுத்துக் கொள்கிறேன். கோர்ட்டில் கூட ஜட்ஜ் வக்கீல்களிடமிருந்து புத்தகத்தை வாங்கிக் கொள்ளுவார், அதே போல் வக்கீல்களும் ஜட்ஜ்களிடமிருந்து புத்தகத்தை வாங்கிக் கொள்ளுவார். இதனால் பெரிய தவறு ஒன்றுமில்லை. ஏதோ சில விதிகளில் சில அதிகாரிகளுக்குத் தெரியாமல் இருக்கலாம். எல்லா அதிகாரிகளுக்கும் எல்லாம் தெரிந்திருக்கும் என்று எண்ணி விட முடியாது. அதற்காக மொத்தமாக அதிகாரிகளுக்கு ஒன்றுமே தெரியாது, எல்லோரும், 'மட சாம்பிராணிகள்' என்று சொல்லுவார்களே அதுபோல் இருக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. (சிரிப்பு). நிலச் சீர்திருத்தச் சட்டம் வருவதற்குக் காலதாமதம் ஆகும் என்று எண்ணித்தான் சாகுபடியாளர்களுடைய நன்மையைக் கருதி, தஞ்சாவூர் பண்ணையாள் சட்டம், சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம், நியாய வாரச் சட்டம், கையேர், மாட்டேர் வாரம்தார் சட்டம் இவைகள் எல்லாம் கொண்டு வந்திருக்கிறோம். கையேர், மாட்டேர் வாரம்தார் சட்டம் சம்பந்தமாகச் சிலருக்குத் தப்பபிப்பிராயம் இருந்து வருகிறது. கனம் அண்ணாமலை அவர்கள் தான் கேட்டார்கள் என்று நினைக்கிறேன், மற்ற மாவட்டங்களுக்கும் ஏன் இதை விஸ்தரிக்கக் கூடாது என்று கேட்டார்கள். எல்லா இடத்திலும் இந்த முறை இல்லை. இந்த முறை திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் குளித்தலை, லால்குடி முதலிய இடங்களில் தான் இந்த முறையிருக்கிறது. மற்றபடி ஒன்றிரண்டு இடங்களில் இந்த முறை யிருக்கிறது. ஆகவே இந்தச் சட்டத்தை எல்லா இடத்திற்கும் விஸ்தரிக்க இயலாது. மற்றபடி எல்லா இடங்களிலுள்ளவர்களுக்கும் பாதுகாப்பு வேண்டும் என்பதற்காகத்தான் மூன்று சட்டங்கள் இருக்கின்றன. இதன் மூலம் போதுமான சலுகைகள் எல்லோருக்கும் கிடைத்து வருகிறது. ஃபேர் ரென்டைப் பொறுத்த அளவில், சில இடங்களில் பூமிதார்களுக்கும், சாகுபடியாளர்களுக்கும் முன்னால் இருந்ததைப் போன்றே ஒற்றுமை இருந்து வருகிறது. முன்னால் கொடுத்து வந்தது போலவே, அதாவது 25, 35 சதவிகிதம் விழுக்காடு போக மீதியைக் கொடுத்தால் போதும் என்று அவர்களாகவே வாலன்டியராக முன் வரும்போது இடையிலுள்ளவர்கள் போய் ஏன் தகராறு உண்டு பண்ணவேண்டும் என்றுதான் தெரியவில்லை? அவர்களுக்குள் ஒருமித்த கருத்து இருக்கும்போது மற்றவர்கள் போய் அதில் ஏன் தலையிட வேண்டும்? அவர்களாகவே ஒற்றுமையாய் இருக்கிறார்கள்.

கிராம உத்யோகஸ்தர்களைப் பற்றி இங்கு சொல்லப்பட்டது. இது ஒரு பிரச்னையாகவே இருந்து கொண்டிருக்கிறது. 'ஹார்டி ஆன்வல்' என்ற முறையில் ஒவ்வொரு ஆண்டும் இவர்களுடைய பிரச்னை வருகிறது. இவர்களுக்கு மற்ற முழு நேர ஊழியர்களைப் போன்று சம்பளம் கொடுக்கப்படவில்லை என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். இப்போது ஓரளவுக்குச் சம்பளம் உயர்த்திக் கொடுத்திருக்கிறோம். அதுவே போதும் என்றும் நான் சொல்ல வரவில்லை. அது போதாது என்பதையும் நான் ஒத்துக் கொள்கிறேன். இருந்தாலும் முழு நேர ஊழியர்களாக இல்லாத காரணத்தினால் அவர்கள் 'ஸைட் ஆக்குபேஷன்' வைத்துக் கொள்ளலாம் என்றிருக்கிறது. காண்டிராக்ட் எடுத்துக் கொள்ளலாம், மற்றுமுள்ள தனிப்

பட்ட வேலைகளை எல்லாம் எடுத்துக் கொள்ளலாம் என்றுள்ள சௌகரியம் இருக்கிறது. இருந்தாலும் அவர்களுக்கு இப்போது வேலை அதிகமாக இருக்கிறது. இவர்களுடைய உத்தியோக விவரங்களை நன்றாக விசாரணை செய்து ஒரு கமிட்டியார் இவர்களை முழு நேர ஊழியர்களாக அமர்த்துவது தான் நல்லது என்று ரிப்போர்ட் தந்திருக்கிறார்கள். சமீபத்தில் இவர்கள் சம்பந்தமாக சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக் கொடுத்திருக்கிறது. இவர்களுக்குப் பரம்பரை பாத்தியதை செல்லாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. கோர்ட் தீர்ப்புப் பிரகாரம் பரம்பரை பாத்தியதையாக இது செல்லுபடியாகாது என்று வருகிறது. ஆகவே இதைப்பற்றி ஒரு முடிவு சீக்கிரமாகவே செய்ய வேண்டும். இதற்கிடையில் பஞ்சாயத் யூனியன் அமைப்பு வந்தது. இதற்கிடையில் நயா பைசாக் குழப்பம் வந்தது, அதன் பின்னால் மெட்ரிக் குழப்பம் வந்தது, இப்படி எல்லாமே ஒரே குழப்பமாக இருந்தது. . . . (ஸ்ரீ எம். கலியாணசுந்தரம் : உங்களுக்கே குழப்பமா) ஆமாம், எங்களுக்கே குழப்பம் தான், இது எல்லோருக்கும் ஏற்படக்கூடிய குழப்பம் தான், 'டிரான்ஸிஷனல் ஸ்டேஜ்' சமயத்தில் இம்மாதிரிக் குழப்பம் ஏற்படத் தான் செய்யும். ஆகவே இப்போது வந்திருக்கின்ற ஜட்ஜ்மென்ட் அடிப்படையில் கொஞ்சம் தீவிரமாக இதைப்பற்றி அவசரமாகவே கவனித்து முடிவு எடுக்கப்படும்.

பஞ்ச நிவாரண வேலையைப்பற்றி (ஃபாமின் ரிலீப்) சில கருத்துக்கள் சொல்லப்பட்டன. எங்கெங்கு எல்லாம் அவசியம் என்று சர்க்கார் கருதுகிறதோ அந்த இடங்களுக்கு எல்லாம் சர்க்கார் கொடுத்து உதவுகிறது. கனம் அண்ணாமலை அவர்கள் சொன்னார்கள், உங்கள் தொகுதியில் மட்டும் உதவி கிடைத்திருக்கிறது, என் தொகுதியில் ஒன்றும் கிடைக்கவில்லையே என்று. உண்மையாகவே எங்கே பாதிக்கப்பட்டிருக்கிறதோ அந்த இடத்திற்கு உதவி கிடைக்கும். இதில் என் தொகுதி உன் தொகுதி என்று கணக்கெடுப்பதில்லை. திருநெல்வேலிக்கு 10 லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது, இன்னொரு இடத்திற்கு 2 லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது, இன்னொரு இடத்திற்கு 3 லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. திருவண்ணாமலையில் செங்கம் தாலூகா பாதிக்கப்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். அது அவ்வளவாகப் பாதிக்கப்படவில்லை, எங்கும் சாதாரணமாக ஏற்பட்டிருப்பது போல் தான் அங்கும் ஏற்பட்டிருக்கிறது. என் தொகுதியில் உதவி கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னால் மந்திரிகளுடைய துரதிருஷ்டமோ என்னவோ எங்கள் பகுதியில் பாதகம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே மந்திரிகளுடைய தொகுதியில் தான் அதிகமாகச் செலவுச் செய்யப்படுகிறது என்று சொல்வது சரியல்ல, நிலைமை எப்படியிருக்கிறதோ அதற்குத் தகுந்தாற்போல் உதவி அளிக்கப்பட்டு வருகிறது. போளூரில் சூழ் நிலை சாதாரணமாகத் தான் இருக்கிறது என்று அதிகாரிகள் ரிப்போர்ட் கொடுத்திருக்கிறார்கள். . . . .

DEPUTY SPEAKER: We can sit for some more time. I think we can sit till 1-40 or 1-45 p.m.

THE HON. SRI M. A. MANICKAVELU: . . . "Landless poor people who are likely to engage themselves in direct cultivation."

DEPUTY SPEAKER: I think the Hon. Minister need not discuss about Famine as there is a separate Demand, viz., Demand XXX- Famine which we will be considering separately.

THE HON. SRI M. A. MANICKAVELU: I am not discussing Famine as such. I had to refer to it when the Administration was criticised by the hon. Members in the matter of executing the

மேலும், மதுரை அங்கத்தினர் அவர்கள், 'ஒரே நாளில் 1,000 கேள்விகள் வரை கொடுத்திருக்கிறேன், பல மனுக்களைப்பற்றி கேட்டு' என்று சொன்னார்கள். இப்படி யிருந்தால் கொடுத்திருப்பதில் கூடுதலும் 'அவுட் ஆப் ஆர்டர்' ஆகிவிட்டதாகக் கேள்விப்படுகிறேன். ஜில்லாவில்கூட இவ் விதம் 800 மனுக்கள் கொடுத்திருக்கிறேன் என்றெல்லாம் சொன்னார்கள். எவ்வளவுதான் கொடுத்தாலும் அதிகாரிகள் ஒவ்வொன்றையும் பரிசீலனை செய்து பார்த்துத்தான் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். ஏதோ திரு. தியாகராஜன் அவர்களுடைய எஸ்டேட்டில் நடவடிக்கை எடுத்து விட்டார்கள் என்று சொன்னார்கள். யார் யாருடையது என்றெல்லாம் பார்த்து நடவடிக்கை எடுக்க முடியாது. கோர்ட்டில் வரும்போது தான் விவரங்கள் எல்லாம் தெரிகிறது. "நேச்சர் ஆப் ஸிவில் ரைட்ஸ்" என்று சொல்வது போல் ஒவ்வொருவருக்கும் ஓர் உரிமை இருக்கிறது. கனம் தியாகராஜனுடைய விஷயம் இது என்பது பின்னால் பேப்பர் பார்த்த பிறகு தான் தெரிய வந்தது. அது வரை யாருக்குச் சொந்தம் என்றே தெரியாது. ஆகவே இந்த மாதிரியான குற்றச் சாட்டு சொல்ல வேண்டிய அவசியமில்லை. மற்றப்படி மெரிட்ஸிலே ஏதாவது தவறு என்று சொன்னால் அதைப் பரிசீலனை செய்து பார்க்கிறோம்—அதில் ஒன்றும் ஆட்சேபணையில்லை. ஏதாவது பிசகாக இருந்தால் தாராளமாகச் சொல்ல லாம். பொதுவாக எழுதிவிட்டு, ஆயிரம் கேள்வி, நாலாயிரம் கேள்வி என்று இல்லாமல் பொறுக்காகக் கவனிக்கக் வேண்டுமென்று சொன்னால் பரிசீலனை செய்யலாம்.

பப்ளிஸிட்டி பற்றிச் சொன்னார்கள். ஏழு லட்சம் ரூபாய் இருக்கிறதே என்று சொன்னார்கள். அது பொது பப்ளிஸிட்டி. இப்போது நிறைய டெவலப்மென்ட் ஸ்கீம்ஸ் செய்கிறோம். பஞ்சாயத்து யூனியன் வந்தபோது ப்ரிண்ட் பண்ண வேண்டியிருந்தது. ஜனங்கள் எல்லாவற்றையும் புரிந்து கொள்ள வேண்டும். பேசாமல் இருந்தால் ஜனங்கள் புரிந்து கொள்ள வில்லையே என்று சொல்லுகிறார்கள். புரிந்துகொள்ள வழி செய்தால் என் இவ்வளவு செலவு என்று கேட்கிறார்கள். ஆக அதற்குத்தான் இந்த பப்ளிஸிட்டி தேவையாக இருக்கிறது.

மின்சார விசிறி பற்றி சொன்னார்கள். கொடுக்கக் கூடாதா என்று கேட்டார்கள்? செலவைக் குறைக்க வேண்டி யிருக்கிறது. ஆனால் இப்போது பெரிய அதிகாரியிலிருந்து படிப்படியாகக் போட ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். இப்போது உத்திரவு போட்டிருக்கிறோம். ஒரு ஃபேஸ்ட் ப்ரொக்ராமில் எல்லோருக்கும் கிடைக்கும் அடிப்படையில் வந்து கொண்டிருக்கிறது.

அதிகாரிகள் கிராமத்தில் தங்குவதில்லை என்று கனம் சுவாமிக்கண்ணு படையாச்சி அவர்கள் சொன்னார்கள். அவர்கள் ரொம்ப வயதானவர்கள் —அந்தக் காலத்தில் அதிகாரிகள் கிராமத்திலேயே தங்குவார்கள். இப்போது தங்குவார்களா? இல்லை, இப்போது தான் ஜீப் எல்லாம் இருக் கிறது. அதனால் அங்கே தங்க வேண்டிய அவசியம் இல்லை. முன் பெல்லாம் கலெக்டர்களெல்லாம் குதிரைமேல்தான் போவது வழக்கம். ஒவ்வொரு டி.பி.-யிலும் குதிரை லாயங்களைக் கட்டி வைத்திருந்தார்கள். இப்போது கத்திரிக்காய் விற்கக்கூடியவர்களும், தயிர் விற்கக் கூடிய வர்களும், கூட $\frac{1}{2}$ மைல் முக்கால் மைல் நடப்பதில்லை. பஸ்ஸில் ஏறக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது சௌகரியமாக வண்டி வசதி இருப்பதால் வீட்டுக்குத் திரும்பப் பார்ப்பார்களே தவிர கிராமத்தில் உட்கார்ந்து கொண்டு டேரா அடித்துக்கொண்டிருக்க மாட்டார்கள்.

கடலூர் மணியக்காரரைப் பற்றிச் சொன்னார்கள். அந்த மாதிரி இருந் தால் வருந்தத் தக்கதுதான். இதைப்பற்றி வேண்டிய தகவல்களை வாங்கி ஏதாவது பிசகு இருந்தால் கவனிக்கிறேன்.

அப்புறம் ராமநாதபுரம் பகுதியில் போலீஸ்காரரை வைத்து வரி வசூல் செய்கிறோம் என்று சொன்னார்கள். அங்கு ஒரு மணியக்காரரே கொல்லப் பட்டார். அங்கே ஒரு ஸ்டாண்ட்-பை-யாகத் தான் வைத்திருக்கிறோம். இப்படி வைத்துக் கொண்டால் தான் முடியுமே தவிர இருக்கக் கூடிய பழக்க வழக்கத்தில் வரி வசூல் சரியாகவே ஆவதில்லை. அதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. அடிக்கடி மழை இல்லாது போகிறது என்பது ஒரு காரணம். அதைத் தவிர வசூலாகாமல் இருப்பதற்கு வேறு காரணங்களும் இருக்கின்றன. இரண்டு அல்லது 3 கோடி ரூபாய் வரை பாக்கி நின்றது. போலீஸை பந்தோபஸ்து போட்டு வசூல் செய்தோமே தவிர மிரட்டி வசூல் செய்வதற்காக அல்ல. கடலூரில் அவரே ஸூயிஸைட் செய்து கொண்டார்—இங்கே கொல்லப்பட்டிருக்கிறார்—மற்றவர்கள் சேர்ந்து கொன்று விட்டார்கள். கொடுத்த கடனை வசூல் செய்தால் தான் மற்ற வர்களுக்குக் கடன் கொடுக்க முடியும். இல்லாவிட்டால் பணம் லாக்-அப் ஆகி விட்டால் என்ன செய்வது ? ஜப்தி என்றெல்லாம் சொல்லுகிறார்கள். கடைசி பட்சம்தான் ஜப்தி. பழைய காலம் மாதிரி கதவை எடுத்துப் போவது எல்லாம் கிடையாது. நோட்டீஸ் கொடுக்கிறார்கள். வரியைக் கொடுக்காமல் போனால் ஏலம் போடுவோம் என்று நோட்டீஸ் கொடுக் கிறார்கள். நோட்டீஸ்கூட கொடுக்கக் கூடாதா ? கட்டாயம் ஏலம் போடுவது என்பது எப்போது வரும் என்றால் ஒன்றுக்கும் சட்டை செய்யாமல் ரிகால்ஸிட்ரண்ட்டாக இருந்தால் தான். இப்போது ஒரு அரியர், ஒரு கரண்ட் என்ற முறையில் வசூல் செய்ய வேண்டுமென்று போட் டிருக்கிறோம். நான்கு அல்லது ஐந்து வருஷத்திற்கும் சேர்த்து வசூல் செய்வது கஷ்டம். அந்த முறையில் சில இடங்களில் ஒன்றிரண்டு பிசகு கள் இருந்தால் இருக்கலாம். பிசகுகள் இருந்தால் எங்களுக்குத் தெரிவித் தால் பரிகாரம் தேடலாம். பொதுவாகப் போலீஸ் வைத்து வசூல் செய்கிறார்கள், தொந்திரவு செய்கிறார்கள் என்று சொல்லுவது சரியல்ல. மனித வாழ்க்கையில் ஆங்காங்கு தப்பு இருக்கிறது. எக்ஸெப்ஷனிலிருந்து ஜெனராலிட்டிக்குப் போகக் கூடாது.

இன்னும் அநேகம் குறித்து வைத்திருக்கிறேன். அதற்கெல்லாம் பதில் சொல்ல வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. இவ்வளவு கஷ்டப்பட்டு எழுதி வைத்தும் கூட பிரயோசனம் இல்லாமல் போகிறது. எழுதியதைக் வைத்துக் கொண்டு எப்படியெப்படி பரிகாரம் தேடலாமோ அதைக் கவனிக்க லாம். ஸ்டாம்ப் கொடுப்பதைப் பற்றி தாசில்தார், டெபுடி தாசில்தார் இவர்களுக்கு உத்திரவு போட்டிருக்கிறது. அப்படி இருந்தும் கஷ்டம் இருக்கலாம். இதில் என்னாலான பிரயாசைகள் எடுத்துக் கொள்ளுகிறேன்.

இது முக்கியமான மான்யம். எல்லா டிபார்ட்மெண்ட்டும் இந்த டிபார்ட் மெண்டின் மேலே உட்கார்ந்து தான் எல்லா வேலைகளையும் நடத்த வேண்டும். ஆகையால் வெட்டுப் பிரேரணையைக் கொடுத்தவர்கள் அதை வற்புறுத்தாமல், சொல்ல வேண்டியவைகளைச் சொல்லியாகிவிட்டது, நானும் தக்க சமாதானம் சொல்லியிருக்கிறேன், ஆகையால் வெட்டு ஏது மில்லாமல் இந்த மான்யத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri S. M. Annamalai, pressing his Cut Motion?

SRI S. M. ANNAMALAI : Yes, Sir, I am pressing my Cut Motion.

DEPUTY SPEAKER : The question is—

"That the allotment of Rs. 1,01,50,200 under Demand I—Land Revenue Department be reduced by Rs. 100."

18th March 1961]

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 1,01,50,200 under Demand I—Land Revenue Department.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri, V. K. Kothandaraman, pressing his Cut Motion to Demand II—Stamps Administration?

SRI V. K. KOTHANDARAMAN : Yes, Sir, I am pressing my Cut Motion.

DEPUTY SPEAKER : The question is—

' That the allotment of Rs. 27,38,300 under Demand II—Stamps Administration—be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

' That the Government be granted a sum not exceeding Rs. 27,38,300 under Demand —Stamps Administration.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri V. Subbiah, pressing his Cut Motion?

SRI V. SUBBIAH : Yes, Sir. I am pressing my Cut Motion.

DEPUTY SPEAKER : The question is—

' That the allotment of Rs. 4,82,62,200 under Demand XI—District Administration and Miscellaneous—be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

' That the Government be granted a sum not exceeding Rs. 4,82,62,200 under Demand XI—District Administration and Miscellaneous.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The question is—

' That the Government be granted a sum not exceeding Rs. 84,00,000 under Demand XXXVI—Compensation to Zamindars.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER: I put the Cut-motion fo Sri V. K. Kothandaraman to the vote of the House. The question is—

'That the allotment of Rs. 45,69,800 under Demand IV—Registration Department—be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 45,69,800 under Demand IV—Registration Department.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. on Monday, the 20th March 1961.

The House then adjourned.

### III.—PAPER LAID ON THE TABLE ON THE HOUSE.

*A.—Statutory Rules and Orders.*

*Notification issued with G.O. Ms. No. 45, Home, dated 4th February* 1961, *reducing the payment of tax to the Luxury coach MDU*-7463 *belonging to Kodaikanal Motor Union (Private), Limited, Madurai. [Laid on the table of the House under section II* (2) *of Madras Motor Vehicles Taxation Act,* 1931 (*Madras Act III of* 1931).]

*B.—Reports, Notifications and other papers.*

Nil.